

ஹலோ! 'நாமும் மற்றவரைப் போல கார் மற்றும் டூ-வீலர் ஓட்ட வேண்டும், எங்கு கற்பது? யாரிடம் கேட்பது? காஸ்ட்லியாக இருக்குமோ?' என்ற எண்ணம் நம்மிடையே பலருக்கு இருப்பது உண்மைதானே? ஏன் இந்த கூச்சம், தயக்கம்? உங்களுக்காகவே, ஆண், பெண் இருபாலருக்கும் தனித்தனியாக கார் மற்றும் ஸ்கூட்டி, கைனடிக் ஹோண்டா ஆகியவற்றில் டிரைவிங் கற்றுக கொள்ள மேலும் தாமதிக் காமல் உடனே எங்களை அணுகவும். கோடை விடுமுறை யில் ஒரு பயனுள்ள பயிற்சி உங்களுக்காகவே!

**ஹலோ! ஒரு நிமிடம்!**
**நீங்களும் டிரைவிங்**
**கற்கலாமே!**



டீன்ஏஜ் முதல் 50 வயது வரை. **சாண்ட்ரோ, மாருதி,** ஸ்கூட்டி, கைனடிக் ஹோண்டா இவைகள் பெண்களுக்கு மட்டுமல்ல. ஆண்களுக்கும் மிக எளிதாக விரைவில் பயிற்றுவிக்கப்படு கிறது.

இதோ வள்ளி டிரைவிங் ஸ்கூல் உரிமையாளர் திருமதி வள்ளி அவர்களுடன் ஒரு சிறு உரையாடல்:

**நீங்கள் விரைவாக எளிதாகப் பாதுகாப்பாக வாகனங்களை இயக்க கற்றுக் கொடுப்பது எப்படி?**

''முதல் நாள் அவர்களுக்கு மனப்பயிற்சி கொடுப்போம். அதன் மூலம் தன்னம்பிக்கை, உடல் வலு, புரிந்து கொள்ளும் தன்மை அதிகப்படும். பிறகு அவர்கள் இயக்க விரும்பும் வாகனம் பற்றி விளக்குகிறோம். அடுத்ததுதான் அவர்களுக்கு வாகனம் இயக்கக் கற்றுத் தருகிறோம். அவர்களின் மனதைப் பக்குவப்படுத்தி விடுவதால் எளிதாகப் புரிந்து சில நாட்களிலேயே கற்றுக் கொள்கிறார்கள்'' என்கிறார்கள் திருமதி. வள்ளியும் அவரது கணவர் திரு. வள்ளியப்பனும்.

கணவன் – மனைவி இருவரும் ஸ்கூட்டர் ஓட்டக் கற்றுக் கொள்ள வேண்டுமா? கார் ஓட்டக் கற்றுக் கொள்ள வேண்டுமா? நீங்கள் உடனே தயங்காமல் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி

# வள்ளி டிரைவிங் ஸ்கூல்

(அரசு அங்கீகாரம் பெற்றது)



புது எண். 13 (ப.எண்.7) தண்டபாணி தெரு,
தி. நகர், சென்னை - 17.
(பனகல் பார்க் அருகில்,வெங்கட்நாராயணா ரோடு எதிரில்; வேளாங்கன்னி பள்ளி அருகில்)
ஃபோன் : Off : 436 4815 Res : 484 2466
பேஜர் : 9628445790. செல் : 9840043648

அலுவலக நேரம் :
காலை 7.00 மணி முதல் மாலை 7.00 மணி

குறிப்பு : பெண்களுக்குக் கற்றுத்தர பெண் பயிற்சியாளர்கள் உண்டு.

# வட்டமேஜை




✉ அம்மா பற்றி அ.தி.மு.க. எம்.எல்.ஏக்களின்! மினி பேட்டி அருமை. தலைப்பை பார்த்ததும் அரசியல் விஷயம் என நினைத்துப் படிக்காமல், நண்பர்கள் சொல்லி படித்தபின் ஆச்சர்யப்பட்டேன்.

வேலூர் – 1, ஜெகன்ரகு.

✉ "முதல்வரின் 'வீரமுழக்கம்' தற்போது விவேகமற்றது என்பதைத் துணிவுடன் உணர்த்திய தலையங்கம் சூப்பர்!

அயன்புரம், த. சத்தியநாராயணன்

✉ இளம்பிறை எழுதிய "மனமறிந்தும்" எனும் கவிதை மல்லிகைப் பூவாய்ப் பூத்து, எங்கள் மனத்தைக் கொள்ளை கொண்டது.

மும்பை – 16, ரோசி சாமுவேல்.

✉ திருடனுக்குத் தேள் கொட்டியது போல... குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும், விரையொன்று போட்டுச் சுரையொன்று முளைக்காது என்ற மூன்று பழமொழிகளுக்கும் மெகா விளக்கம் தருவது போல இருந்தது, வர்ஷாவின் 'பேனா' சிறுகதை!

மயிலாடுதுறை, சச்சின் சக்திவேல்.

✉ 'தமிழம்' காக்கப்படவேண்டும் என்று முனைப்புடன் செயல்படும் பொன். சத்தியநாதன் பாராட்டப்பட வேண்டியவர். ஆனால் உலகத் தமிழர் அனைவரும் இதற்கு ஒத்துழைப்பு கொடுத்தால்தான் வீழ்ந்து கிடக்கும் தமிழத்தைப் புத்துயிர் கொடுத்து எழுந்து நிற்க வைக்க முடியும்!

சொக்கலிங்கநகர், பி. ராஜேஸ்வரி

✉ அயோத்தி சாமியார்களின் ஃபைவ் ஸ்டார் வாழ்க்கையைப் படித்தபொழுது நானும் ஏன் அங்கு ஒரு சாமியாராகப் போகக் கூடாது என்ற எண்ணம் ஏற்பட்டது!

கும்பகோணம், இல. வெங்கட்ராமன்

✉ பொதுவாக – ஜெயலலிதாவுக்கு கல்கி எதிரி எனும் தப்பபிப்ராயம் பரவலாக உள்ளது – ஹிமாலயத்தவறு. கல்கியைப் போல அம்மையாருக்கு அன்றும் இன்றும் என்றுமே உண்மையான நண்பன் வேறு இருக்கவே முடியாது. உதாரணம் இவ்வாரத் தலையங்கம் (28.4.02). கல்கியின் அறிவுரையை ஏற்று நடந்தால் அம்மையாரின் அரசாங்கம் சிறப்பாக இருக்கும்.

சென்னை-83, பி.ஜி.சேகர்

சாமியாராக ஆசை!

✉ கல்கி 21.4.02 இதழின் கடைசிப் பக்கத்தில் சென்னை தங்கமாளிகை அதிபர் ராஜேந்திரன் பதிமூன்று கோடி ரூபாய்க்கு ஆயுள் காப்பீட்டுக் கழக பாலிஸி எடுத்திருப்பதாக வெளியாகியிருக்கிறது. இது தவறான செய்தி. கடந்த பிப்ரவரியில் ஒரு கோடி ரூபாய்க்கான இரு பாலிஸிகள் அவரது இரு மகன்களின் பெயரில் எடுக்கப்பட்டுள்ளன.

சென்னை - 17, ஆர்.எம். சுப்பையா
நிறுவனச் செயலர்
ஜி.ஆர். தங்க மாளிகை

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

# சீறுகிறார் செங்கோட்டையன்

**"சட்டமன்றத்தில் பதில் சொல்லும் வாய்ப்பில்லாத மத்திய அமைச்சர் முரசொலி மாறனைப் பற்றி முதல்வரும், அமைச்சர்களும் சகட்டுமேனிக்கு குற்றம் சாட்டுவது சரிதானா?" என்று அ.தி.மு.க. தலைமை நிலையச் செயலாளர் செங்கோட்டையனைக் கேட்டோம் :**

சட்டமன்றத்தில் முதல்வரோ மற்ற அமைச்சர்களோ ஆதாரமில்லாமல் ஏதும் பேசவதில்லை. மாறன் விவகாரத்திலும், மக்களுக்குத் தெரிய வேண்டிய விஷயங்களைத்தான் நிதி அமைச்சரும், முதல்வரும் அவையில் தெரிவித்தார்கள். மாறன் அவையில் உறுப்பினராக இல்லை; இல்லாத ஒருவரைப் பற்றிப் பேசக் கூடாது என்று சொல்வது பொருந்தாது. ஏனென்றால் 1996 - 2001 காலகட்டத்தில், சிமெண்ட் விலையை உயர்த்தி, தொழிலதிபர்களின் குழுக் கட்டுப்பாட்டில் விலை நிர்ணயத்தை ஒப்படைத்து, தமிழகத்தில் மட்டும் கொள்ளையடிக்க அனுமதித்தவர் மாறன்தான். மத்தியத் தொழில்துறையைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் மாறன், தம் சொந்த மாநிலத்தில் உயர்த்தி விற்கப்படும் சிமெண்ட் விலையைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வராததற்கு என்ன காரணம்? கூட்டுக் கொள்ளைக்கு அவர் [illegible] என்பது தானே? இதைத்தான் நிதி அமைச்சர் அம்பலப்படுத்தினார்.



மாறன், தம் பெயரிலோ அல்லது தமது சொந்தக்காரர்கள் பெயரிலோ சிமெண்ட் ஆலைகளை வைத்திருப்பார் என்று குழந்தைத்தனமாக நாங்கள் பொய்த் தகவல்கள் தருகிறார்கள் என்பதற்கு இரண்டு உதாரணங்கள் தருகிறேன். "சுப்ரீம் கோர்ட்டில் காவிரி பற்றிய வழக்கை, இந்திராகாந்தியின் மிரட்டல் காரணமாக கலைஞர் வாபஸ் பெற்றார்" என்று வாய் கூசாமல் சொன்னார் ஜெயலலிதா. ஆனால் இரண்டு நிகழ்வுகளுக்கும் இருக்கும் கால வித்தியாசத்தைக் குறிப்பிட்டுக் காட்டியவுடன் "தவறுவது மனித இயல்பு" என்று பல்டி அடித்தார். அது போலவே அன்வர்ராஜா என்ற அமைச்சர், "மதுரையில் நடந்த வெடிகுண்டு விபத்துக்கு ஜெயலலிதாதான் காரணம்" என்று குற்றம் சாட்டியதாக அவையில் சொன்னார். அது போல எந்தக் குற்றச்சாட்டையும் கலைஞர் எப்போதும் சொன்னது கிடையாது. ஆனால் இதே ஜெயலலிதாதான், தமது முந்தைய ஆட்சிக் காலத்தில் தமிழகத்தில் நடைபெற்ற கொள்ளைகளுக்கு மத்திய அரசின் உளவுத் துறை காரணம் என்று அவதூறு கூறி, அது அன்றைய தினத்தில் அவைக் குறிப்பிலும் பதிவாகி இருக்கிறது. இப்படிப்பட்ட தடாலடிகளைப் பதிவு செய்யும் சபாநாயகர், நாங்கள் எழுந்து உண்மையை விளக்கும்போது மட்டும் அனுமதி மறுக்கிறார். ஆவேசம் கொள்கிறார்.

**ஆவேசமாகப் பேசியதால் கூட்டத் தொடர் முழுதும் சஸ்பெண்ட் செய்யப்பட்டிருக்கிறார் பரிதி இளம் வழுதி. "சட்டசபையின் ஸீனியர் உறுப்பினர் நீங்கள்; அது தவிர துணை சபாநாயகராகவும் இருந்திருக்கிறீர்கள். நீங்கள் சபையின் கண்ணியத்தைக் குலைக்கலாமா?" என்று பரிதியிடம் கேட்டோம்.**

"சட்டமன்றத்தில் ஆதாரமில்லாமல் குற்றச்சாட்டுக்கள் அடுக்கப்படுகின்றன. பதில் சொல்ல எழுந்தால் அனுமதி கொடுக்காமல் அவையை விட்டு வெளியேற்றும் அடாவடித்தனம்! இவர்கள் எப்படிப்

**"மாமன், மச்சான், தகர டப்பா, கிழிந்த ஜிப்பா என்று பேச அனுமதிக்கும் நிலை மரபுக்கு ஏற்றது தானா?"**



நினைக்கவில்லை. ஆனால் பல சிமெண்ட் தொழிலகங்களின் லாபம் எந்த வகையில் அவர் கைக்கு வந்து சேருகிறது என்பது எங்களுக்குத் தெரியும். காலப் போக்கில் எல்லாம் மக்களுக்குத் தெரியவரும். அதனால்தான் பினாமி என்கிறோம்.

இப்போது சிமெண்ட் விலையை மாநில அரசே ஒரு கட்டுப்பாட்டில் கொண்டு வந்து விட்டதே! 130, 140 ரூபாய்க்கு மேல் விற்கப்படும் சிமெண்ட் மூட்டைக்கு வரி போட்டால் விலை வீழ்ச்சியடைந்து விட்டது. தனியார் கஜானாவுக்குச் சென்று கொண்டிருந்த பணத்தை அரசு கஜானாவுக்குத் திசைதிருப்பியவர் முதல்வர். இதை ஏன் தி.மு.க. அரசு செய்யவில்லை? செய்ய மனமில்லை. ஏனென்றால் சிமெண்ட் அதிபர்கள் அடித்த கொள்ளையின் ஒரு பகுதி கோபாலபுரத்துக்கல்லவா போயிற்று!

'கோல்ப்' மைதான விவகாரத்திலும் கோல்மால் நடந்திருக்கிறது. காஸ்மோ பாலிடன் கிளப்பிற்குத் தலைவராக இருந்த இந்தியா சிமெண்ட்ஸ் நிறுவன அதிபர் சீனிவாசன், தலைவர் பதவியிலிருந்து தூக்கப்பட்டார். இதற்கு முக்கியக் காரணம் கிளப் மெம்பர்கள். 'கோல்ப் மைதானம் சரியாகப் பராமரிக்கப்படவில்லை' என்று குற்றம்சாட்டியதுதான். ஆனால் தூக்கியடிக்கப்பட்ட சீனிவாசன், கருணாநிதி - மாறன் ஒத்துழைப்பில் அதே மைதானத்தைத் தமிழ்நாடு கோல்ப் பெடரேஷன் என்ற பெயரில் அபகரித்துக் கொண்டார். இது முறைகேடு இல்லையா? இதைத்தான் முதல்வர் அம்பலப் படுத்தினார். இது மக்களுக்குத் தெரிய வேண்டிய விஷயமில்லையா?

அவையில் இல்லாதவர்களைப் பற்றிப் பேசக் கூடாது என்று இன்று பேசும் இவர்கள், தி.மு.க. ஆட்சியில் புரட்சித் தலைவியைப் பற்றி என்னென்ன பேசினார்கள்?

> "பல சிமெண்ட் ஆலைகளின் லாபம் எப்படி அவர் கைக்கு வந்து சேர்கிறது என்பது தெரியும்."

# பாய்கிறார் பரிதி!



அவையில் இல்லாதவர்களைப் பற்றிப் பேசக்கூடாது என்பது ஒரு உயர்ந்த பட்ச மரபு. ஆனால் மத்திய அமைச்சர் மாறனைப் பற்றி இவர்கள் அவிழ்த்து விடும் புளுகு மூட்டைகள் பதிவாகின்றன. அவையின் புனிதத்தைப் பாதுகாப்பாக எடுத்துக் கொண்டு சவால் விடுகிறார்கள். இவர்களில் யாருக்காவது தைரியம் இருந்தால் வெளியே வந்து பொது மேடைகளில் தங்கள் 'தைரியத்தை'க் காண்பிப்பார்களா? ''உங்கள் குற்றச்சாட்டை நிருபித்தால் அரசியலை விட்டே விலகத் தயார்'' என்று அமைச்சர் மாறன் பதிலடி கொடுத்ததும் பதுங்குகிறார்கள்.

நான் ஆபாசமாகப் பேசுவதால் சஸ்பெண்ட் செய்யப்பட்டதாகச் சொல்கிறார்கள். ஓர் உறுப்பினரைப் பார்த்து 'உங்கள் தகுதி எனக்குத் தெரியும் என்று சபாநாயகர் கூறுவது எந்த விதத்தில் சரி?' அவையில் 'மாமன்-மச்சான்', 'தகர டப்பா, கிழிந்த ஜிப்பா' என்று பேச அனுமதிக்கும் நிலை மரபுக்கு ஏற்றதுதானா?

அழகு தமிழை அருவெறுக்கத்தக்க அளவில் ஆபாசத் தமிழாக தமிழகமெங்கும் மேடைகளில் முழங்கியது யார் என்று நமக்குத் தெரியுமே! இன்று, அரசியல் ஆதாயங்களை எதிர்பார்த்து நடுநிலை தவறிச் செயல்படும் நிலையானது ஜனநாயகத்துக்குக் கேடு விளைவிக்கும் செயலாகும். மாற்று முகாமில் இருக்கும்போது எதிரணித் தலைவர்களைப் பற்றி மேடைதோறும் தரம் பார்க்காமல் முழங்குவதும் பின்னர் எதிரணிக்குக் கட்சி தாவும்போது 'இறைவா' என்று காலில் விழுந்து மன்னிப்பு கேட்பதும் யாருடைய தடுமாற்றம் என்பது தமிழக மக்களுக்கு நன்றாகத் தெரியுமே!

சந்திப்பு: ப்ரியன்
படம்: ராஜன்

# மாதவன் கையில் உருட்டுக்கட்டை!



ரவுண்ட்ஸ்பாய்

அடுத்த படம் பற்றிய அறிவிப்பு கூட இல்லாமல் காதும் காதும் வைத்த மாதிரி 'ராஜா' படத்தில் நடித்துக் கொண்டிருக்கிறார் அஜித். அதுவும் வடிவேலுவை வலதுகரமாக வைத்துக் கொண்டு முழு நீள காமெடி ரோலில்! காதல், ஆக்ஷன், மேக்-அப் எக்ஸ்பெரிமெண்ட் என்று வேறுபாடு காட்டிக் கொண்டிருந்த அஜித்துக்குக் காமெடி பண்ண வருமா? "ஆரம்பத்தில் எனக்கும் இப்படியொரு சந்தேகம் இருந்தது. ஆனால் மனிதர் அசத்தி விட்டார். படப்பிடிப்பில் யூனிட்டே விழுந்து விழுந்து சிரித்தது என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்" என்றார் வாசன் இல்லத்தில் இறுதிக்கட்ட படப்பிடிப்பில் இருந்த இயக்குனர் எழில்.





• ராஜா

நந்தாவுக்குப் பிறகு எக்குத்தப்பு நாயகனாகி விட்ட சூர்யாவின் நடிப்பில் அடுத்து வெளிவரப் போவது 'ஸ்ரீ' படமா? இல்லை விக்கிரமன் இயக்கி வரும் 'உன்னை நினைத்து' படமா? என்பதில் பெரிய போட்டியே நடந்து கொண்டிருக்கிறது.

'உன்னை நினைத்து' படத்தை உடனடியாக வெளியிட்டுவிட வேண்டும் என்பதில் தீவிரமாக இருக்கும் படக்குழு, பாடல் காட்சிகள் மட்டும்தான் பாக்கி என்ற நிலையில் உள்நாட்டிலும் வெளிநாட்டிலுமாகச் சுட்டுத் தள்ளிக் கொண்டிருக்கிறார்களாம். பிரபாகரன் பிரஸ்மீட்டிற்குப் பிறகு இலங்கையில் கொஞ்சம் சுமுகமான சூழ்நிலை வந்திருப்பதைப் பயன்படுத்திக் கொண்டு, கண்டிக்குப் பறந்து போய் ஒரு பாடலைப் படம்பிடித்துத் திரும்பியிருக்கிறார்கள். 'நந்தா' நாயகனை நேரில் பார்த்த இலங்கைத் தமிழர்கள், வாஞ்சையோடு வந்து வந்து கை குலுக்கியதில் சூர்யாவின் கையில் கலுக்காமே!



ரவுடிக் கதைகளின் சீஸன் ஒரு வழியாக முடிந்து தமிழ் சினிமா இப்போது 'இளமைக் கூட்டணி' காய்ச்சலில் வகையாக மாட்டிக் கொண்டிருக்கிறது. ஒரு மேநிலைப் பள்ளி அல்லது கல்லூரி. அதில் ஒரு தேவதை! ஐந்தாறு ராஜகுமாரன்கள். காதலுமில்லாமல், நட்புமில்லாமல் இவர்கள் பரஸ்பரம் காட்டிக் கொள்கிற அன்பும், பாசமும், அடிக்கிற லூட்டியும்தான் கதைக் களம். 'சேது' படத் தயாரிப்பாளர் கந்தசாமி தயாரிக்கும் 'கும்மாளம்', கசிகணேசன் இயக்கும் 'பெப்சி', ஷங்கரின் 'பாய்ஸ்', அகத்தியன் மீண்டு(ம்) வரும் 'காதல் சாம்ராஜ்யம்', ப்ரியதர்ஷன் இயக்கும் 'கண்மணி நீ வரக் காத்திருந்தேன்' என்று இந்த இளமைக் கூட்டணி படங்களின் பட்டியல் தொடர்கிறது. பாய்ஸ் படப் பூஜையில் அறிமுகமாகிற அத்தனை இளசுகளும் ஆடி, பாடி, மிமிக்ரி செய்து அசத்தியதில், அவர்களை அறிமுகப்படுத்த வந்திருந்த ரஜினி, "நானே பல ஏரியாக்களின் விநியோக உரிமையை வாங்கிக் கொள்ளத் தயார்" என்று சொல்லி ரேட்டை ஏற்றி விட்டார்!

பாய்ஸ் படப் பூஜைக்கு வர நேரமிருந்த ரஜினிக்கு, சிறந்த குடிமகன் விருது பெற்ற விஜய்காந்த் பாராட்டு விழாவுக்கு வர நேரமில்லாதது ஆச்சர்யம்தான் என்று யாரோ சொன்னார்கள்! (நாங்க இல்லீங்க!)

மிடில் கிளாஸ் குடும்பப் பின்னணியில் அண்ணன் தம்பி கூட்டுக் குடும்ப வாழ்க்கையை ஜோராக எடுத்து பாராட்டு வாங்கிய 'ஆனந்தம்' லிங்குசாமி மீண்டும் யதார்த்தமாக ஒரு படம் தருவாரென்று யாராவது எதிர்பார்ப்போடு இருந்தால் அதைக் கொஞ்சம் மாற்றிக் கொள்ளுங்கள்; தனக்கு ஆக்ஷன் படமும் எடுக்கத் தெரியும் என்று காட்டுவதற்காக மாதவன் கையில் உருட்டுக் கட்டையைக் கொடுத்திருக்கிறார் இந்த லிங்கு.

''என்ன இப்படிப் பண்ணிட்டீங்க...? நீங்களும் வன்முறைக்கு வால் பிடிக்கலாமா?'' என்று கேட்டால்... ''படம் பார்த்துட்டுச் சொல்லுங்க; நான் வன்முறைக்கு வால் புடிச்சிருக்கேனா இல்லை வாலை அறுத்திருக்கேனான்னு?'' என்று நறுக்கெனக் கேட்கிறார்... அப்புறம் 'ரன்'னுக்காக மலையாள ஜோதிகா என்று பெயரெடுத்திருக்கிற மீரா ஜாஸ்மின் என்கிற கேரளத்துக் கவிதையை இறக்குமதி செய்திருக்கிறார் இப் படத்துக்காக!

தமிழ் சினிமாவில் இனி, ஹீரோ பஞ்சம் என்று யாரும் புலம்ப முடியாது. நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக தினம் ஒரு புது ஹீரோ. அமுல் பேபிக்கள் மாதிரி அறிமுகமாகிக் கொண்டே இருக்கிறார்கள். இதில் லேட்டஸ்ட், வரவுகளான 'ஜெஸ்' பட நாயகன் அசோக் பற்றியும், ஆல்பம் பட நாயகன் ஆர்யன் ராஜேஷ் பற்றியும் நல்ல டாக்.

சென்னை தி.நகரில், வடக்கு உஸ்மான் சாலையில், புதிதாக ஓர் உணவகம் திறக்கப்பட்டிருக்கிறது. பெயர்: சக்கரைப் பொங்கல். (சர்க்கரை அல்ல சக்கரை!) ஆரம்பித்திருப்பவர்கள், கம்ப்யூட்டர் சாஃப்ட்வேர் துறையில் வேலை பார்த்துக் கொண்டிருந்தவர்களான முரளியும், வெங்கட்டும்.

சக்கரைப் பொங்கலுக்கு ஒரு ஸ்பெஷாலிடி இருக்கிறது. அதை அறிந்தவுடன், அங்கே போய்ச் சாப்பிட விரும்பினார் டாக்டர் ஜெயா ஸ்ரீதர். சர்க்கரைப் பொங்கலையும், வெல்லக் கொழுக்கட்டையையும் சுவைத்தபடி,



# சாஃப்ட்வேர் டு சர்க்கரைப் பொங்கல்!

முரளி, வெங்கட் இருவருடனும் உரையாடினார்.

**டாக்டர் ஜெயா ஸ்ரீதர்:** நம் ஊரின் பாரம்பரிய ஐட்டங்கள்தான் உங்கள் ஹோட்டலில் ஸ்பெஷல் என்று தெரிந்ததும், ஆச்சரியம். பிட்ஸாவுக்கும், தந்தூரி ஐட்டங்களுக்கும்தான் இன்று மக்கள் மத்தியில் பெரும் வரவேற்பு என்கிறபோது, இப்படி ஓர் எண்ணம் உங்களுக்கு ஏன் ஏற்பட்டது? உங்களுடைய மெனு பட்டியலைப் படிக்கிறபோது, நான் என் சிறுவயதில் என் பாட்டியும், அம்மாவும் இந்த மாதிரியான ஐட்டங்களைச் செய்து கொடுத்து, நான் சாப்பிட்டது நினைவுக்கு வருகிறது.

**முரளி:** அடிப்படையில், நானும் சரி, வெங்கட்டும் சரி, சாப்பாட்டுப் ப்ரியர்கள். இரண்டு பேருமே, ஒரே சாஃப்ட்வேர் கம்பெனியில், வேலை பார்த்துக் கொண்டிருந்தோம். நான் மார்க்கெட்டிங் பிரிவில் இருந்தேன். வெங்கட் இஞ்ஜினீயரிங் முடித்தவர் என்பதால் சாஃப்ட்வேர் பிரிவில் இருந்தார். கடந்த சில வருடங்களாகவே, சாஃப்ட்வேர் துறையில் ஒருவித தேக்க நிலை நிலவி வருவதால், இரண்டு பேருமாகச் சேர்ந்து, புதிதாக ஏதாவது செய்ய வேண்டும் என்று திட்டமிட்டு ஓட்டல் துறையைத் தேர்ந்தெடுத்தோம்.

**வெங்கட்:** உணவகம் ஆரம்பிப்பது என்றாலும், நாம் பத்தோடு பதினொன்றாக இருந்துவிடக் கூடாது என்பதில் தீர்மானமாக இருந்தோம். அதில் ஏதாவது ஒரு தனித்தன்மை இருக்க வேண்டும் என்பது எங்கள் இலட்சியம். அது குறித்து பல நாட்கள் யோசித்தபின், நம் பாட்டி நமக்கு ருசியாய்ச் செய்து கொடுத்தவற்றை, நாம் தயாரித்து வழங்கினால் என்ன என்ற ஐடியா வந்தது.

**ஜெயா:** எல்லா ஐட்டங்களும் எப்போதும் கிடைக்குமா?

**முரளி:** இப்போதைக்கு எங்கள் மெனு பட்டியலில் அடை, ஆப்பம், அவல் கேசரி, வெல்லக் கொழுக்கட்டை, பால் கொழுக்கட்டை, பால் பூரிபோளி, அரிசி புட்டு,

அவல்புட்டு, ஒக்காரை, பட்டாணி, வேர்க் கடலை மற்றும் சுண்டல் வகைகள், அவல் புளி உப்புமா, அரிசி உப்புமா, மோர்க்களி, காஞ்சிபுரம் இட்லி, சர்க்கரைப் பொங்கல் என்று எல்லா ஐட்டங்களும் இடம் பெற்றிருந்தாலும், சர்க்கரைப் பொங்கல், எல்லா நாளும், எப்போதும் கிடைக்கும். தினமும் மாலை வெல்லக் கொழுக்கட்டை உண்டு. மற்றபடி காஞ்சிபுரம் இட்லி, அடை, அப்பம், சுண்டல் வகைகளும் தினசரி உண்டு. மற்ற ஐட்டங்கள் மட்டும் வாரத்தில் ஒரு நாள் ஸ்பெஷல் ஐட்டங்களாகக் கிடைக்கும்.




**ஜெயா:** அதெல்லாம் சரி! உணவகத்துக்கு 'சக்கரப் பொங்கல்' என்ற பெயரை எப்படித் தேர்ந்தெடுத்தீர்கள்?"

**முரளி:** அந்த பவன்... இந்த பவன்.. என்று வழக்கமான பெயர் வைக்கக் கூடாது என்பதில் இரண்டு பேரும் தீர்மானமாக இருந்தோம். பாரம்பரிய ஐட்டங்கள் கிடைக்கும் என்பதைப் பெயரே எடுத்துச் சொல்ல வேண்டும் என்று விரும்பினோம். அப்போதுதான் இனிப்பான சர்க்கரைப் பொங்கல் நினைவுக்கு வந்தது. சர்க்கரைப் பொங்கல் என்று இலக்கண சுத்தமாக இல்லாமல், பேச்சு வழக்குப் பெயராக இருந்தால் சட்டென்று கவரும் என்று நினைத்தோம். சக்கரப் பொங்கல் என்று பெயர் வைத்து விட்டோம். 'நாக்கூறும் நா கூறும்' என்பது எங்களது ஸ்லோகன்!

**ஜெயா:** இதுபோன்ற ஐட்டங்களை, வீட்டுச் சுவை மாறாமல், செய்வதற்குச் சரியான குக் கிடைப்பது எளிதாக இருந்ததா?

**வெங்கட்:** ஒரு நல்ல 'குக்'கால், எந்த ஐட்டத்தையும் அதற்குரிய சுவையுடன் செய்துவிட முடியும். ஆனாலும், கொழுக்கட்டை மட்டும் தினமும் என் வீட்டில் செய்து எடுத்துக் கொண்டு வருகிறோம். என் மனைவிதான் கொழுக்கட்டை செய்து கொடுக்கிறார். கொழுக்கட்டைக்குத் தினமும் டிமாண்டு. ஆனால் அந்த அளவுக்கு சப்ளை செய்ய முடியவில்லை.

**முரளி:** எதையுமே முறைப்படிதான் செய்கிறோம். நாங்கள் தேங்காய், எலுமிச்சை சேவைகள் செய்வதற்குரிய சேவை நாழி உபகரணம் ஒரு நாள் உடைந்து விட்டது. புதியது வாங்கிவர இரண்டு நாட்களாகி விட்டது. அந்த இரண்டு நாட்களும், திடீர் சேவையைக் கொடுத்து நாங்கள் சமாளிக்கவில்லை. மாறாக, அந்த சேவை இல்லை என்று சொல்லி விட்டோம்.

**ஜெயா:** பொதுமக்களிடத்திலிருந்து ரெஸ்பான்ஸ் எப்படி இருக்கிறது?

**முரளி:** வெரிகுட் ரெஸ்பான்ஸ்! வருகிறவர்கள், மறுபடி மறுபடி வர ஆரம்பித்திருக்கிறார்கள். ஒவ்வொரு ஐட்டத்தையும் சாப்பிட்டுவிட்டு, ருசியை ரொம்ப பாராட்டுகிறார்கள். இந்த ஓட்டலை ஆரம்பிக்கும் முன்பு பல ஓட்டல்காரர்களிடமும், பொது மக்களிடமும் ஒரு சர்வே எடுத்துப் பார்த்தோம். அதன் மூலம் நாங்கள் சில முக்கியமான விஷயங்களைத் தெரிந்து கொண்டோம். சுத்தமான சூழ்நிலையில் ஐட்டங்கள் தயாரிக்கப்படவேண்டும்; சாப்பிடுகிற இடம் சுகாதாரத்துடன் பராமரிக்கப்பட வேண்டும். ஐட்டங்கள் வாய்க்கு ருசியாக இருக்க வேண்டும். சர்வீஸ் சுறுசுறுப்பாக இருக்க வேண்டும். இவையெல்லாம் இருக்கும் பட்சத்தில், விலை சற்று கூடுதலாக இருந்தால் கூட அதை மக்கள் பொருட்படுத்துவதில்லை.

ஒரு பள்ளிக்கூட டீச்சர் இங்கே சாப்பிட வந்திருந்தார். அவருக்கு இங்கே சாப்பிட்ட ஐட்டங்கள் ரொம்பப் பிடித்துவிட, பாராட்டித் தள்ளிவிட்டார். அத்துடன் நிற்காமல், அடுத்த சில நாட்களில், தங்கள் பள்ளிக்

கூடத்தில் ரிடையர் ஆகிற இரண்டு டீச்சர்களின் பிரிவு உபசார நிகழ்ச்சிக்கு நூற்றைம்பது பேருக்குக் கொழுக்கட்டையும் எலுமிச்சை சேவையும் சப்ளை செய்ய ஆர்டரும் கொடுத்து விட்டார்கள். இது போல, தங்கள் வீட்டு விசேஷங்களுக்கு ஆர்டர் தருபவர்களும் இருக்கிறார்கள்.

இருந்தாலும்கூட, நாங்கள், விலை விஷயத்தில் ஜாக்கிரதை உணர்வோடு குறைத்துதான் வைத்திருக்கிறோம். முழுமையான ஒரு அளவுச் சாப்பாட்டின் விலை பத்தொன்பது ரூபாய்தான். (ஆம்! மதிய நேரத்தில் சாப்பாடு உண்டு.)

**ஜெயா:** பாரம்பரிய ஐட்டங்களோடு நிறுத்திக் கொண்டு விடாமல், வட இந்திய ஐட்டங்களையும் விற்பதற்கு என்ன காரணம்?

**வெங்கட்:** நாங்கள், படிப்படியாக முன்னேற விரும்புகிறோம். பெரிய அளவில் விளம்பரங்கள் செய்வதைவிட, வாய் மூலம் விஷயம் பரவி, வாடிக்கையாளர்களைக் கவருவதுதான் பெட்டர் என நினைக்கிறோம். வெறும் மோர்க்களி, அரிசி உப்புமா என்று மட்டும் போட்டுக் கொண்டிருந்தால், பிஸினஸ் நடக்க வேண்டுமே! அதுவுமில்லாமல், நாலைந்து பேர் கொண்ட ஒரு குடும்பம் சாப்பிட வந்தால், பெரியவர்களுக்குப் பாரம்பரிய ஐட்டம் பிடித்தால், இளைய தலைமுறையினருக்கு தந்தூரி ஐட்டங்கள் தானே பிடிக்கிறது. அவர்கள் தேவையையும் கவனிக்க வேண்டுமல்லவா?

**ஜெயா:** நான் உங்களுக்கு ஒரு ஆலோசனை சொல்லட்டுமா? இங்கே கிடைக்கும் பழைய பாரம்பரிய ஐட்டங்களுக்கு ஏற்ப, இந்த இடத்துக்கு இன்டீரியர் டெகரேஷன் செய்யலாம். ஆங்காங்கே பாரம்பரிய சமையல் உபகரணங்களை ஷோகேஸ்போல வைக்கலாம். தவிர, நம் கலாசாரம், பண்பாடு, பாரம்பரியம் இவற்றைப் பேணிக் காக்கவும், வளர்க்கவும் தட்சிண சித்ரா, இன்டாக் போன்று சில அமைப்புகள் இயங்கி வருகின்றன. அவர்களுடன் ஒருங்கிணைந்து, பண்டைய உணவு முறை குறித்து விளக்கக் குறிப்புகளை வண்ணமடல்களாகத் தயாரித்து, நம் ஊருக்கு வரும் உள்நாட்டு, அயல்நாட்டு டூரிஸ்ட்களுக்கு வழங்கச் செய்யலாம். நம் உணவின் ருசி தேடி அவர்களை சக்கரைப் பொங்கலுக்கு வரவழைக்கலாம்.

**முரளி, வெங்கட்:** உங்கள் ஆலோசனைக்கு நன்றி.

**ஜெயா:** நான் சாப்பிட்ட சர்க்கரைப் பொங்கலும், கொழுக்கட்டையும் ஏ ஒன். என் அப்பா (ஜெமினி கணேசன்)வை அழைத்துக் கொண்டு ஒரு தடவை வருகிறேன். அவர் ரொம்ப ரசித்துச் சாப்பிடுவார்.

— **மௌலி**

அட்டை, வண்ணப் படங்கள் : **யோகா**

Stars are made every Friday and die the next Friday என்பது இன்றைய சூழ்நிலை. ஆனால் தேவிகா போன்றவர்கள் நிலைத்து நின்றார்கள் நெடுங்காலத்துக்கு. அவருடைய மரணத்தை சன் நியூசில் பார்த்தபோது, 'சொன்னது நீதானா', 'அமைதியான நதியினிலே ஓடம்', 'பனியில்லாத மார்கழியா' முதலான அற்புத மான காட்சிகளில் அவர் அருமையாக நடித் தது அடுக்கடுக்காக நினைவு வந்து மனசை உருக்கியது.

அருகில் விம்மி விம்மி அழும் அந்த 'இளை ஞர்' யார்? முதலில் தெரியவில்லை. ஒட்ட வெட்டிய கிராப்பும், கட்டம் போட்ட டீ ஷர்ட்டுமாக இருந்த அவரை, அஞ்சலி செலுத்துவதற்கு வந்த ஜெமினி கணேசன் மார்போடணைத்து ஆறுதல் கூறியபோதுதான் தெரிந்தது - மகள் கனகா என்று.

தன்னைப் போலவே மகளும் பெயரும் புகழும் கொண்ட நடிகையாக வர வேண்டு மென்று கனவு கண்டார் அந்தத் தாய். கனவு நிறைவேறாமலே காலமாகிவிட்டார், பாவம்.







இந்திராகாந்தி காலம் தொட்டு இந்தியா வின் உற்ற நண்பராக விளங்கி வருபவர் பாலஸ் தீன அதிபர் யாசர் அராபத். சோதனையான சமயங்களில் நமக்குக் கை கொடுத்து வந் திருக்கிறார். ஆகவே அவரைப் பற்றிக் குறை சொல்லக் கூடாதுதான். இருந்தாலும் சொல்ல வேண்டியிருக்கிறது.

இருபது நாட்களுக்கு மேலாக ரொமெல்லா அரண்மனைக்குள் இஸ்ரேலியரால் சிறைப் பட்டு அவதியுற்ற மனிதர், உலக நாடுகளின் வற்புறுத்தல் காரணமாக ஒரு வழியாய் விடு தலை பெற்றார். அப்படியிருக்க, வெளியே வந்ததும் கொடுத்த பேட்டி யில், யாரும் தமக் காக எதுவும் செய்ய வில்லை என்று பொரிந்து தள்ளி னார். எல்லாரும் மௌனமாக வேடிக்கை பார்த்துக் கொண்டிருந் தார்கள் என்று வெடித்தார். When you are abroad you are a statesman; when you are at home you are just a politician.

கின்னஸ் சாதனைகள் (ஏஎக்ஸென்)

# யார் அந்த இளைஞர்?

ரிமோட்

சிரிப்பு வரவழைக்கக்கூடிய வேடிக்கைத் துணுக்குகளாக இருக்கும் வரையில் ரசிக்கலாம். ஆனால் –

அந்தக் கருப்பு இனப் பெண்மணி இரண்டு கண் ணாடிக் கோப்பைகளைக் கடித்துக் கடித்து விழுங்கியது பயங்கரம். விழுங்கி யதும் தன் பல்லைக் காட் டிச் சிரித்ததோடு, தொண்டை யில் நின்றிருக்கக் கூடிய மிச்ச சொச்சம் துண்டுகளையும் மார்பை நீவி விட்டுக் கொண்டு வயிற்றுக்குள் இறக்கிக் கொண்டது பயங்கரத்தின்

உச்சம். It made the audience shriek.

துண்டுப் படத்தின் தொடக்கத்தில், 'இதை யாரும் வீட்டில் பரீட்சித்துப் பார்க்க வேண்டாம்' என்று எச்சரிக்கை தந்தார்கள். பரீட்சித்தா! பார்ப்பதா! எந்தப் பைத்தியம் செய்யும்?

சிட்கோ சேட்டின் சட்டினி சாம்பார் துணுக்குகள் சில சமயம் கிளுகிளு; சில சமயம் சவசவ. எனினும் படிக்கவும் பார்க்கவும் தூண்டுபவைதான் எப்போதும். ஃபர்தீனும் அம்ருதாவும் ஆடிப் பாடும் 'இத்னே தூர் இத்னே தூர் கித்னே பாஸ்' காட்சி எட்டு முறை ரீடேக் எடுக்கப்பட்டதாகவும் சரியாக வரவில்லையென்று அம்ருதா அழுது விட்டதாகவும் சிட்கோ சொல்லியது.

அழுதது உண்மையாக இருக்கலாம். ஆனால் காரணம் தான் தப்பு. Gross misinterpretation. ஃபர்தீன், அம்ருதாவின் இடுப்பை வளைத்த வளைசலில், ஒடித்த ஒடிசலில் வலி தாங்காமல் அம்ருதா அழுதிருப்பார்.

அடுத்து அபிஷேக் பச்சனும் கரீஷ்மாவும் ஒரு காட்சிக்கு ஒரு சாதாரணமான காமெனட் அடித்த பின், தான் சொந்தமாக ஒரு believe it or not திரட்டி வருவதாகச் சிட்கோ தெரிவித்தது. அதில் ஒரு தகவல். திகில் படத் திலகமான ஹிட்ச்காக்கிற்கு முட்டை என்றால் பயமாம். (பள்ளிப் படிப்பின்போது நிறைய வாங்கியிருப்பாரோ?)



• இன்ஜமாம்

பத்திரிகைகளில் கோபாவேசமாக அறிக்கைகள் வீசும் பழ. நெடுமாறன் வேறே. வீரபாண்டியனின் 'நேருக்கு நேர்' நிகழ்ச்சியில் கலந்து கொண்ட பழ. நெடுமாறன் வேறே. மிக அமைதியாக, சொல்லும் வார்த்தைகளைச் சீர்படுத்தி, முழுமையான வாக்கியங்களாக அமைத்துக் கொண்டார். Two different faces of the same man! பன்னிரண்டு வருட காலம் சும்மா இருந்த மாநில அரசு, பிரபாகரனைக் கைது செய்து இந்தியாவுக்குக் கொண்டு வருவதில் இப்போது பார்த்து ஆத்திரம் காட்டுவது தவறு என்பது அவருடைய வாதம். ஆனால் பன்னிரண்டு வருட காலம் தலைமறைவாக இருந்துவிட்டு இப்போது தானே பிரபாகரன் வெளியே வந்திருக்கிறார் என்ற எதிரணித் தலைவரின் கேள்விக்கு அவரால் பதில் கூற இயலவில்லை.



## இந்த வார வயிற்றெரிச்சல்:

லாகூரில் நியூஸிலந்துக்கு எதிரான டெஸ்டில் பாகிஸ்தான் 643 ரன் குவித்து, இன்ஜமாம் 329 ரன் எடுத்த அதே தினத்தில், பார்படாஸில் மேற்கிந்தியத் தீவுக்கு எதிராக ஆடிய இந்திய அணி 101 ரன்னில் சுருண்டதோடு, நம்ம சச்சின் 'வாத்து' எடுத்து அவுட்டானார். நினைக்க நினைக்க ஆறவில்லை.

His fan club can hold its meeting in a telephone booth என்று ஒரு அமெரிக்க டென்னிஸ் வீரரைப் பற்றிப் பரிகாசம் செய்தார்கள். நம்முடைய ஒவ்வொரு கிரிக்கெட் வீரருக்கும் அந்தக் கதிதான் என்று தோன்றுகிறது. ○

• கரீஷ்மா






2002 மே 12
சித்ரபானு சித்திரை 29
மலர் : 60
இதழ் : 41

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

## தீர்மானம் தோற்றது; கண்டனம் நிறைவேறியது!

குஜராத் மாநிலத்தின் மறுசீரமைப்புக்கு 150 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. மக்களவையில் நடந்த விவாதத்தின் நிகர விளைவு இந்த ஒதுக்கீடு மட்டுமே!

நொறுங்கி, முகமிழந்து போய்; அச்சத்தில் சுருண்டிருக்கும் மக்களை இந்தப் பணம் மீட்டுவிட முடியாது. முழுத் தொகையில் எந்த அளவு நிஜமாகவே நிவாரணத்துக்கென்று போய்ச் சேரப் போகிறதோ, தெரியாது! அவ்வாறு போய்ச் சேரும் தொகையையும், இதுவரை குஜராத்தில் பகிரங்கமான பாரபட்சத்துடன் நடந்து கொண்ட மோடி அரசு எவ்வாறு பயன்படுத்தும் என்பது மிகப் பெரிய கேள்விக்குறி! அப்படிப்பட்ட அரசும் முதல்வரும் இன்னமும் நீடிக்க அனுமதிக்கப்படுவது நமது நாட்டுக்கே இழுக்கு; மக்களவைப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்த வாக்காளர்களுக்குப் பேரவமானம்.

குஜராத் விஷயத்தில் கைகட்டி வேடிக்கை பார்த்ததற்காக வாஜ்பாய் அரசு பேரில் கொண்டு வரப்பட்ட கண்டனத் தீர்மானம், பெரும்பான்மை ஆதரவு பெறாததால் நிறைவேறவில்லை. ஆனால் இது அரசுக்கு வெறும் கணிதரீதியான வெற்றிதான்.




எதிர்க்கட்சிகள் மட்டுமின்றிக் கூட்டணிக் கட்சிகளும் கூட கண்டனத் தீர்மானத்தை ஆதரித்துப் பேசியிருக்கின்றன. ராம்விலாஸ் பாஸ்வான் அமைச்சர் பொறுப்பிலிருந்து ராஜினாமாவே செய்திருக்கிறார். தேசிய மாநாட்டுக் கட்சித் தலைவரும் இணை அமைச்சருமான ஓமர் அப்துல்லாவும் தீர்மானத்தை எதிர்த்து வோட்டளிக்க விரும்பாமல் விலக விருப்பம் தெரிவித்தார். தெலுங்கு தேச எம்.பிக்களோ பிரதமரை விளாசித் தள்ளிவிட்டு, வாக்கெடுப்பின் போது வெளிநடப்புச் செய்து விட்டார்கள். கண்டனத் தீர்மானத்தை எதிர்த்து வாக்களித்த மம்தா பானர்ஜி கூட, மோடி பதவி விலக வேண்டும் என்று ஆணித்தரமாகப் பேசும் விசித்திரம் அரங்கேறியிருக்கிறது!

ஒருவகையில் நோக்கினால், ஆரோக்கியமான ஜனநாயக மரபுகள் லோக் சபாவில் நிலைநாட்டப்பட்டிருப்பதாகவே கொள்ளலாம். கூட்டணி கட்சிகள் வெறுமே 'ஆமாம் சாமிகளாக' இராமல், எதிர்க்க வேண்டியதை எதிர்த்துள்ளன; அதே சமயம் மத்திய அரசு வீழ்ந்து விடாத வகையில் வாக்கெடுப்பின் போது கவனமாய் நடுநிலை வகித்து விட்டன; அல்லது வெளிநடப்புச் செய்து விட்டன.

ஆரோக்கியமான மரபுகளைக் குழிதோண்டிப் புதைத்திருப்பவர் பிரதமர் வாஜ்பாய்தான்.

'தீர்மானம்' தோற்றாலும் கண்டனம் நிறைவேறியிருக்கிறது என்பது அவருக்குத் தெரியாததல்ல. ஐரோப்பிய யூனியன், அயல்நாடு வாழ் குஜராத்தியர்கள் என்று உலகெங்கும் மோடி அரசை எதிர்த்துக் கண்டனங்கள் எழுந்துள்ளன. இத்தனைக் குப் பிறகும் மோடியின் ராஜினாமாவை அவர் கோரவில்லை. மாறாக, 'நான் இன்னும் கவனமாக இயங்கியிருக்க வேண்டும்' என்று தம்மைத் தாமே நொந்து கொண்டு




புலம்பியிருக்கிறார்! இந்தப் புலம்பலுக்கு என்ன அர்த்தம் என்பது அவருக்கே வெளிச்சம்!

இப்போதும் பிரதமரை இயங்க விடாமல் தடுப்பது எது? மோடியின் ராஜினாமாவைக் கோர அவர் மறுப்பது ஏன்?....

பி.ஜே.பிக்குள்ளேயே இருக்கின்ற எதிர்ப்பும் கட்டுப்பாடுகளும்தான் பிரதமரைச் சிறைவைத்துள்ளன. ஹிந்து அடிப்படைவாதத்துக்குத் தன்னை தாரை வார்த்து விட்டு நிற்கிறது பி.ஜே.பி. அந்தத் தளைகளிலிருந்து விடுபடும் துணிவு பிரதமருக்கு இல்லை. அவ்வாறு விடுபட்டு வந்து மோடியை ராஜினாமா செய்யச் சொன்னால், கட்சிக்குள் சச்சரவுகளும் பிளவும் ஏற்படக்கூடும்; தமது பதவிக்கே அபாயம் வரக்கூடும் என்கிற பயம் வாஜ்பாயைக் கட்டுப்படுத்துவதாக நாம் முடிவுக்கு வரவேண்டியிருக்கிறது.

ராஜ்ய சபாவில் எதிர்க்கட்சிகள் கொண்டு வந்த தீர்மானம் சுலபமாய் நிறைவேறி விடும் என்ற அச்சம் பிரதமரை நிர்ப்பந்தப்படுத்தவே ஒரு அந்தர்பல்டி அடித்து, தீர்மானத்தை அரசு ஏற்றுக் கொள்வதாகவே சொல்லி விட்டார்! அதன் அடிப்படையில் குஜராத் மாநிலத்தில் அமைதியை நிலைநாட்டுவது மத்திய அரசின் பொறுப்பாகிறது. இதற்காக கில் குஜராத் முதல்வருக்கு ஆலோசகராகவும் நியமிக்கப்பட்டுள்ளார்.

இவ்வளவு கீழிறங்கி வந்த பிறகும் குஜராத்தில் நடந்துள்ள தவறுகளுக்கு மாநில அரசும் குறிப்பாக முதல்வரும் பொறுப்பேற்க வேண்டும் என்பதைப் பிரதமர் ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை என்பதுதான் ஆச்சர்யம். குப்புற விழுந்து விட்டாலும் மீசையில் மண் ஒட்டவில்லை என்ற கதைதான்!

# கல்கி வைரவிழா
# தமாஷ் ஹைகூ
# கவிதைப் போட்டி!

தமாஷ் ஹைகூன்னாலும் சும்மா தமாஷுக்கு எழுதிப் போட முடியாதுங்க..!

பாசாங்கில்லாத, உருவகம், உவமையில்லாத நேரடிக் கவிதை... வருணனை, கட்டுப்போட்டாலும் கிடையாது. பிலாசபி போதனை எல்லாம் இல்லை. ஒரு படிமம் அல்லது ஒன்றுடன் ஒன்று உதவும் இரண்டு படிமங்கள். அத்தனைதான். அதிலிருந்து இணைத்து எழும் எண்ணங் கள் வாசகன்பாடு!

- ஹைகூவுக்குச் சுஜாதா வரைந்துள்ள இலக்கணம் இது. பாரம்பரிய ஜப்பானிய மூன்று வரி ஹைகூக்கள் இப்படித்தான் இருக்கும்.

● போட்டிக்கு நீங்கள் அனுப்பும் ஹைகூவும் இப்படித்தான் இருக்க வேண்டும். ஆனால், எண்ணங்களுடன் கூடவே சிரிப்பையும் ஏற்படுத்த வேண்டும். பின்னே முதல் பரிசு ரூ.1000/- என்றால் சும்மாவா! இரண்டாம் (ரூ.750/-), மூன்றாம் (ரூ.500/-), ஆறுதல் பரிசுகளும் (ரூ.250/-) உண்டு.

● சொந்தக் கற்பனை என்பதற்கான உறுதி மொழியுடன் கவிதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15.

● ஒருவர் பல கவிதைகள் அனுப்பலாம். தேர்வாகாத வற்றைத் திருப்பியனுப்ப போதுமான தபால் தலைகள் இணைக்க வேண்டும்.

● முடிவு வெளியாகும்வரை கடிதப் போக்குவரத்து, தொலைபேசி விசாரிப்புகள் கூடாது.

● உறையின் மேல் **'அமரர் கல்கி நினைவுக் கவிதைப் போட்டி 2002'** என்று கட்டாயம் குறிப்பிட்டு

**ஆசிரியர் - கல்கி**
**47, ஜவஹர்லால் நேரு சாலை,**
**சென்னை - 97**

என்ற முகவரிக்கு அனுப்புங்கள். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

நடுவர்கள் நிச்சயிக்கும் போட்டி முடிவும் பரிசுக் கவிதையும் ஆகஸ்ட் 4 ஆண்டு மலரில் வெளியாகும்.

பரிசுகள் கல்கி வைர விழா நிகழ்ச்சி மேடையில் ஆகஸ்ட் 4, 2002 அன்று வழங்கப்படும்.

**கல்கி** **வைரவிழா சிறுகதைப் போட்டியும் உண்டு! விவரங்களுக்கு அடுத்த இதழ் அல்லது 5.5.02 இதழ் பார்க்கவும்.**



# தேசநலன் எங்கே?

"நம் நாட்டில் எந்த விஷயமானாலும், அதை அரசியல் கண்ணோட்டத்திலேயே பார்க்கிறார்கள். அரசியலை, அப்புறப்படுத்தி விட்டு, தேசநலன் என்ற கண்ணோட்டத்தில் பார்க்கிற மனப்பான்மை இல்லாதது பெரிய துரதிருஷ்டம்தான்'' என்கிறார் முன்னாள் சி.பி.ஐ இயக்குனர் டி.ஆர். கார்த்திகேயன்.

தேசிய மனித உரிமை கமிஷனின் உறுப்பினராக இருக்கும் இவரிடம் 'பொடோ' சட்டம் குறித்து கேட்டபோதுதான் இப்படிச் சொன்னார்.



''நம் அரசியல் சட்டம், இந்த நாட்டுக் குடிமக்கள் ஒவ்வொருவருக்கும் சில அடிப்படைச் சுதந்திரங்களை அளித்துள்ளது. தீவிரவாதத்தை ஒடுக்குவதற்காக, ஒரு சட்டம் கொண்டு வரப்படும்போது, அது தனி மனித சுதந்திரத்துக்கு, உரிமைக்கு இடைஞ்சலாக அமைவதற்கு வாய்ப்பு இல்லை என்பது என் கருத்து. சட்டத்தை உருவாக்குகிறவர்களுக்கும், நாட்டின் பாதுகாப்புக்கு, இறையாண்மைக்குக் குந்தகம் விளைவிக்காத குடிமக்களின் தனி மனித சுதந்திரம் பாதிக்கப்படாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ளும் பொறுப்பும், கடமையும் உண்டு.

''கலவரம் நடக்கிறபோது, கலவரத்தை ஒடுக்க, துப்பாக்கிச்சூடு நடக்கிறது. கலவரத்துடன் துளியும் சம்பந்தமில்லாத அப்பாவிகளும் குண்டடிபட்டு இறப்பதைப் பார்க்கிறோம். அது துரதிருஷ்டவசமானது. அதையும் தவிர்க்க எல்லாவித முன்னெச்சரிக்கையும் எடுக்கப்பட வேண்டும் என்பது முக்கியம். இது பொடாவுக்கும் பொருந்தும்.''

''தடா அமலில் இருந்தபோது, அதன் மூலம் கைது செய்யப்பட்டவர்களில் மிகக் குறைந்த எண்ணிக்கையில்தான் குற்றம் நிரூபணமாகி தண்டனை தரப்பட்டது. ஆகவே, 'தடா', 'பொடா' எல்லாமே, தவறாகப் பயன்படுத்தப்பட்டு விடும் அபாயம் உள்ளதே!''

''நம் நாட்டில் எந்தச் சட்டத்தை, விதியைத் தவறாகப் பயன்படுத்தவில்லை என்று சொல்லுங்கள் பார்க்கலாம். ஒரு சட்டம் தவறாகப் பயன்படுத்தப்படும் என்பதாலேயே அந்தச் சட்டத்தைக் கொண்டு வராமல் இருக்க வேண்டும் என்பது சரியான வாதம் இல்லை. அதைத் தவறாகப் பயன்படுத்துவதைத் தடுக்க என்னென்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்வதுதான் சரியான அணுகுமுறை.

''பத்திரிகையாளர்களைப் பழிவாங்க இது பயன்படுத்தப்படும் சாத்தியம் உள்ளதே!''

''இந்தச் சட்டத்தை, ஆரம்பத்தில் ஜனாதிபதி பிரகடனப் படுத்தியபோதே மீடியாவில் கருத்து கேட்டபோது, 'சமூக நலன் கருதி, பத்திரிகையாளர்களையும் தீவிரவாதிகளைப் போல பார்க்காமல், சில விதிவிலக்குகளைத் தர வேண்டும். எப்படி செய்தி சேகரித்தார்கள் என்பதைத் தெரிவித்தே ஆக வேண்டும் என்று அவர்களைக் கட்டாயப் படுத்தக் கூடாது' என்று சொன்னேன். அதே போல, பொடாவின் கீழ் கைது செய்யப்பட்டவர்கள் ஜாமீனில் வெளிவர சில வழிவகைகள் செய்யப்பட வேண்டும் என்று குறிப்பிட்டேன். மத்திய அரசும், அந்த மாற்றங்களைச் செய்திருக்கிறது.

''பொடாவைத் தவறாகப் பயன்படுத்துவதைத் தடுக்க உங்கள் ஆலோசனை என்ன?''

'' சட்டம் தவறாகப் பயன்படுத்தப்பட்டிருக்கும் பட்சத்தில் தவறாகப் பயன்படுத்தியவருக்குக் கடுமையான தண்டனை தரப்பட வேண்டும்; பாதிக்கப்பட்டவருக்கு நிவாரணம் தரப்பட வேண்டும். அந்த நிவாரணத்தை அரசாங்கம் தராமல் தவறாகப் பயன்படுத்தியவரிடமிருந்து வசூலித்துத் தர வழி செய்ய வேண்டும்.''

சந்திப்பு: எஸ். சந்திரமௌலி

படம்: யோகா

குசும்பையும், துறுதுறுப்பையும் தொலைத்துவிட்டு, 'அழகி' படத்தில் சண்முகம் என்கிற பாத்திரமாகவே மாறிவிட்டிருந்த பார்த்திபன், அவசர அவசரமாக 'இவன்' படத்தைச் சொந்தத் தயாரிப்பில் இயக்கிக் கொண்டிருக்கிறார். 'அழகி' வெற்றி ஆறிவிடுவதற்குள் அடுத்த படத்தை வெளியிட்டுவிட வேண்டும் என்று முடிவு செய்து விட்டீர்களா?" என்று கேட்டாலும் கேட்டோம், பார்த்திபன் முகம் கோபத்தில் கடுகடுத்துப் போய்விட்டது.

"நான் என்னை நம்பறவன். அழகி வெற்றியைத் தக்க வைச்சுக்கணும்னு நினைக்கலே. ஆனால் அழகி மாதிரி நல்ல படங்களில் என்னை மாதிரி கமர்ஷியல் வேல்யூ உள்ள ஆட்கள் நடிக்கணும்னு விரும்பறேன். 'அழகி'ல நடிச்சது நல்ல அனுபவம். சண்முகம் பாத்திரத்திற்கு என்னோட மானரிசம், குறும்பு எதுவும் தேவைப்படலே. நான் இந்த மாதிரி படங்கள்லதான் நடிக்கணும்னு ஆரம்பத்துல விரும்பினேன். ஆனால் சினிமா என்னை எங்கேயோ இழுத்துக்கிட்டு வந்துட்டுது. சமீபத்தில் கூட, நான் நடிச்சிருந்த 'புதுமைப்பித்தன்' படத்தைத் தொலைக்காட்சியில் போட்டாங்க.. எனக்கே ஆச்சர்யம்... நாமதான் இவ்வளவு இன்வால்வ்டா பண்ணியிருக்கோமான்னு. 'காசி' படத்துல நடிங்கன்னு ஆரம்பத்துல என்னைத்தான் கூப்பிட்டாங்க.. ஆனால் சூழல் ஒத்துவரலே... விக்ரமை அப்ரோச் பண்ணச் சொன்னேன். இந்த மாதிரி கேரக்டர்கள் பண்ண கொள்ளை ஆசை. ஆனா இன்னொரு பக்கம் நம்ம கமர்ஷியல் வேல்யூவையும் தக்க வைச்சுக்கணுமே அதுக்காகத்தான் 'இவன்'!" என்றவரிடம் எடக்கு மடக்காக கேட்க எண்ணி, "கருப் பண்ணசாமி', 'கோர்ஆப் ஃப்ளாட்ஃபார்ம்' 'சோத்துக்கட்சி', 'ஏலேலோ' எல்லாம் என்ன ஆச்சு?" என்றோம்.

"கருப்பண்ணசாமி படத்தைக் கண்டிப்பா ஒரு நாள் எடுப்பேன். 'ஏலேலோ' படத்தைப் பொறுத்த வரைக்கும் ஏ.ஆர். ரகுமானை நான் அவசரப்படுத்த விரும்பவில்லை" என்று 'ஜம்ப்கட்'டில் தாவினார்.

"வழக்கம்போல அதிரடிப் புதுமை செய்யும் நீங்கள், 'இவன்' படத்தில் இருபது வில்லன்களைக் காட்டுகிறீர்களாமே?" என்றால் "இருபது இல்லை; பதினெட்டு வில்லன்கள்" என்று விளக்கம் கொடுத்தார்.

"நிஜ வாழ்க்கையில் நிறைய வில்லன்களைச் சந்திக்கிறோம். ஆனால் சினிமாவில் காட்டும்போது எல்லா வில்லன்களையும் இரண்டரை மணி நேரத்தில் காட்ட முடியாதுங்கறதால ஒரு வில்லனா சுருக்கிடறோம். 'இவன்'ல வில்லன்கள் எல்லோரும் சுருக்கப்படாதவங்க. ஒவ்வொரு காட்சியிலும் ஒரு வில்லன் அறிமுகமாகிக்கிட்டே இருப்பான். இப்படி ஹீரோ சம்பாதிக்கிற பதினெட்டு வில்லன்களையும் படத்தின் முடிவில் ஒட்டு மொத்தமா சந்திக்க வேண்டிய கட்டாயம்

எல்லா வில்லன்களையும்
இரண்டரை மணி நேரத்தில்
காட்ட முடியாதுங்கறதால
ஒரு வில்லனா
சுருக்கிடறோம்.
'இவன்'ல வில்லன்கள்
எல்லோரும்
சுருக்கப்படாதவங்க.



தான் 'இவன்'" என்கிறார் பார்த்திபன்.

"இசை விமர்சகர் சுப்புடுவை நடிக்கக் கூப்பிட எப்படி உங்களுக்குத் துணிச்சல் வந்தது?" என்றால், "சுப்புடு சாரை நான் நேரில் பார்த்ததே கிடையாது. ஆனால் படத்துல சுப்புடுமாதிரி ஒரு கேரக்டர். அதுக்கு அவரையே நடிக்க வச்சா என்னன்னு தோன்றிய பிறகு, அதை அவரிடம் கேட்க நிறையவே தயக்கம். அவரது தொலைபேசி எண்களை அழுத்திவிட்டு, அவர் எடுக்கும் முன்பே தொடர்பை நான்கு முறை கட் பண்ணிட்டேன். ஒருவழியாக தைரியத்தை வரவழைச்சுப் பேசின பிறகு தான் தெரிஞ்சது அவர் ரொம்பவும் ஜாலி பேர்வழின்னு. விமர்சகர் சுப்புடுவாகவே அவரை நடிக்க வச்சதுல ரொம்பவே மகிழ்ந்தேன்" என்று சந்தோஷப்படும் பார்த்திபனிடம், "பதினெட்டு வில்லன்கள் என்றால் பக்கா கமர்ஷியல் படம் என்பது தெளிவாகப் புரிகிறது. அப்படியென்றால் உங்களின் வழக்கமான மெசேஜ் இதில் மிஸ்ஸிங்தானா?" என்றால், "அட நீங்க வேற, மெசேஜ் சொல்லற கெட்ட பழக்கம் இதிலும் தொடருது. அது தொட்டில் பழக்கம்" என்றார் பார்த்திபன்.

— ஸ்ரீ சக்கரம்



புக் பேங்க்

# ஒரு சகாப்தம் இவர்!

**கா**ந்தியத்தில் மட்டுமே பற்றுடையவராக, முழு வாழ்நாளையும் தமிழ் மொழிக்கே அர்ப்பணித்துக் கொண்டு எளிமையாக வாழ்ந்து மறைந்தவர் சி.சு. செல்லப்பா. இவருடைய சின்னஞ்சிறிய நாவல் 'வாடி வாசல்' இன்றைக்கு வட்டார வழக்கு, மண் வாசனை என்றெல்லாம் சிந்திக்கிற பல படைப்பாளிகளுக்கு முன்னோடியாய்த் திகழ்கிறது.

'புதுக் கவிதை' என்று ஒரு சிந்தனை தமிழில் வேரூன்றுவதற்கு நிலம் தந்து பேணிப் பாதுகாத்தவர் செல்லப்பா. அந்த நல்ல நிலம்தான் 'எழுத்து' பத்திரிகை. தொ.மு.சி. ரகுநாதன், ஜெயகாந்தன், பிச்சமூர்த்தி தொடங்கி தர்மு சிவராம், பசுவய்யா, தி.சோ.வேணுகோபாலன், சி.மணி, நகுலன், எஸ்.வைதீஸ்வரன் என்று ஒரு பெரிய அணியே திரண்டு புதுக் கவிதையை வளர்த்தது 'எழுத்து' இதழில்தான்.






நிறைய விமர்சனக் கட்டுரைகள், கடிதங்கள், கதைகள் என்று மிகவும் இலக்கிய கனமுடையதாகவும் 'எழுத்து' வைச் செல்லப்பா வெளியிட்டார். பொருள் இழப்பைக் கணக்குப் பார்க்காமலே பன்னிரண்டு ஆண்டுகளில் 119ஆம் இதழ் வரை இந்தத் திருப்பணி தொடர்ந்தது.

இன்றைக்கும் சிற்றிதழ்கள் வெளிவருகின்றன. எல்லாவற்றுக்கும் செல்லப்பாவின் 'எழுத்து' ஏதோ ஒரு வகையில் உந்து சக்தியாக விளங்குகிறது என்பதை மறுப்பதற்கில்லை.

வல்லிக்கண்ணன் தொகுப்பாக, சென்னை ஞானியாரடிகள் தமிழ் மன்றம் வெளியிட்டிருக்கும் 'எழுத்து - சி.சு. செல்லப்பா' என்கிற மதிப்பீட்டு நூல், நுட்பமான பல இலக்கிய விஷயங்களை உணர வைக்கிறது. ஜனவரி 1959இல் வெளியான எழுத்து முதல் இதழையும், மார்ச் 1972இல் வெளியான கடைசி இதழையும் அப்படியே இம்பிரின்ட் உட்பட இந்த நூலில் வெளியிட்டிருக்கிறார்கள். முதல் இதழ் மட்டும் 78 பக்கங்கள். கடைசி இதழ், 54 பக்கங்கள், ஆக இந்த 324 பக்க நூலில், மீதமுள்ள பக்கங்களில் வல்லிக்கண்ணன், தி.க.சிவசங்கரன், சின்னக் குத்தூசி, செல்லப்பாவின் ஆத்மார்த்தமான நண்பர் பட்சணக் கடை ஏ.என்.எஸ். மணியன் ஆகியோர் தம்முடைய செல்லப்பா அனுபவங்களை வளமாகப் பதிவு செய்திருக்கிறார்கள். எண்பத்தாறு வயது வாழ்ந்த செல்லப்பாவுக்கு, மணியன் கடை பால்கோவாவும், கோதுமை அல்வாவும் மிகவும் பிடிக்கும் என்கிற செய்தியை இனிப்பைக் கண்டு மிரள்கிறவர்கள் படிப்பது நல்லது.

எழுத்து இதழ்களை இப்போது படிக்க வாய்ப்பு ஏற்படுத்தித் தந்துள்ள வல்லிக்கண்ணனை எத்தனை பாராட்டினாலும் போதாது. முதிர்ந்த அறிஞர்களின் மதிப்பீடுகளையும் சேர்த்துப் படிக்கிறபோது, மணிக்கணக்காக நண்பர்களோடு அமர்ந்து உரையாடி மகிழ்கிற செல்லப்பா இன்னும் உயிருடன் நம்மிடையே இருக்கிற உணர்வே ஏற்படுகிறது.

கடைசி இதழில் வெளியாகியுள்ள செல்லப்பாவின் 'ஒலி பெருக்கி' கவிதை!

*இசை அலறும் எரிமலை வாய்,*

*பேச்சு நொறுங்கும் கல்லுடை ரோவர்*

*ஜவ்வைத் தீய்க்கும் கொல்உலை எஃகுக்கோல்*

எத்தனை நயமான உண்மை, என்றைக்கும்!

**எழுத்து - சி.சு. செல்லப்பா, தொகுப்பாசிரியர் - வல்லிக்கண்ணன். விலை ரூ.60/- விஜயா பதிப்பகம், 20, ராஜவீதி, கோயமுத்தூர்-1.**

— **யெஸ்பால்**

**அமெரிக்காவின் மீதான தீவிரவாதிகள் தாக்குதலையடுத்து, உலக அமைதிக்காகப் பிரத்யேகமான கருத்தரங்கம் மற்றும் பிரார்த்தனை ஒன்றுக்கு ரோம் நாட்டில் ஏற்பாடு செய்திருந்தார் போப் ஆண்டவர். பல்வேறு நாடுகளிலிருந்தும், பல்வேறு மதங்களையும் சார்ந்த சான்றோர்கள் இந்தப் பிரார்த்தனைக் கூட்டத்திற்குச் சிறப்புப் பிரதிநிதிகளாக அழைக்கப்பட்டிருந்தனர். அப்படி அழைக்கப் பட்டவர்களில் ஒருவர் கோவையைச் சேர்ந்த பிரபல தொழிலதிபரான கிருஷ்ணராஜ் வாணவராயர். அவர் தமது ரோம் பயண அனுபவங்களைப் பகிர்ந்து கொள்கிறார் :**

'நாடுகளின் தலைவர்கள் சந்தித்துப் பேசுவதால் உலகில் அமைதி வந்துவிடாது. மக்களின் இதயங்கள் பேசுகிறபோது, அமைதி வந்தே தீரும்' என்று சுவாமி சச்சிதானந்தாவின் கருத்தைப் போலவே போப் ஆண்டவரும் சிந்தித்ததன் விளைவுதான் இந்த சர்வ மதப் பிரார்த்தனை மாநாடு. இரண்டே நாட்கள் நடந்த அந்த மாநாட்டுக்கு ஆன மொத்த செலவு சுமார் இரண்டு கோடி ரூபாய். மொத்தம் ஏழு மதங்களைச் சார்ந்த பிரதிநிதிகள் அழைக்கப்பட்டிருந்தார்கள்.



நாங்கள் போய் இறங்கியபோது, அங்கே கடும் குளிர். அதைப் பொருட்படுத்தாமல், பாதிரியார்கள் விமான நிலையத்துக்கு வந்திருந்தார்கள். போப் ஆண்டவரின் சிலுவைச் சின்னம் பொறித்த கார்களில், அரசு விருந்தினர்களுக்குரிய கௌரவத்துடன் அழைத்துச் செல்லப்பட்டோம். ஒவ்வொரு நிமிடத்துக்கும் என்ன நிகழ்ச்சி என்று மிகத் துல்லியமாகத் திட்டமிட்டிருந்தது மட்டுமின்றி, அதன்படியே செயல்படுத்திக் காட்டினார்கள் என்பதுதான் வியப்பூட்டும் உண்மை!

முதல் நாள் உலக அமைதிக்கான கருத்தரங்கம். இரண்டாம் நாள், ரோம் நகரிலிருந்து இரண்டு மணி நேரப் பயண தூரத்தில் இருக்கும் அஸிஸி என்ற நகரத்து சர்ச்சில் சர்வ சமயப் பிரார்த்தனை. அதற்கும் அடுத்த நாள், போப் ஆண்டவர், அனைவருக்கும் பிரவுபசார விருந்து அளித்தார்.

கருத்தரங்கிற்கு, நூற்றைம்பது பிரதிநிதிகள் அழைக்கப்பட்டிருந்தாலும், அவர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட இருபது பேர்களுக்கு மட்டுமே, சொற்பொழிவாற்ற வாய்ப்பு தரப்பட்டது. சில தினங்களுக்கு முன்பாகவே எனது சொற்பொழிவின் பிரதியைக் கேட்டு வாங்கி, தக்க ஏற்பாடுகள் செய்து, நான் பேசிய போது, இத்தாலி, பிரெஞ்ச், ஜெர்மன், அராபிக் ஆகிய நான்கு மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டு, ஒலிபரப்பாயிற்று.

இரண்டே இரண்டு பக்கம் எழுதப்பட்ட என் சொற்பொழிவைக் கேட்டுவிட்டு, இந்து கலாசாரத்தில், பாரத நாட்டு பண்பாட்டில் இத்தனை ஆழமான விஷயங்கள் இடம் பெற்றிருக்கின்றனவா என்று பலரும் பாராட்டினார்கள். பேசிமுடித்துவிட்டு, என் இருக்கைக்குத் திரும்பியவுடன், என் மனைவி "இவ்வளவு பெரிய சபையில், இத்தனை பெரியவர்களுக்கு மத்தியில் பேசும்போது உங்களுக்குக் கொஞ்சமும் தயக்கம் ஏற்படவில்லையா? என்று கேட்டார்.

நான் சொன்னேன். "நான் என் பேச்சைத் துவக்குவதற்குமுன் கண்மூடி ஒரு நிமிடம் பிரார்த்தனை செய்தேன் அல்லவா? அப்போது வேதவியாசர் தொடங்கி, விவேகானந்தர் வரை அத்தனை மகான்களும் என் உடனிருந்து என்னை இயக்குவது போல உணர்ந்தேன். அப்புறம் தயக்கம் எப்படி ஏற்படும்.

வாடிகனில் பிரதானமான ரேடியோ, டெலிவிஷன் நிருபர்களும், மற்ற பத்திரிகையாளர்களும் என்னைப் பேட்டி கண்டபோது தவறாமல் ஒரு கேள்வி கேட்டார்கள் : 'இந்த கருத்தரங்கில் வந்து கலந்து கொண்டீர்கள். பல சான்றோர்களின் உரைகளைக் கேட்டீர்கள். உங்கள் நாட்டுக்குத் திரும்பியவுடன் என்ன செய்யப் போகிறீர்கள்?'

நான் வந்தேன். பலர் கருத்துக்களைக் கேட்டேன். ஆனால் தெரிந்து கொள்வதற்குப் புதிதாக ஏதுமில்லை. பல்லாயிரம் ஆண்டாக முதிர்ந்து தழைக்கும் எங்கள் இந்து தர்மத்தில், இந்திய கலாசாரத்தில், ஆழமான கருத்துக்கள் ஏற்கெனவே கூறப்பட்டுள்ளன. அவை குறித்து, அறிய விரும்புபவர்களை, நான் அன்போடு இந்தியாவுக்கு அழைக்கிறேன் என்று சொல்லிவிட்டு, நம் தர்மத்தில் உள்ள, உலகமே ஒரு குடும்பம்

என்கிற 'வசுதேவ குடும்ப' தத்துவத்தை எடுத்துரைத்தேன்.

**வா**டிகன் அரண்மனை வளாகத்துக்குள்ளேயே போப் ஆண்டவருக்கென்று பிரத்யேகமான ஒரு ரயில் நிலையமும், விசேஷ ரயிலும் இருக்கின்றன. நாங்கள் வாடிகனிலிருந்து, அஸிஸி நகருக்கு அந்த ரயிலில்தான் அழைத்துச் செல்லப்பட்டோம். முப்பத்துநாலு வருடங்களுக்குப் பின், போப் அந்த ரயிலை இந்தப் பயணத்துக்காகப் பயன்படுத்தினார் என்பது குறிப்பிடத்தக்கது.

அந்த ரயில் புறப்பட்ட தருணம், வாடிகனின் செயின்ட் பீட்டர் தேவாலய மணிகள் ஒலித்தன. அதன்பின் வழியெங்கும், ரயில் சென்ற பாதையில் தேவாலய மணியோசை விடாமல் கேட்டுக் கொண்டே இருந்தது. இருபுறமும், கடுங்குளிரிலும் மக்கள் திரண்டு,



# பரமாச்சாரியாராக போப்!

கையசைத்து, வாழ்த்திக் கொண்டிருந்தனர். நாங்கள் புறப்பட்டபோது, வழியனுப்பி வைத்த இத்தாலிய அதிபரும், அவரது மனைவியும் நாங்கள் அஸிஸி சென்றடைவதற்கு முன்பே, விமானம் மூலம் அங்கு வந்திறங்கி, எங்களை வரவேற்கக் காத்திருந்தது இனிய ஆச்சரியம். அங்கே சர்வமதப் பிரார்த்தனை. போப் உரை முடிந்ததும், அவரவர் மத சம்பிரதாயப்படி பூஜை செய்ய தனித்தனி அறைகளில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

நானும், என் மனைவியும் இங்கிருந்து எடுத்துச் சென்ற பிள்ளையார் விக்கிரகத்தை வைத்துப் பூஜை செய்தோம். கிறிஸ்தவ பாதிரிமார்களுக்குப் பிரசாதம் வழங்கினோம்! அன்று மாலை, அதே விசேஷ ரயிலில் வாடிகன் திரும்பினோம்.

**அ**டுத்த நாள் பிரிவுபசார விழா. வாடிகன் அரண்மனையின் பிரம்மாண்டமான ஹாலில், போப் ஆண்டவருக்கான டேபிள் இருந்தது. பிரிவுபசார விருந்துக்குச் சிறிது நேரம் முன்பு, இந்தியாமீது எங்களுக்கு உள்ள பெரும் மதிப்பு, மரியாதையின் அடையாளமாக போப் ஆண்டவரது உணவு மேஜையில் அவருடன் அமர்ந்து உணவு அருந்தும் கௌரவத்தை உங்களுக்கு அளிக்க விரும்புகிறோம் என்றார்கள் வாடிகன் பாதிரிமார்கள்.

இரண்டு மணி நேரம், அவருடன் அமர்ந்து அளவளாவி, உணவருந்தும் பெரும் பாக்கியம் எனக்குக் கிடைத்து. அருகிருந்து அவரது கனிந்த முகத்தையும் குழந்தைச் சிரிப்பையும் பார்த்தபோது, அவரையும் ஒரு பரமாச்சாரியாராகவே நான் கண்டேன். சுத்தமான சைவ உணவுதான் போப் ஆண்டவரின் உத்தரவின் பேரில் அனைவருக்கும் பரிமாறப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

நம் நாட்டுப் பண்பாட்டின்படி நான் எடுத்துச் சென்ற பொன்னாடையை, போப் ஆண்டவருக்கு அணிவிக்க விருப்பம் தெரிவித்தபோது, அங்கே இருந்தவர்கள், 'இது இங்கே மரபில்லை' என்று சொல்லிவிட்டனர். ஆனால், ஜெர்மன் நாட்டுப் பாதிரியார் ஒருவர் வந்து, சொன்ன வார்த்தைகளை நான் மறக்க முடியாது. "இவர் நூறு கோடி மக்களின் பிரதிநிதியாக இங்கே வந்திருப்பவர். பல்லாயிரமாண்டு பாரம்பரியம் கொண்ட கலாசாரத்தின் பிரதிநிதி. உலகின் மிகப்பெரிய ஜனநாயக நாட்டிலிருந்து வந்திருப்பவர். எனவே அவரைத் தடுப்பது முறையில்லை."

நான் போப் ஆண்டவருக்கு சேந்திறப் பொன்னாடையை அணிவித்தபோது மொத்த பேரும் எழுந்து நின்று மரியாதை செலுத்தியது மெய்சிலிர்க்க வைத்த அனுபவம்.

- பாரதி



# நெட் ஃபோன்!

நம் ஊரிலிருந்து, அமெரிக்காவில் ஒருவருக்கு ஃபோன் செய்தால், விநாடிக்கு விநாடி பில் ஏறி, கணிசமாய்ப் பழுத்துவிடும்தானே! நிமிடத்துக்கு ஐம்பது, அறுபது ரூபாய் என்று பணம் செலுத்த வேண்டிய அவசியம் இனி இல்லை!

யெஸ்! வந்துவிட்டது இன்டர்நெட் டெலிஃபோன். இந்தத் தொழில் நுட்பம், உலகின் பல்வேறு நாடுகளிலும், ஏற்கெனவே செயல்பட்டுக் கொண்டிருப்பதுதான் என்றாலும் இந்தியா உட்பட சில நாடுகள் தடை விதித்திருந்தன. ஆனால் நமது மத்திய அரசு, இந்த ஏப்ரல் மாதம் முதல் அந்தத் தடையை நீக்கிவிட்டது.

நம் வீட்டு கம்ப்யூட்டர் முன்னால் உட்கார்ந்து கொண்டு, அமெரிக்காவில் இருப்பவரும் அவரது கம்ப்யூட்டர் முன்னால் உட்கார்ந்து கொண்டு, 'வாய்ஸ் சாட்' என்கிற உரையாடல் நடத்திக் கொண்டிருப்பதற்கு அடுத்தக் கட்டம் இந்த இன்டர் நெட் டெலிஃபோன். இதன் மூலமாக, நம் கம்ப்யூட்டரிலிருந்து, அமெரிக்காவில் இருப்பவரை அவரது டெலிஃபோனிலோ, செல்ஃபோனிலோ கூப்பிட்டு, நேரடியாகப் பேசுவது சாத்தியம். இதில் விசேஷம் என்னவென்றால், இந்த இன்டர் நெட் டெலிஃபோன் தொழில் நுட்பம் மிகக் குறைந்த செலவு பிடிக்கிற விஷயம் என்பதுதான். சொல்லப் போனால், சாதாரண டெலிஃபோன் கட்டணத்தில் பத்தில் ஒரு பங்குதான் இதில் ஆகும்.

"இன்டர்நெட் டெலிஃபோன் பயன்படுத்துவதற்குச் சௌகரியமாக மைக், ஸ்பீக்கர் இணைந்த ஹெட் செட் (விலை சுமார் 1500), டயல் செய்யவும், பேசவும் சௌகரியமான ஹேண்ட் செட் (சுமார் ரூபாய் 3500) இவற்றிற்கெல்லாம் இப்போது ரொம்ப டிமாண்ட்" என்கிறார் இன்டர்நெட் டெலிஃபோனுக்குத் தேவையான பல உபகரணங்களை விற்பனை செய்கிற சென்னையைச் சேர்ந்த கிரியேடிவ் இன்ஃபோடெக் நிறுவனத்தின் முகமது. கூடுதலாக, முன்கூட்டிப் பணம் செலுத்தி, 'ப்ரீ பெய்டு கார்டு'ம் வாங்கி வைத்துக் கொள்ள வேண்டும்.

"வயதானவர்கள், வெளி நாடுகளில் இருக்கும் தங்கள் உறவினர்களுடன் பேச விரும்பினாலும், கம்ப்யூட்டரைப் பயன்படுத்தத் தெரியாதே என்று தயங்கக் கூடும். எனவே கம்ப்யூட்டரே அவசியமில்லாமல், நாங்கள் விற்பனை செய்யும் 'யாப்ஜாக்' என்ற உபகரணத்தை டெலிஃபோன் மற்றும் இன்டர்நெட் லைனுடன் இணைத்துவிட்டால் போதும். மிகக் குறைந்த கட்டணத்தில், டெலிஃபோனில் பேசுவது போலவே பேசிக் கொள்ளலாம். இதற்கும் நல்ல டிமாண்ட் இருக்கிறது" என்கிறார் முகமது.

இன்னொரு உபயோகமான தகவல்: இரண்டு பக்கமும், கம்ப்யூட்டருக்குப் பதிலாக 'யாப் ஜாக்' உபகரணம் இருந்து விட்டாலோ கவலையே வேண்டாம்! இன்னும் குறைந்த செலவில் பேசி ஜமாய்க்கலாம்!

— கௌதம்

பகவான் பாபாவின் அருளால்

# மகிளா உத்யோக் திட்டம்

**இல்லத்தரசிகளின் இனிய வாய்ப்பு**
**மகளிர்க்கு ஒரு மகத்தான திட்டம்**

★ நீங்கள் நடுத்தர குடும்பத்தை சேர்ந்த பெண்மணியா!

★ குடும்ப வருமானத்தை பெருக்க வேண்டும் என்ற ஆதங்கம் உள்ளவரா?

★ உங்கள் தலைமையின் கீழ் பெண்கள் குழு அமைத்து செயல்பட திறமை உள்ளவரா?

**உங்களுக்கு எந்த முதலீடும் இன்றி வருமானம் பெற்று தர தயாராக இருக்கிறோம்.**

**நேர்மை, உழைப்பு மட்டும் தேவை**

**பெண்களுக்கு ஏஜென்சியில் முன்னுரிமை**

அணுகவும் :

**Ishwarya Agencies,**
120, Perambur High Road,
Jamalia, Chennai - 12
Ph : 044-6622832 / 6623727
E-mail : mauriya@vsnl.net

# ஆத்ரேயா

★ ரெடிமேட் ரவிக்கைகள்
★ பெட்டி கோட்ஸ்
★ நைட்டீஸ்
★ Childrens Nighties and Tops



**Mrs. சுசீலா விஸ்வநாதன்**
858/3, பன்னீர்செல்வம் சாலை, கே.கே. நகர், சென்னை - 600 078.

''எந்த ஒரு நல்ல விசேஷமா இருந்தாலும் ஆத்ரேயாவில் ரெடிமேட் ரவிக்கை வாங்கிடுவேன். எனக்கு ராசியும்கூட''

**Mrs. சசிகலா வாசுதேவன்**
6, டீச்சர்ஸ் காலனி, ராயபேட்டை, சென்னை.



''புடவை எங்க வாங்கினாலும் பரவாயில்ல. ஆனா ப்ளௌஸ் மட்டும் ஆத்ரேயாதான்''



**திரு.ரகுபதி**
ஜி2, ஸ்வர்ணா அபார்ட்மெண்ட்ஸ், 13, புலியூர் இரண்டாவது லைன், டிரஸ்புரம், சென்னை - 600 024.

''இந்த புடவையெல்லாம் கூட உடனே வாங்கிடலாம். ஆனா இந்த ப்ளௌஸ் வாங்கற கஷ்டம் இருக்கே! பேயா அலையனும். இப்ப அந்த ப்ராப்ளமே இல்ல. ஆத்ரேயா போனமா ப்ளௌஸ் எடுத்தமான்னு வந்துறலாம்.''

**AG™ ATHREYA GARMENTS**
House of Blouses

No.1, Jambulingam Street, (Valluvar Kottam High Road),
Nungambakkam, Chennai - 600 034.
☎ 8226586 Fax : 091-044-5360076
Website : www.athreyawoman.com E-mail : ols@md3.vsnl.net.in

ஆத்ரேயா ரெடிமேட் ரவிக்கைகள் கிடைக்கும் இடங்கள்

| | | | |
|---|---|---|---|
| SINGAPORE | : | MUSTAFFA (OLD) | NALLI Pvt. Ltd., |
| UAE | : | LULUCENTRE | |

CHARY'S



"ச்சே... இப்டியா அழுத்துவ... பயந்தே போய்ட்டேன்" என்றான் குட்டி. அருகில் அவனின் நண்பன் பச்சைமுத்து நின்று கொண்டிருந்தான்.

"இவ்வளவு பட்டது போதாதால... இன்னும் என்ன கேக்கு ஒனக்கு, எந்திரில. அங்க, ஆள எங்கன்னு அருவாளும் கம்புமா அலையுதானுவோ நீ என்னடான்னா... இங்க கூத்தடிச்சிட்டு இருக்க... முட்டா பயல..."

பச்சைமுத்துவின் வார்த்தையையும் அவனின் வருகையையும் இருவருமே எதிர்பார்க்கவில்லை.

இவன் என்ன சொல்வது என் காதல் பற்றி? வந்தோமா, போனோமா என்றில்லாமல். ஆத்திரம் தலைக்கேறி, தடித்த வார்த்தை உதடு வரை வந்து நெஞ்சுக்குள் திரும்பியது குட்டிக்கு.

நிமிட நேர கோபமும் ஆத்திரத்தைத் தூண்டும் வார்த்தைகளும்தான் கலவரத்துக்கு அடித்தளம். வேண்டாம். இந்த நேரத்தில் எதுவும் பேசிவிட வேண்டாம் என்பதால் மௌனமாக இருந்தான்.

"என்னல சொல்லுதேன்; உக்காந்துட்டேயிருக்க. வால! ஏந்தாயி, நீ தண்ணியத் தூக்கிட்டு வீட்டுக்குப்போ. ஓம் பின்னாலயே ஆள அனுப்பி உங்கப்பன் இவனக் கொன்னாலும் கொன்னு போடுவான்... போ..."

"

கலைந்த தலையும், கையில் அரிவாளோடும் வியர்க்க விறுவிறுக்க பதற்றத்தோடு வெறித்தனமாக ஓடிவந்து கொண்டிருந்தான் பச்சை.

"

# மேலச்செரு மரகதம்

பச்சைமுத்து கொஞ்சம் கறாராகவே சொன்னான்.

கரையான் புற்றுக்குள் ஓணான் நுழைந்த மாதிரி எதற்கு இந்த நேரத்தில் வந்து தொலைந்தான்? என்று யோசித்தவாறே, எழுந்து பச்சைமுத்துவின் அருகில் சென்றான் குட்டி.

"பச்சை நீ.. போய்ட்டிரு.. அவள அனுப்பிட்டு பின்னாலயே வாரன்" என்றான் தெறித்து வந்த கோபத்தை அடக்கி.

"ஏன்? அவளுக்குப் போவ தெரியாதோ? பச்சபுள்ள பாரு... என்னன்னாலும் ஒழிங்க" என்று நடந்தான் பச்சை.

வாழை வயல்தாண்டி அவன் சென்றதும் மீண்டும் இருவரும் உட்கார்ந்து கொண்டனர்.

அம்மன் கோயில் கொடையின்போது பாயசத்தில் உப்புப் போட்டு அவன் கொடுத்தது. தொழுவத்தில் சாணம் அள்ளிக் கொண்டிருக்கும்போது சாண உருண்டைகளை, யாருக்கும் தெரியாமல் அவன்மீது எறிந்தது. பவுடர் பூசிய மணத் தோடு, தண்ணீரெடுத்து வரும் அவளைப் பார்க்க அக்ரஹார ஓரத்தில் நின்றபோது முகத்தில் தண்ணீ

ஏக்நாத்

2



ரைத் தெளித்துப் பவுடரை அழிய வைத்தது என்று அவள் செய்த சின்னச் சின்னக் குறும்புகள் அவனுக்கு இப்போது ஞாபகத் துக்கு வந்தன.

நிறைய பேச வேண்டும் என்று நினைத் தவனுக்கு வேறெதுவும் வார்த்தைகள் வர வில்லை. அவளாவது ஏதாவது சொல்வாள் என்று நினைத்தால் அவள் மகிழ்ச்சியைப் பறிகொடுத்தவளாய் அமர்ந்திருந்தாள். பச்சைமுத்துவின் வார்த்தை அவளைச் சுட்டிருக்க வேண்டும்.

மேல ஊர் கிறிஸ்தவக் கோயிலில் மணி யடிக்கும் சப்தம் கேட்டது. பிறகு ரேடியோ



வில் பாடல் ஒலிக்க ஆரம்பித்தது.

வழக்கமாக இந்த நேரத்தில் அக்ரஹார தெரு ஓரத்தில் அவன் நின்று கொண்டிருப் பான். அவளின் புன்னகை மற்றும் சில குறும்புகள், கண் ஜாடைகளுக்காகவே அவன் தவம். அது அவளுக்குப் பிடிக்கும். தனக்காக, தன்னை ரசிக்க ஒருவன் நின்று கொண்டிருக்கிறான் என்பதே அவளுக்கு ஆனந்தத்தை ஏற்படுத்தும். இவனின் பார்வைக்காக, அவள் ஒப்பனைக்காக செலவிடும் நேரம் வீட்டிலுள்ளவர்களையே சந்தேகமடைய வைக்கும்.

“நான் கிளம்புதேன்... வீட்ல தேடு வாவோ” என்றாள் மரகதம்.

அவன் வேண்டாமனத்தோடு “சரி” என்றான்.

அவள் எழுந்து வாய்க்காலுக்குள் இறங்கி குடத்தைச் சாய்த்துத் தண்ணீர் எடுத்தாள். கரையில் நின்ற குட்டி, தண்ணீருக்குள் இறங்கி அவளைக் கட்டிப் பிடிக்கும் நோக் கில் முயன்றவன், ஏதோ தடுத்தவனாய் நின்று அவளின் வளையல்கள் அணிந்த கையைப் பிடித்து முத்தமிட்டான்.

அவள் முகத்தைத் திருப்பிக் கொண் டாள்.

“கெளம்பறேன் மரகதம்.”

சொல்லிக்கொண்டே கிளம்பாமல் நின்றான். அவளும். சிறிதுநேரம் பார்வைகள் மட்டும் பேசின. கண்களால் விடை பெற்றுக் கொண்டு நடந்தான். வரப்புக்குள் போகும் முன் இரண்டு முறை அவளைத் திரும்பிப் பார்த்தான்.

வாழ்க்கை அர்த்தமற்றதாகப்பட்டது அவனுக்கு. மனிதர்கள் வெறுப்புக்குள்ளா னார்கள். பெற்றோர்கள் பாவியாயினர். சமூகம் போலியாகத் தெரிந்தது. கண்களை இமைகளால் இறுக்க அழுத்தி, மனத்துக்குள்

**"நம்ம தலைவர் கொஞ்சம் அல்பம்தான். ஆனா, இந்த அளவுக்குப் போவார்னு நான் எதிர்பார்க்கலை.."**

**"ஏன், என்ன செய்தார்?"**

முழித்துப் பார்த்தான் குட்டி.

ஆளரவமற்ற ஒரு பாலைவனம். ஓர் ஈச்சமரத்தின் கீழ் அவர்கள் இருவர் மட்டும் இருப்பதுபோல் தோன்றிற்று. கோட்டை விளைபட்டி பாபி தியேட்டரில் முந்தா நாள் பார்த்த படத்தின் பாடல் காட்சியின் பின்னணியில் இருவரும் காதல் செய்து கொண்டிருந்தனர். பின்னணியில் இருபது வெள்ளைத் தேவதைகள் பறந்துவர...

“இவ்வளவு நேரமால?..”

சப்தம் கேட்டு கலைந்தது நடக்கும் போதே மனத்தில் விரிந்த கனவு.

ஆற்றுக்குச் செல்லும் வழியில் இருந்த சிறு பாலத்தில் இருந்து பீடி குடித்துக் கொண்டிருந்தான் பச்சைமுத்து. குட்டி எதுவும் பேசவில்லை.

“ஏல கேக்கம்லா... ஒணரே கெடயாதுல உங்களுக்கு. பட்டதுபோதாதா?”

“ஆமா... இத அவ இருக்கும் போதுதான் சொல்லணுமோ?”

“சொன்னதுல என்ன தப்பு? அவளும் தான காரணம்.”

“சும்மா கூறுகெட்டத்தனமா பேசாத.. இதே நெலம உனக்கு வந்திருந்தா தெரியும்.”

“நானால கூறுகெட்டத்தனமா பேசுதேன். சர்தாண்டே... என்னய செருப்பக் கழிந்தி

அடிக்கணும். ஒனக்கு நல்லது செய்யப் போவ, இது வேற பொல்லாப்பு. கழுதயோ எப்படியும் போங்கோ, எனக்கென்ன வந்திருக்கு. சொல் புத்திக் கேக்கணும். இல்லனா சொந்த புத்தி இருக்கணும். பட்டபெறவும் திருந்தலனா என்ன செய்ய முடியும்?"

பச்சை முடிக்காமலேயே பேசிக் கொண்டிருந்தான். இருவரும் ஆற்றை நோக்கி நடந்து கொண்டிருந்தார்கள்.

கலவ்ரம் கட்டுக்குள் வந்திருந்தது. அம்பாசமுத்திரத்துக்குப் புதிதாக வந்திருந்த இளம் எஸ்.ஐ. ஒருவர் பிரச்னையைச் சுமுகமாகப் பேசி முடித்திருந்தார்.

ஓடி ஒளிந்தவர்கள் ஊருக்குள் திரும்பியிருந்தார்கள். மாடு முட்டித்தான் சுப்பையா இறந்தான் என்பதை ஏற்றுக் கொண்டார்கள். ஜெயிலில் அடைக்கப்பட்டிருந்தவர்கள் விடுதலையாகியிருந்தனர். ஆனாலும் முன்பைவிட அதிகமாக இருதரப்பினருக்கும் மனக்காயம் இருந்தது.

"ஆயிரம் இருந்தாலும் சரி. அவனுக ஒட்டும் வேண்டாம். ஒறவும் வேண்டாம்" என்று போலீஸ் முன்பு நடந்த ஊர்க் கூட்டத்தில் குட்டியின் அப்பா பொரிந்தார்.

ஊர் மொத்தமும் விவசாய சங்கத்தில் கூடியிருந்தது.

"எங்களுக்கு மானந்தாம் பெரிசு. ஒரு சின்ன வெவாரத்தப் பெரிசு பண்ணி இந்த நிலைக்கு ஆளாக்கிடானுவளே... கேவலப்படுத்தி, பேப்பர்ல வேற போட்டு வெஷயத்த நாறடிச்சுட்டுனாலுவளே... இதுக்கு முன்னால இந்த ஊர் மண்ணுல போலீஸ்காரன் கால்பட்டுருக்குமா? இதுக்கெல்லாம் யாரு காரணம்?"

வெற்றிலைக் கறை படிந்த பற்களைக் காண்பித்துக் கொண்டே குட்டியின் அப்பா பேச அங்கே இறுகிய மௌனம்.

"இதுல நமக்கென்ன சித்தப்பா கேவலம் வுந்துபோச்சி. பொட்டபுள்ளய பெத்து வச்சிருக்கது அவன். நமக்கென்ன கேவலம். அவனுவதான் அத ஒணரணும்" என்றான் பச்சை.

இந்தப் பேச்சையடுத்து அந்தப் பக்கமிருந்து ஓர் ஆவேசக் குரல்.

"ஒம் பொட்டப்புள்ளக்கு இப்படியொருத்தன் கடுதாசி எழுதியிருந்தாம்னா வாயப் பொத்திட்டுச் சும்மாவா இருப்பே... பேசுதான் சோத்துக்கு உப்பில்லன்னு"

"யார்ல சொன்னது, எழுதுவானோல எந்தப் பயலும் கடுதாசி, எழுதுத பயலுக்குக் கை இருக்காது."

"ஆங்... சுடுதுலா... ரத்தம் சுடுதுலாவே... இது மாதிரிதான் அடுத்தவங்களுக்கும் இருக்கும்... பின்ன என்ன கேனத்தனமா பேசுதவே..."

"கேனத்தனமாவா... யாரல கேனையன்னு சொன்ன... பிதில அவனை..."

இரண்டு பக்கமிருந்தும் வார்த்தைகள் வேகவேகமாய்ப் பாய, மீண்டும் அடிதடிக்கு ஆயத்தமாகியது ஊர்.

இத்தச் சப்தங்களிடையே பலியாடு மாதிரி பேந்தப் பேந்த முழித்துக் கொண்டிருந்தவன் குட்டி மட்டும்தான்.

எல்லா அப்பாக்களும் இப்படியே இருக்கிறார்களே...! இந்தப் பெரிசுகளெல்லாம் வயது முடிந்தும் இம்சித்துக் கொண்டிருப்பதற்குப் பதில் போய்ச் சேர்ந்தாலாவது நிம்மதியாக இருக்கும் என்று நினைத்தான் குட்டி. நினைப்பது போல் எங்கு நடக்கிறது?

சப்தம் விடுவதாக இல்லை. ஆளாளுக்கு எழுந்து நின்று பாயப்போக, அமைதியாகப் பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்திருந்த எஸ்.ஐ. விர்ரென்று எழுந்து, "நிறுத்துங்கய்யா..." என்றார் உறுமலாக.

அவ்வளவுதான். கப்சிப்.

"ஒங்களயெல்லாம் மனுசங்கன்னு மதிச்ச, சண்டை போடாம இருங்கன்னு




**"அன்னதான தொடக்க விழாவுக்கு டிபன் காரியரோடு போய் ரொப்பிக்கிட்டு வந்துட்டாரே!"**

**- நாமக்கல் பாலு**

நேர்மையா சொன்னேன். இப்படிலாம் உங்களக் கூட்டி வச்சுப் பேசணும்னு அவசியமில்ல. சட்டப்படி நான் நடவடிக்கை எடுத்தம்னா நீங்கள்ளாம் தாங்கமாட்டியோ. நான் சொல்லுத மாதிரி சண்டை சச்சரவு இல்லாம இனும ஒத்துமையா இருப்போம்னு இந்தப் பேப்பர்ல கையெழுத்துப் போட்டுத்தாங்க. இல்லன்னா நான் என் வேலய பாக்கேன். நீங்க உங்க சோலிய பாருங்க. பெறவு ஐயான்னாலும் முடியாது. அம்மான்னாலும் முடியாது."

கூட்டத்திலிருந்து எவ்வித பதிலுமில்லை.

"என்னய்யா பதிலக் காணும்?"

மெதுவான முனகல் சப்தம் வந்தது.

"கொஞ்சம் சத்தமாத்தான் சொல்லுங்களேன்."

"சரி.. சரி, இனும சண்டை சச்சரவு இல்லாம, அமைதியா இருப்போம்."

"யோவ், ஏட்டு, எழுதிட்டியா? அந்தப் பேப்பரைக் கொண்டா!" எஸ்.ஐ. சொல்லவும் அவர் வெள்ளைப் பேப்பரைக் கொடுத்தார்.

அதை வாசித்தவர் சிலவரிகளைத் திருத்தி, குட்டியின் அப்பாவையும், மரகதத்தின் அப்பாவையும் அழைத்துக் கையெழுத்துப் போடச் சொன்னார்.

பிறகு, இருவரையும் கைகுலுக்கச் சொல்லி, "இனும எந்தச் சண்டை சச்சரவும் வரக்கூடாது. ஒன்னுக்குள்ள ஒன்னா, இதுக்கு முன்னால எப்படி இருந்தியலோ அது மாதிரி இருந்துக்குங்க. இந்த ஊர்ல போலீஸ் மிதிக்காதபடி பாக்க வேண்டியது, உங்க கைலதான் இருக்கு" என்று சொல்லிவிட்டு, சில்வர் டம்ளரில் தரப்பட்ட ஆறிப்போன காபியை ஒரே மடக்கில் குடித்துவிட்டு, புல்லட்டில் சென்றார் அந்த இளம் எஸ்.ஐ.



பிரச்னை அவ்வளவு சீக்கிரமாக முடிவதாயில்லை. எல்லோர் மனத்திலும் கனன்று கொண்டிருந்தது.

ஆண்களுக்கான பிரச்னை பெண்களுக்குமாவி, தண்ணீர் எடுக்கும்போது, [illegible]ணம் அள்ளப் போகும்போது ஜாடைமாடையாய்ப் பேசுவது வரை சென்று விட்டது.

அவர்கள் தெருவுக்குள்ளிவர்களும், இவர்கள் தெருவுக்குள் அவர்களும் போவதை அவமானமாக நினைத்துக் கொண்டனர்.

இதற்கு முன்பிருந்த கட்டுக்கொடுக்கல் வாங்கல் பிரச்னையில் பட்டும் சம்பந்தப்பட்டவர்கள் பேசிக் கொண்டனர். மற்றவர்கள் எதிரெதிர் வீடாக இருந்தால் கூட முறைத்துக் கொண்டு சென்றனர்.

ஒரு காலைப் பொழுதில் ஊரிலிருந்த வேலு டீக்கடையில் ஊர்க்காரர்கள் டீ குடித்துக் கொண்டிருந்தபோது, கலைந்த தலையும் கையில் அரிவாளோடும் விறுவிறுக்க விறுவிறுக்க, பதற்றத்தோடு, வெறித்தனமாய் ஓடிவந்து கொண்டிருந்தான் பச்சை

(தொடரும்)



# அகத்தினிலே...

கவிதையின் நேர்த்தியும்
உண்மையான உள்ளடக்கமும்
எழுதுகிறபோது
இருக்கிற நேர்மையும்
எங்காவது, எப்போதாவது
பிசகிப்போகிற பொழுது
உடனே செத்துப் போய்
விடவேண்டும் போலிருக்கி
நாக்கைப் பிடுங்கிக் கொ

உயிர் போகிற
வலியினை விடக் கொடுமையானது,
மனசுக்குப் பிடித்தமானவர்களின்
கண்ணீர்த் துளிகள்.
அதைவிடக் கொடுமையானது
அதற்கான காரணம்
நாமாய் இருப்பதென்பது.

• •



தட்டான்களும்,
வண்ணத்துப்பூச்சிகளும்
மெல்லிறகை விரித்துப் பறக்க
ஒரே செடியில் விதவிதமாய்
மலர்கள் மகரந்தம் பரப்ப
சூரியனின் வெம்மை படராத
ஓர் அடர் கானகத்தினுள்
தென்றலின் விரல் தொட்டு
மெல்லப் பரவிச் செல்ல
வேண்டும் போலிருக்கிறது
வாய்க்கவும் செய்கிறது
சில நேரங்களில்....

## அ.வடிவேல் ஹோசிமின்

கடந்தாண்டு சென்னையில்
சாலைவிபத்தில் இறந்துபோனார்
வடிவேல் ஹோசிமின். அவருடைய
கவிதைகளை அகத்தினிலே... என்ற
தொகுப்பாக வெளியிட்டுள்ளது
தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர்
சங்கம்.
(நிழல்,
10/65, பெரிய ரதவீதி,
திருப்பரங்குன்றம், மதுரை - 5.
விலை ரூ.20/-)

# 15.5.2002 அக்ஷய திருதியை அன்று எங்கே, என்ன வாங்குவது?

"அக்ஷய திருதியை அன்று என்ன விசேஷம்?" என்று எங்களது நண்பர் பிரபல ஜோசியர் புரபசர் V.S. ராஜன் அவர்களைக் கேட்டோம் -

"சூரிய உதயத்தின் போது அக்ஷய திருதியை என்றால் அன்று நாள் முழுக்க அதே திதிதான். நாள் முழுக்க பெரும் விசேஷமான தினம். நல்ல நேரம் பார்க்க வேண்டியதில்லை. உபதேசம் வாங்க, ஜபம் செய்ய, புதுத் தொழில் துவங்க உகந்த நாள்" என்றார். "அது என்ன அன்று மெனக்கெட்டு தங்க நகை வாங்குகிறார்கள்?" என்று கேட்டோம். "அக்ஷய திருதியை என்ற பெயரில் அக்ஷய அல்லது அட்சய என்கிற வார்த்தை விசேஷம். எது தொட்டாலும் எது வாங்கினாலும் அட்சயமாக வளரும். தங்கம்தான் வாங்க வேண்டுமென்பதில்லை. வைரம் வாங்குவது இன்னும் விசேஷம். அடுத்த திருதியை வரை மேலும் மேலும் வாங்கும் சக்தி வரும் வளரும்" என்றார் திரு ராஜன். பற்பல குடும்பங்களுக்கு குருவாக இருக்கும் இவர் (போன்: 8238401, 98410 56079) யோகா, கைரேகை, ஆன்மிக விஷயங்களிலும் ஆசான் சங்கரமட பஞ்சாங்கம் உருவாக்கும் குழு உறுப்பினர்.

நன்றி கூறி விடைபெற்ற நாங்கள் யோசித்தோம். வைரம் வாங்கினால் இன்னும் விசேஷம் என்கிறாரே. "கஸ்டமர்களுக்கு நகை வணிக அனுபவத்திலேயே குறைந்த விலையில் வைரம் விற்பனை செய்வோம்" என்று நினைத்து செயல்பட்ட ஸ்வர்ணாலயா ஜுவெல்லரி திரு சுகுமாரன், திருமதி லலிதா சுகுமாரனிடம் இதுபற்றி கேட்டோம் :

திரு. சுகுமாரன் சொன்னார் :

'தெனாலி' கமலுக்கு ஏற்படாது விட்டுப் போன, ஆனால் பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு இருக்கிற பயம் 'வைர பயம்'தான். என்னென்ன கதைகள்; ('நாகம் தான் கக்கும்' வைரக்கல் வெளிச்சத்தை எமர்ஜென்சி லைட் மாதிரி பயன்படுத்தி இரவில் உலாவரும்; பின்பு அந்த 'மொபைல் லைட்' வைரத்தை விழுங்கி விட்டுச் செல்லும், என்கிற பாம்பிற்குள் வைரம் கதையும் வைரத்திற்குள் பாம்பு கதையும்' பிரபலம்.) உலக முழுவதும் பீடித்திருக்கும் பொருளாதாரப் பின்னடைவு எல்லா வியாபாரங்களையும் எல்லா மூலை முடுக்குகளில் சென்று பாதித்த செய்தியினை அகன்ற நோக்கில் அளந்து செயல்படாமல், "போன வாரம் வைரம் வாங்கிப் போட்டேன். புது ஸ்டாக் ஒன்றுமே போகவில்லை" என்கிற போலி வணிக சமாதானம் அல்லது உண்மையிலேயே மனக்கலவரம் கலந்த நம்பிக்கைகள் இங்கே சர்வ சாதாரணம். இவற்றைக் கிளறிப் புலனாய்ந்து, பயம் என்கிற பாசியைத் துடைத்து, தன்னம்பிக்கை வளர வழி செய்ய வேண்டும் என்பது எங்கள் ஆவல்தான்.



• ஜோசியர் ராஜன்

ஆனால், 'தோஷம்' என்கிற விஷயத்திற்கு தனி மனித நிம்மதியை, வளமையைப் பாதிக்கும் பலம் மட்டுமல்லாது இன்னொரு விஞ்ஞானபூர்வமான பரிமாணம் உண்டு. தோஷம் ஒரு பௌதிகக் குறைபாடு. எந்த வைரத்தில் குறைபாடு இருக்கிறதோ அந்த வைரம் உயர்ந்த, நல்ல, வாங்கக்கூடிய வைரம் அல்ல என்பது உண்மைதான். வைரம், AD, புஷ்பராகம், ரங்கூன் டயமன், கண்ணாடி கல், க்யூபிக் ஜர்க்கான் (zircon), இன்னும் பல வெள்ளைக் கற்கள் ஏராளமாக இருக்கும் போது, வைரத்தை எந்த நம்பிக்கையில் வாங்குவது?

"வைரத்தினை தேர்ந்தெடுக்கும் முன் வைர வணிகரை சரியாகத் தேர்ந்தெடு" என்பது சீனப் பழமொழி. நம்பிக்கையான ஹோல்சேல் வியாபாரிகளிடம் நம்பி வாங்கி நமக்கு விற்கும் நகைக் கடைகளை விட, தானே தேர்ந்தெடுத்து, சிறு தோஷம் இருந்தாலும் நிராகரித்து, பொறுப்புடன் கிடைத்தற்கரிய வைரங்களை விற்பனை செய்யும் எக்ஸ்பர்ட்டுகள்தான் நமக்குத் தேவை. வணிக உலகில் சிந்தனை ஏறாது பிரயோகிக்கப்படும் பாம்பே ஃபைன், கமர்ஷியல் ஒயிட், பெல்ஜியன் கட்டிங், சூரத் கட்டிங், சூப்பர் ஒயிட், ப்ளூ ஒயிட், ப்ளூ ஜாகர் என்கிற வார்த்தைகளை சரளமாகப் பயன்படுத்தும் வியாபாரிகள் அனைவருமே மேலே குறிப்பிட்ட எக்ஸ்பர்ட்டுகள் என்று எடுத்துக் கொள்வது ரிஸ்க்.

உதாரணத்திற்கு 'CUT' என்று எடுத்துக்

கொண்டால் பல பிரபல தினுசுகள் உண்டு. உதாரணமாக Ideal Cut, Tolkowsky Cut, Scandinavian Cut, Practical Fine Cut, Parker Cut என்று ஆசிரியர்களால் வர்ணிக்கப் படும் தினுசுகளில், ஒரு சாம்பிள் கீழே கொடுத் திருக்கிறோம்.



• சுகுமாரன்



• லலிதா

இதில் உள்ள விகிதங் களும் கோணங்களும் கல்லின் பூரிப்பை மேக்ஸிமம் தரும் என்பது நிரூபிக்கப்பட்ட உண்மை. (Ref. Verena Pagel - Theisen's Handbook)" என்று ஒரே மூச்சில் முடித்தார் திரு. சுகுமாரன். வகுப்பறையில் இருந்த உணர்வு வந்தது. 12 வருடம் மதுரை தியாகராஜர் கல்லூரியில் ஆங்கில விரிவுரை யாளராக இருந்தவராயிற்றே.

இதுபோல வைரத்தில் இருக்கிற நுணுக்கங் களை படித்து அறிந்து, ஆராய்ந்து, பலருக்கும் சொல்லிக் கொடுத்து, (சில கஸ்டமர்களுக்கு கௌண்ட்டரிலேயே முதல் பாடம் நடத்தி) இன்று சென்னை மார்க்கட்டிலேயே நம்பர் ஒன் வைர வியாபாரியாக, ஆசிரியராகத் திகழ்கிறார் திரு சுகுமாரன். பல வருடங்களுக்கு முன் லலிதா ஜூவல்லரியின் நிர்வாகத்தில் இருந்த போது எல்லா சேல்ஸ்மென்களையும் இதில் ஊக்குவித்தவர் இவர். இவர் மகள், மகன் அனைவருமே தோஷம் பார்ப்பதில் பட்டம் வாங்கியிருக்கிறார்கள். எப்போதாவது கஸ்டமர் கூட்டம் குறைந்த சிறு இடைவெளியிலும் ஸ்டாக்கில் உள்ள வைரங்களை ஆராயும் அறிவுப்பசி கொண்ட வித்தியாசமான வணிகக் குடும்பம். பழம்பெருமை வாய்ந்த பஜார் கடை களில் வாங்கிய கஸ்டமர்கள் கூட இவரிடம் தனியாக வந்து விலையினையும் தரத்தினையும் பரிசோதித்துக் கொள்கிறார்கள்.

செலவுகள் குறைவாக உள்ள BOUTIQUE ஆக இருப்பதால் மிகச் சிறு இலாபமே போதும் என்கிற பெருந்தன்மையுடன் ஒரு கேரட் ரூ.25000லிருந்து வைரம் விற்க இவர்களால் மட்டும் தான் முடியும். கூடிய விரைவில் செட்டிநாட்டு மார்க்கட்டையே இவர் அசைத்து விடுவார் என்கிற உண்மை புலப்படுகிறது. உபசரிப்பும் சிரித்த முகமுமாய் இவரும் இவர் மனைவி லலிதாவும் செய்யும் சேவை பெரும் பிளஸ் பாயின்டுகள்.

ராதிகா, மீனா, சிநேகா, என்கிற நட்சத்திர எல்லைகளும் டாக்டர்கள், என்ஜீனியர்கள், ஆசிரியர்கள், ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். அதிகாரிகள் முப்படை அலுவலர்கள், வணிகர்கள் வெளி நாட்டு இந்தியர்கள், நடுத்தரவர்க்கத்து இல்லத் தரசிகள், டீன் ஏஜர்கள் என்கிற முழு ரேஞ்சும் இவர்களது கஸ்டமர்கள் லிஸ்ட்டில் அடங்கு வதில் வியப்பே இல்லை.

கையில் லென்சைக் குடுத்து, "அட்லீஸ்ட் இன்று கர்டில், கிரவுன், பெவிலியன் என்று வைரக் கல்லின் பாகங்கள் பார்க்கச் சொல்லிக் கொடுக்கிறேன்" என்று அசத்தி விட்டார். மது ரைப் பல்கலைக்கழகம் ஒரு நல்ல ஆசிரியரை இழந்து விட்டது என்பது உண்மை. இருக்கும் இடத்தை விட்டு இல்லாத இடம் தேடி எங் கெங்கோ அலையாமல் நேராக 15.5.2002 அட் சய திருதியையில் ஸ்வர்ணாலயா ஜூவல் லரிக்குப் போய், "நிறைய சேரட்டும்" என்று வாய் நிறைய வாழ்த்தி விற்கும் திரு சுகுமாரன் கையில் வைரம் மற்றும் தங்கம் வாங்குவது விசேஷம்.

நீங்கள் கேட்க நினைப்பது புரிகிறது- ஆம் மேலும் எல்லா சிறப்பு தள்ளுபடிகளும் உண்டு. கஸ்டமர்களுடைய பழையத் தங்க நகைகளுக் கும் இன்று இருக்கும் உயர்ந்த இன்றைய மார்க் கெட் விலையே தருகிறார்கள் என்பது மிகவும் சாதகமான செய்தி.

— ரஞ்சன் சந்தானம்




Practical Fine Cut - Proportions



# மரத்தடியில்...

சுப்ர. பாலன்

இன்னும் வெய்யில் சரி வரச் சுட்டெரிக்கத் தொடங்கவில்லை. ஆயினும் தர்ப்பூசணிப் பழங்கள் கரும் பச்சைப் பந்துகளாய்ச் சாலையோரங்களில் வந்து குவியத் தொடங்கிவிட்டன.

இலேசாக வெண்மை பூசிய குங்குமச் சிவப்பில் கீற்றுக் கீற்றாய் அறுக்கப்பட்ட தர்ப்பூசணிப் பழத் துண்டுகளை ஒரு மாதிரியான கலைநயத்தோடு பலகையில் பரப்பி வைத்து, ஈக்களோ வண்டுகளோ வந்து மொய்த்துவிடக்கூடாது என்பதற்காக மூடி வைத்திருந்தாள் செந்தாமரை.

பழக் கீற்றுகளை மூடுவதற்கு அவள் பயன்படுத்தியது, குழந்தைகளுக்கான கூடைக் கொசுவலைதான். செங்கமலம் மட்டுமில்லை, சென்னை நகரத்தில் இந்த ஸீஸனில் நிறையப் பேர் பயன்படுத்துவது இந்தக் கூடைக் கொசுவலைகளைத்தான். பழத்தோடுப் போட்டியிட்டுக் கொண்டு இந்த நைலான் கொசுவலைகளும் நிறைய விற்பனையாகும்.

சாலையோரத்தில் வெட்டப்படுவதற்கு இன்னும் நாள் குறிக்கப்படாத ஒரு பெரிய ஆலமரத்தின் தாழ்வான விழுதுக்கரம் ஒன்றில் சின்னப்பன் தூளி ஒன்றைக் கட்டிக்கொடுத்திருந்தான். மூன்று மாதப் பெண் குழந்தை, சிலுசிலுவென்ற மரத்தடிக் காற்றை அனுபவித்து மகிழ்ந்தவாறு அந்த ஏணையில் கிடந்து கால்களை உதைத்துக்கொண்டிருந்தது.

சின்னப்பனுக்குப் பல சோலிகள். செங்கமலத்துக்குக் கடை பரப்பிக் கொடுத்துவிட்டு அவன் தன் வழியே புறப்பட்டுப் போயிருந்தான். வெள்ளெனவே எழுந்து போயாக வேண்டும். அவன் இன்றைக்குப் போயிருக்கிற இடம் வெகு தொலைவு என்பது மட்டும் அவளுக்குத் தெரியும். 'ரவைக்கி எந்நேரமானாலும் வந்து வுளுந்துருவேன். சாக்கிறதையா இரு" என்று அவன் சொல்லிவிட்டுப் போனதை வைத்து அவள் புரிந்துகொண்டது இது.

அவன் என்ன வேலை பார்க்கிறான் என்பதெல்லாம் அவளுக்குத் தேவையில்லாத தகவல். ஏதோ 'உழைத்துச் சம்பாதிக்கிறான்; உட்கார வைத்துச் சோறு போடுகிறான்' என்




நடந்த கட்டட வேலையில் சேர்ந்தபோது சின்னப்பன் பிடித்தது இந்தக் 'குடியிருப்பு'. கொஞ்சம் சண்டை போட்டுத்தான் இந்த இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டான். வாட்ட சாட்டமான பேர்வழி என்பதனால் மட்டும் எதிர்ப்புக் குறையவில்லை. பாவப்பட்ட பெண் ஒருத்தியும் இருக்கிறாளே என்றுதான் அந்த இடத்தை விட்டுக் கொடுத்தார்கள். இந்த நிஜம் செந்தாமரைக்குப் புரியும். சின்னானுக்கும் புரிந்தாலும் ஒப்புக்கொள்வது 'கௌரதைக் குறைச்சல்!'

ரொம்பவும் ஆகிவந்த இடமாகிப் போனது அந்த ஆலமரத்தடி. பொழுது போனால்தான் சங்கடம் எல்லாம். ஒரு மூன்று மணி நேரமாவது பறவைக் கூச்சல் காதுகளைத் துளைத்து விடும். அதேபோல் இற நிறைவு அவளுக்கு உண்டு. பழக்கடை ஒரு பொழுதுபோக்கு மாதிரிதான். பகல் முழுவதும் 'சும்மாக் கெடப்பானேன்' என்று அவளாக ஏற்றுக்கொண்ட வேலை. ஓரளவு காசும் வருகிறது. இந்தக் காலம் போய் விட்டால், வேர்க்கடலை, வாழைப்பழம் என்று எதையாவது கடை போடுவாள்.

ரொம்பப் பெரிய மனிதரின் விசாலமான மனசு மாதிரி அந்த ஆலமரம். குடை நிழல் மட்டுமில்லை; மரத்தின் அடிப்பாகத்தில் கொஞ்சம் பொறை விழுந்து கூடாரமாகவும் ஆகியிருந்தது. மரத்தடியில் சாணத்தால் மெழுகி வைத்திருந்தான். கூட்டுப் பொறைக்கு மேலே ஆணியடித்துக் கோணிச் சாக்கையும் விரித்து மாட்டியிருந்தான். உள்ளே சில அலுமினியப் பாத்திரங்கள், நீல நிறத்தில் ஒரு பிளாஸ்டிக் குடம் என்று தேவைக்கு மட்டுமேயான சில பொருட்களை வைக்க அது போதும்.

கல்யாணமான புதுசில் இந்தப் பகுதியில்

**பொழுதோடேயே மரத்தடிக்கு வந்துவிட்டான் சின்னான். இப்போதுகூடவே ஓர் ஆளுடன் வந்தான். முதல் பார்வையிலேயே அவன் சரியில்லை என்று பட்டது செந்தாமரைக்கு. அதை மனத்தில் முடிச்சுப் போட்டுக்கொண்டாள்.**

காலைச் சூரியன் வருவதற்கு முன்னாலேயே கிச்சுக் கிச்சென்று கத்தித் துளைத்துவிடும். சின்னானுக்கு இந்தச் சப்தம் ரொம்பவும் பிடிக்கும். அந்த மரத்தடியிலேயே கூடுதலாய் ஒரு குஞ்சு சேர்ந்துகொண்டு சப்தம் எழுப்புகிறது; வித்தியாசமான குரலில்! சின்னானுக்கு இவள் பிறந்தபிறகு ஏராளமான உற்சாகம். நிறையக் காசு வருகிறது என்று கூடச் சொல்லுவான்.

அஞ்சாங் கிளாசு வரை படித்தவள் செந்தாமரை. அப்புறம் அவளுக்கிருந்த ஒரே துணையான ஆத்தாளும் போய்ச் சேர்ந்த பின், படிப்பு நின்றுபோனது. எடுபிடி பிள்ளைத் தூக்கி என்று எப்படியோ வயிறு வளர்த்துக் கொஞ்ச நாளில் சின்னானுக்குத் துணையாகி வந்துவிட்டாள்.

"நல்லதா எங்கியாச்சும் எடம் பார்த்துச் சின்னதாக் குடிசை போட்டுறலாம்னு பாக்கேன். ஏங்கூட வேலைக்கு வர்றவுகளும் இதான் சொல்றாக.." என்று சில நாட்களுக்கு முன்னால், மகளை மடியில் வைத்துக் கொண்டு அவன் சொன்னபோது, செந்தாமரையின் கண் முன்னால் ஒரு மாளிகையே உருவாகித் தெரிந்தது. எத்தனை சினிமாக்களில் பார்த்திருக்கிறாள்!

அப்படியெல்லாம் இடம் பார்ப்பது ஒன்றும் அவ்வளவு சுலபமில்லை என்பது அவனுக்கும் தெரியும். காசு பணம் வேண்டும். மிஞ்சி மிஞ்சிப் போனாலும் ஒரு ஆயிரம் ரூபாயாவது தேவைப்படும். அதில் பாதியளவுகூடச் சேர்ந்தபாடில்லை.

இந்தமுறை கொஞ்சம் பெரிய அளவில் தர்ப்பூசணிப் பழக்கடை போட்டபோதே அவன் நினைப்பு இதுதான். பொழுது போக்காய் இருந்தாலும் கொஞ்சம் உதவவும் கூடுமே என்று எண்ணினான்.

**சா**யங்காலம், அவன் சொல்லிப் போனதற்கு மாறாகப் பொழுதோடேயே மரத்தடிக்கு வந்துவிட்டான் சின்னான். இப்போதுகூடவே ஓர் ஆளுடன் வந்தான். முதல் பார்வையிலேயே அவன் சரியில்லை என்று பட்டது செந்தாமரைக்கு. அதை மனத்தில் முடிச்சுப் போட்டுக்கொண்டாள்.

"அண்ணன்... கட்சியிலே பெரிய ஆளு செந்தா! அம்பத்தூர்ப் பக்கம் ஒரு எடங் கெடக்கு... நம்ம ஆளுங்க நாப்பது பேருக்கு அண்ணன் ஏற்பாடு பண்ணிட்டாரு. பெரச்சனை ஒண்ணும் வந்துடாதுங்கறாரு. எத்தினி நாளைக்குத்தான் இந்த மரத் தடியிலேயே கெடக்கிறது. புள்ளை வேறே ஆச்சு..." மிகுந்த நம்பிக்கையோடும் எதிர் பார்ப்போடும் சின்னான் பேசிக்கொண்டே போனான்.

மடியில் கிடக்கும் குழந்தையை விடப் பெரிய குழந்தையாய் இருக்கிறானே என்று நினைத்தாள் அவள், சிரிப்பு வந்தது. வந்த ஆள் ஏதோ அவன் போக்கில் பேசிவிட்டுப் புறப்பட்டுப் போனான்.

"அந்த ஆளு சகவாசம் வாணாம் மச்சான். எனக்கு என்னமோ, அந்தாளு சரியானவராப் படலே.." என்றாள் செந்தாமரை. அவளை ஆழமாகப் பார்த்தான் சின்னான். கனவு மாதிரி வந்த நிலம் கனவாகவே போய் விடுமோ என்று நினைத்துச் சங்கடப் பட்டான்.

'அந்தாளுகிட்டே முந்நூறு ரூபாயைத் தூக்கிக் குடுத்துப்பிட்டேனே...?' என்று சொல்ல அவனால் முடியவில்லை. உண்மை தெரியவரும்போது சமாளித்துக் கொள்ளலாம் என்று மௌனமானான்.

"அண்ணன்கூட இரண்டு மாசமாத்தாம் புள்ளே பளக்கம். எனக்கு ஒண்ணும் தப்பாத் தெரியல்லியே" என்று குழைந்தாலும், செந்தாமரை சொன்னதை அப்படியே நிராகரித்துவிட அவனால் முடியவில்லை.

பறவைகளின் கூச்சல் கொஞ்சங் கொஞ்சமாய் அதிகமானது. சொந்தமாக ஒரு குடிசை வேண்டும் என்கிற கனவு அவனைவிட அவளுக்கு அதிகமாகவே உண்டானது.

**அ**டுத்த காலைப் பொழுது அத்தனை சந்தோஷமாகப் புலரவில்லை அவர்களுக்கு. கருக்கலிலேயே காவல்துறை ஆட்கள் ஏக கெடுபிடியோடு அந்த மரத்தடிக்கு வந்தார்கள். எவ்வளவோ கெஞ்சியும் கேட்காமல் சின்னானைக் கதறக் கதறப் பிடித்து வண்டியில் ஏற்றிக் கொண்டு போனார்கள்.

முதல்நாள் வந்துபோன அரசியல் செல்வாக்கான ஆளை யாரோ வெட்டிப் போட்டுவிட்டார்கள். சாயங்காலம் சின்னானுடன் அந்த ஆள் புறப்பட்டுப் போனதை யாரோ சொல்லி, 'விசாரிப்

---

**"அந்த டாக்டர்கிட்ட எனக்கு செய்யப் போறது மைனர் ஆபரேஷனா? மேஜர் ஆபரேஷனான்னு? கேட்டதுக்கு சண்டைக்கு வந்துட்டார்?"**

**"ஏன் அப்படி?"**

**"நீ கொடுத்த பிச்சாத்து மூவாயிரத்துக்கு மேஜர் ஆபரேஷன் வேற செய்வாங்களாக்கும்னு கேக்கறாரே!"**

**-சீர்காழி ரேவதி**



பதற்காக' அவனை அள்ளிக்கொண்டு போய்விட்டார்கள்.

போதை மருந்து, பெண் பிள்ளை விவகாரம் என்று என்னவெல்லாமோ சொன்னார்கள். முதல் பார்வையிலேயே ஆளை எடை போடுகிற செந்தாமரையின் ஆற்றல் தனக்கு இல்லையே என்று வருந்தத்தான் முடிந்தது.

வீட்டுமனைக்காக என்று எங்கோ யார் யாரிடமோ பணம் வாங்கிய 'அண்ணனை' வெட்டிப் போட்டவன், தானே முன்னால் வந்து ஒப்புக் கொண்டதால் சின்னான் கொஞ்சமாக தர்ம அடியோடு விடப்பட்டான். அவனைப் போல் பணம் கொடுத்து ஏமாந்த சின்னானின் நண்பர்கள் எல்லாரும் சேர்ந்துகொண்டு விட்டார்கள்.

'அண்ணன்' பிழைப்பது சிரமம் என்று பேசிக்கொண்டார்கள். அவன் உயிர் பிழைக்க வேண்டுமே என்று கவலைப்பட்ட வெகு சிலருள் சின்னானும் ஒருவன்.

காவல் நிலையத்தில் என்னென்னவோ காகிதங்களில் கையெழுத்து வாங்கிக் கொண்டு அவனை வெளியே அனுப்பிய போது, வாசலில் கைக்குழந்தையோடு கண்களில் நீர் மல்க நின்றுகொண்டிருந்தாள் செந்தாமரை.

ஆலமரத்தின் வட்டக் குடையருகே அவர்கள் திரும்பி வந்தபோது, பலகை புரண்டு கிடந்தது. பழக் கீற்றுக்கள் சிதறிக் கிடந்தன. பன்றிகளும் மாடுகளும் தின்று பசியாறியிருக்கலாம். 'முந்நூறு ரூபாயைவிட இது ஒன்றும் மோசமில்லை' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான் சின்னான்.

பத்தடித் தொலைவில் பாய் விரித்து அமர்ந்து கைரேகை பார்க்கும் பெரியவர் எழுந்து வந்தார். 'நல்லவேளை தம்பி, வுட்டுட்டானுவளா? அவங்ககூட ஏந் தம்பி சகவாசம்...' என்று தொடங்கியவர் ஓர் அதிர்ச்சி செய்தியையும் சொன்னார்.

"சர்க்கார் ஆளுங்கதான் வந்து ரோட்டை அளந்து பார்த்தாங்க. அகலப் படுத்தப் போறாங்களாம். மரத்தை வெட்டணுமா வேண்டாமான்னு பேசிக்கிட்டாங்க... என்னமோ தம்பி... பச்சப் புள்ளையோட தவிக்கிறீக... எங்கியாச்சும் எடம் பாருங் கப்பா..." என்று பரிவோடு பேசிக்கொண்டே போனார்.

மரத்தில் பறவைகள் சலசலத்தன. செந்தாமரையின் கண்களில் முத்தாய்த் துளித்தது. சின்னான் வானத்தை நிமிர்ந்து பார்த்தான்.○

## அரியலூரில் டினோசர்!

ஏழு கோடி ஆண்டுகளுக்கு முன்பு அரியலூர் கடற்கரையோரப் பகுதியில் டினோசர் போட்ட முட்டை இப்போது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

ஜெர்மனி நாட்டுப் புவியியல் ஆய்வாளர்களான ஆர். கோகலின், கே. பாண்டல், செல்வி டிகோர்ட்டம் மற்றும் அரியலூர் சிமெண்ட் ஆலையின் (ஓய்வு) புவியியல் நிபுணர் எஸ். பார்த்தசாரதி ஆகிய ஆராய்ச்சியாளர்களின் முடிவாக இது 'டினோசர்' முட்டைதான் என்பது தெரிய வந்துள்ளது.



இந்த முட்டையைப் போட்ட டினோசர் அரியலூரைச் சுற்றி சுமார் ஐம்பது கிலோமீட்டருக்குள் வாழ்ந்திருக்கலாம் என்கிறார்கள்.

அரியலூர் சிமெண்ட் ஆலையின் அருங்காட்சியகத்தில், அப்பர் கிரிட்டேஷியஸ் என்ற புவியியல் காலத்தைச் சேர்ந்த பல அரிய கடல் வாழ் உயிரினங்களின் படிமங்களும் வைக்கப்பட்டுள்ளன.

"அரியலூர் மற்றும் அதன் சுற்றுப்புற பகுதிகள் அனைத்தும் சுமார் எழுநூறு லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு கடல் பகுதியாக இருந்துள்ளது. தற்போது நாகப்பட்டினத்தில் கரையைக் கொண்டுள்ள வங்காள விரிகுடா கடல், அப்பொழுது அரியலூர் பகுதி வரை வியாபித்து இருந்துள்ளது. கால சுழற்சியில் உள்வாங்கி தற்போதைய பூம்புகார் கடற்பகுதியோடு நின்றுபோய்விட்டது.

"அரியலூர் சிமெண்ட் ஆலைக்குச் சொந்தமான கல்லங்குறிச்சி சுண்ணாம்புக்கல் சுரங்கத்திலிருந்து பல்வேறு வகையான கடல் வாழ் உயிரினங்களின் படிமங்கள் கிடைத்து வருகின்றன. இப்போது டினோசர் முட்டை கிடைத்திருக்கிறது" என்கிறார் அரியலூர் சிமெண்ட் ஆலையின் செயல் புவியியலாளர் ஆர். முத்தையன்.

– ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# “வேண்டுகோள்”

அசாம் மலைவாழ் இனத்தைச் சேர்ந்த எனது கணவர் திரு. மதன் பசுமதாரி மூளை கட்டி அறுவை சிகிச்சை பெற்று அப்போலோ ஸ்பெஷாலிட்டி மருத்துவமனையில் (Ventilator) சிறப்பு மருத்துவம் பெற்று வருகிறார். எங்களுடைய சிறிய சேமிப்புகளையும் மருத்துவ செலவிற்கு பயன்படுத்திவிட்டோம். மேலும் அவருடைய மருத்துவ செலவிற்கு உதவி செய்யுமாறு வாசகர்களை பணிவாக வேண்டிக் கொள்கிறேன்.

கருணை உள்ளம் கொண்டவர்கள் தங்களுடைய காசோலை, டிராப்ட் முதலியன **‘அப்போலோ ஸ்பெஷாலிடி ஆஸ்பிடல் A/c மதன் பசுமதாரி’** என்ற பெயருக்கு எடுத்து, அப்போலோ ஸ்பெஷாலிடி ஆஸ்பிடல், 320, அண்ணாசாலை, சென்னை - 600 035 என்ற முகவரிக்கு அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு,

திருமதி யசோதா பசுமதாரி

# சிவகாமியின் சபதம்

## இருபத்து எட்டாம் அத்தியாயம்

## சுகரிஷியின் வரவேற்பு

அமரர் கல்கி

அதிசயமான பயங்கர சம்பவங்கள் நிகழ்ந்த அன்றிரவில் அசோகபுரத்துப் பாழடைந்த புத்த விஹாரத்தில் என்ன நடந்தது என்று இப்போது பார்ப்போம்.

அந்த விஹாரத்தில் தன்னந் தனியாக வசித்து வந்த வயோதிக பிக்ஷு இருண்ட சைத்யத்தில் நாகநந்தியுடன் பேசிவிட்டுத் திரும்பி வந்தவுடனேயே, ஆயனரிடம் அங்கிருந்து உடனே புறப்பட்டுச் செல்வது நலம் என்று பிரஸ்தாபித்தார்.

சிவகாமியை அழைத்து ஆயனர் கேட்டபோது, சிவகாமி ஒரே பிடிவாதமாக அங்கிருந்து கிளம்ப முடியாதென்று சொல்லிவிட்டாள். அங்கே சண்டை நடக்கலாமென்று பிக்ஷு சொன்னது, அங்கே இருப்பதற்கு அவளுடைய ஆவலை அதிகமாக்கிற்று. அப்படி நடக்கும் சண்டையைக் கண்ணாலே பார்க்க வேண்டும் என்று விசித்திரமான ஆசை அவள் உள்ளத்தில் உதித்தது. அந்த ஆசையின் மூலகாரணம் மாமல்லர் போர்க்களத்திலே நிகழ்த்தும் வீரச் செயல்களைப் பார்க்க வேண்டுமென்பதுதான். அவளுடைய கற்பனைக் கண்ணின் முன்னால் போர்க்களக் காட்சிகள் தென்படலாயின. நாலாபுறமும் சூழ்ந்து வரும் எதிரிகளுக்கு மத்தியில், மாமல்லர் தன்னந்தனியாக நின்று வாளைச் சுழற்றி எதிரிகளின் தலைகளை வெட்டி வீழ்த்துவது போல் அவள் கற்பனை செய்துகொள்வாள். மறுகணம் அந்தக் கற்பனைக் காட்சியின் கோரத்தைக் காணச் சகியாமல், மனத்தை விட்டு அக்காட்சியை அகற்றி விட முயல்

வான்.

இரவு ஒரு ஜாமம் ஆனபிறகு மறுபடியும் அந்த வயோதிக பிக்ஷு ஓடிவந்து "அபாயம், அபாயம்! உடனே கிளம்புங்கள்! இல்லாவிட்டால், தப்பிப் பிழைக்க முடியாது" என்று உரத்த குரலில் பரபரப்புடன் கூறினார்.

"அடிகளே! இன்னும் என்ன புது அபாயம் நமக்கு வரப்போகிறது?" என்று ஆயனர் அவநம்பிக்கையுடன் கேட்டார்.

"இங்கே யுத்தம் நடக்கலாமென்று நான் முன்னே சொன்னது, உண்மையைச் சொன்னால் ஒருவேளை நீங்கள் நம்பமாட்டீர்கள் என்றுதான். திருப்பாற்கடல் ஏரி உடைத்துக் கொள்ளும் போலிருக்கிறதென்று கேள்விப்பட்டேன். அதனால்தான் போய் விடலாமென்று யோசனை சொன்னேன். இப்போது உண்மையாகவே ஏரி உடைத்துக்கொண்டுவிட்டது. உடனே கிளம்புங்கள்!" என்றார்.

"சுவாமி! ஏரி உடைத்துக் கொண்டால் என்ன? அதற்காக நாம் ஏன் ஓட வேண்டும்!" என்று சிவகாமி சாவதானமாகக் கேட்டாள்.

"திருப்பாற்கடல் ஏரியை நீ பார்த்திருந்தால் இப்படிச் சொல்லமாட்டாய்! நாளைப் பொழுது விடிவதற்குள் இங்கேயெல்லாம் ஒரே வெள்ளமாயிருக்கும்!" என்றார் பிக்ஷு.

சிவகாமி ஆயனர் பக்கம் திரும்பி, "அப்பா! நான் வெள்ளமே பார்த்த தில்லை. நாம் இங்கேயே இருந்து வேடிக்கை பார்க்கலாம். பிக்ஷு வேணுமானால் போகட்டும்!" என்றாள்.

"பெண்ணே! அறியாமையால் பிதற்றுகிறாய்! வெள்ளம் வந்தால் வேடிக்கையிராது. பனைமர உயரம் பிரம்மாண்டமாக வரும். இந்த விஹாரம், சைத்தியம் எல்லாம் மூழ்கி போய்விடும். அப்புறம் என்ன வேடிக்கையைப் பார்க்கிறது?"

"சுவாமி! அவ்வளவு நிச்சயமாய்ச் சொல்லுகிறீர்களே, தங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று ஆயனர் கேட்டார்.

"பத்து வருஷத்துக்கு முன்னால் இப்படித்தான் ஒரு தடவை திருப்பாற்கடல் ஏரி உடைத்துக்கொண்டது. அப்போது நானே பார்த்திருக்கிறேன். இந்தப் பள்ளத்தாக்கில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் செத்துப் போனார்கள். மீதியிருந்தவர்கள் இங்கே குடியிருப்பது அபாயம் என்று வேறு மேட்டுப்பாங்கான இடங்களுக்குக் குடி போய்விட்டார்கள். அந்த வெள்ளத்திற்குப் பிறகுதான் இந்த அசோகபுரம் இப்படிப் பாழடைந்து கிடக்கிறது!"

இதை எல்லாம் கேட்டபோது ஆயனருக்கும் சிவகாமிக்கும் மனக்கலக்கம் உண்டாயிற்று. ஆயினும், இரவில் கிளம்ப அவர்கள் மனம் இசையவில்லை. அதோடு, அப்போது பெருங்காற்றும் மழையும் ஆரம்பித்திருந்தன.

சிவகாமி திடீரென்று நினைத்துக் கொண்டு, "அப்பா! குண்டோதரன் சாயங்காலம் வந்தான்; மறுபடியும் மாயமாய் மறைந்து விட்டானே? இந்தக் காற்றிலும் மழையிலும் எங்கே அகப்பட்டுக் கொண்டானோ, தெரியவில்லையே?" என்று கவலையுடன் கூறினாள்.

"அவனுடைய நடவடிக்கையே இப்போது விசித்திரமாய்த்தானிருக்கிறது!" என்றார் ஆயனர்.

"அதோ கேளுங்கள் சத்தத்தை!" என்றார் பிக்ஷு.

ஆம்; அதுவரையில் கேளாத ஒரு புதுவிதமான சத்தம் அப்போது இலேசாகக் கேட்டது.

ஆயனருக்கும் சிவகாமிக்கும் மனம் கலக்கம் அதிகமாயிற்று. "சிவகாமி, அது என்ன சத்தம்?" என்றான்.

"ஏரி உடைத்துக்கொண்டுவிட்டது... நாளைப்பொழுது விடிவதற்குள் இங்கே

ஒரே வெள்ளமாயிருக்கும்!'' என்றார் பிக்ஷு.

''தெருவெல்லாம் தண்ணீர் ஓடுமோ? இந்த விஹாரத்துக்குள்ளே கூட ஜலம் வந்து விடுமோ?'' என்றாள் சிவகாமி.

''விஹாரத்துக்குள்ளே மட்டுமில்லை; விஹாரத்துக்கு மேலேயுங்கூட வந்து விடும்!'' என்றார் பிக்ஷு.

''சுவாமி! இப்போது என்ன யோசனை சொல்கிறீர்கள்?'' என்று ஆயனர் கவலையுடன் கேட்டார்.

''இப்போது நான் என்ன யோசனையைச் சொல்வது? சாயங்காலமே போய் விடலாமென்று சொன்னேன்: நீங்கள் கேட்கவில்லை. பக்கத்திலுள்ள கிராமத்துக்குப் போய் ஒரு பானைத் தெப்பம் கொண்டு வருகிறேன். அது வரையில் நீங்கள் இங்கேயே இருங்கள். இன்றிரவு நாம் தப்பிப் பிழைத்தால், புத்த பகவானுடைய கருணைதான். ஆஹா! நாகநந்தியடிகள் எப்பேர்ப் பட்ட பொறுப்பை என்னிடம் ஒப்பு வித்து விட்டுப் போய்விட்டார்?''

இவ்விதம் கூறிவிட்டு அந்த வயோதிக புத்த பிக்ஷு நள்ளிரவில் புயலிலும் மழையிலும் விஹாரத்திலிருந்து வெளியில் சென்றார்.

புத்த பிக்ஷு வெளியில் போய்ச் சற்று நேரத்துக்கெல்லாம் அவர் கூறியபடியே உடைப்பு வெள்ளம் அசோகபுரத்தை அடைந்துவிட்டது. முதலில் கொஞ்சமாகத்தான் வந்தது. அப்புறம் மளமளவென்று பெருக ஆரம்பித்துவிட்டது. விஹாரத்துக் கதவுகளின் இடுக்கு வழியாகத் தண்ணீர் உள்ளே வரத் தொடங்கியது. சிறிது நேரத்துக்கெல்லாம் கதவுகளைப் பிளந்து தள்ளிவிட்டு உள்ளே குபுகுபுவென்று பாய ஆரம்பித்தது.

வெள்ளம் பெருகத் தொடங்கியதும் ஆயனர் முதலியோர் முதலில் விஹாரத்தின் வெளிவாசல் திண்ணையில் வந்து நின்றார்கள். ஆனால் மழை, புயல், மின்னல் அசாத்தியமாயிருந்தபடியால், அங்கே நிற்க முடியவில்லை. பிறகு உள்ளே சென்றார்கள். உள்ளே தண்ணீர் புகுந்ததும், மேடைகளில் ஏறி உட்கார்ந்து கொண்டார்கள். மேடைகளிலும் தண்ணீர் வந்ததும், மேல் தளத்துக்குப் போகும் மச்சுப் படிகளில் ஏறி உட்கார்ந்துகொண்டார்கள். அப்படியும் அவர்களை விடாமல் தண்ணீர் மேலே மேலே வந்துகொண்டிருந்தது.

''அப்பா! என் அசட்டுத்தனத்தினால் உங்களை இந்த கதிக்கு ஆளாக்கினேன்!'' என்று சிவகாமி ஆயனரின் கழுத்தைக் கட்டிக்கொண்டு புலம்பினாள். ''ஐயோ! இந்த மானையும் கிளியையும் எதற்காக அழைத்து வந்தேன்?'' என்று வருந்தி, அவற்றை அன்புடன் தடவிக் கொடுத்தாள்.

மானும் கிளியும் ஏதோ பெரிய ஆபத்து வந்திருக்கிறது என்பதை உணர்ந்து, சிவகாமியின் அருகில் வந்து ஒட்டிக்கொண்டு நின்றன.

''குழந்தாய்! நீ என்ன செய்வாய்? இப்படி நாம் கூண்டோடு கைலாசம் போக வேண்டுமென்று விதி இருக்கும் போது எப்படித் தடுக்க முடியும்? அந்த நாகநந்தியின் பேச்சைக் கேட்டு இப்படியாயிற்று!'' என்று ஆயனர் கூறிச் சிவகாமியின் முதுகில் அருமையுடன் தட்டிக் கொடுத்தார்.

''நாகநந்தியின் மேல் ஒரு தவறுமில்லை. எல்லாம் மாமல்லரால் வந்தது. அப்பா!'' என்றாள் சிவகாமி.

சிவகாமியின் உள்ளம் அன்றிரவு அடிக்கடி மாமல்லர்பால் சென்று கொண்டிருந்தது. வாசலில் நின்று தன்னைப் பார்த்தவர், ஒரு வார்த்தைகூடப் பேசாமல் போய்விட்டதை நினைத்து அவளுக்கு ஆத்திரம் ஆத்திரமாய் வந்தது. அவர் நின்று பேசித் தங்களை

யும்கூட அழைத்துப் போயிருந்தால் இப்படி நேர்ந்திராதல்லவா?

எனவே, இந்த வெள்ளத்தில் நாம் செத்துப்போவதே நல்லது. நம்மை இங்கே பார்த்துவிட்டுச் சென்ற மாமல்லருக்கு, ஒரு நாள் இல்லாவிட்டால் ஒருநாள் நாம் இங்கேயே வெள்ளத்தில் முழுகிச் செத்துப் போனது தெரியாமல் போகாது. அப்புறம், அவர் வாழ்நாளெல்லாம் இதை நினைத்து நினைத்துத் துக்கப்படுவாரல்லவா? சற்று நின்று சிவகாமியுடன் பேசாமல் வந்து விட்டோமே என்று வருத்தப்படுவாரல்லவா? படட்டும்! படட்டும்! அவ்வளவு கல்நெஞ்சமுடைய மனிதருக்கு இதுவும் வேண்டும். இன்னமும் வேண்டும்! அப்படி அவரை வருத்தப்படுத்துவதற்காகவே நாம் இங்கே வெள்ளத்தில் செத்துப் போவது நல்லதுதான். ஆனால், பாவம்! - அப்பாவும் அத்தையும் ரதியும் சுகரும் ஏன் இந்தக் கதிக்கு உள்ளாக வேண்டும்? பகவானே திடீரென்று ஏதாவது ஒரு அற்புதம் நேரக் கூடாதா? தன்னைத் தவிர மற்றவர்கள் உயிர் பிழைக்கக் கூடாதா? - தான் மட்டும் சாகக் கூடாதா? - தன்னுடைய துரதிர்ஷ்டம், தலைவிதி, அவர்களையும் ஏன் பற்ற வேண்டும்?

இப்படிப்பட்ட எண்ணங்களில் எவ்வளவு நேரம் போயிருக்கும் என்று தெரியாது. புயலும் மழையும் கொஞ்சம் ஓய்ந்திருப்பது போலத் தோன்றியது. மச்சுக்குப் போய்ப் பார்க்கலாம் என்று நினைத்து எல்லாரும் மேலே போனார்கள். உண்மையாகவே, புயல் ஓய்ந்து, மழையும் விட்டிருந்தது. சிறு தூறல்தான் தூறியது. கிழ்த்திசையில் பரவியிருந்த மங்கலான வெளிச்சம் விரைவில் உதயமாகப் போகிறதென்பதைக் காட்டியது.

அந்த உதய நேரத்து ஒளியில் ஆயனர் முதலியோர் சுற்று முற்றும் பார்த்தபோது, அவர்கள் என்றும் பாராத அதிசயமான காட்சி தெரிந்தது. எங்கெங்கும் ஒரே தண்ணீர்ப் பிரவாகமாயிருந்தது. சற்றுத் தூரத்திலிருந்து கிராமத்துக் குடிசை வீடுகளின் கூரையைத் தொட்டுக் கொண்டு வெள்ளம் ஓடிற்று. வீட்டு கூரைகளும், வைக்கோல் போர்களும், பெரிய பெரிய விருட்சங்களும் அந்தப் பெரு வெள்ளத்தில் மிதந்து சென்றன.

சிவகாமியின் உள்ளத்தின் அந்தரங்கத்தில், 'ஒருவேளை எங்கிருந்தாவது எப்படியாவது மாமல்லர் நம்மைக் காப்பாற்றுவதற்காக வரக் கூடாதா?'' என்ற எண்ணம் தோன்றியது. ''வீணாசை!'' என்று அவளே தன்னைத் தானே திருத்திக் கொள்ள முயன்றாள்.

ஆனால், இதென்ன விந்தை! - கனவு காண்கிறோமா? சித்தப் பிரமையா? - அல்லது உண்மைதானா? - நடக்காத காரியம் நடக்கிறதே? கைகூடாத ஆசை கை கூடுகிறதோ? அதோ வெள்ளத்தில் நீந்திக் கொண்டுவரும் குதிரை மேல் இருப்பவர் மாமல்லர்தானே...? கண்களே! சரியாகப் பாருங்கள்! நெஞ்சே! கொஞ்சம் நிதானித்துக் கொள்! - ஆம், ஆம்; அவர்தான் சந்தேகமில்லை! நடராஜப் பெருமானே, பராசக்தித் தாயே! அருள் புரியுங்கள்! மீதியுள்ள தூரத்தை அவர் அபாயமில்லாமல் கடந்து வந்து சேர வேண்டுமே? - அப்பா! அப்பா! யார் வருகிறார் என்று பார்த்தீர்களா? அத்தை! நீ பார்த்தாயா? - ரதி! உனக்குக் கண் தெரிகிறதா? சுகப்பிரம்ம ரிஷியே! - உமக்கு வாய் அடைத்துப் போய் விட்டதா, என்ன...?

உண்மையில், சுகப்பிரம்ம ரிஷிக்கு வாய் அடைத்துப் போகவில்லை. இரண்டு மூன்று தடவை - தலையை இந்தப்புறமும் அந்தப்புறமும் வளைத்துப் பார்த்துவிட்டுச் சுகப் பிரம்மரிஷி ''மாமல்லா! மாமல்லா!'' என்று கூவி வரவேற்புக் கூறினார்.



## இருபத்து ஒன்பதாம் அத்தியாயம்

# பானைத் தெப்பம்

சி

கரின் வரவேற்புக் குரலைக் கேட்டதும் மாமல்லரின் முகத்தில் புன்னகையின் சாயல் தோன்றியது. சிவகாமி கிளியை அடிப்பதற்காகக் கையை ஓங்க, கிளி அவளுடைய அடிக்குத் தப்பி இறகுகளைச் சட, சட வென்று அடித்துக்கொண்டு ஒரு வட்ட மிட்டு வந்து சிவகாமியின் தோள்களில் உட்கார்ந்த காட்சி, அவருடைய முக

மலர்ச்சியை அதிகமாக்கியது.

அச்சமயம் விஹாரத்தின் ஓரமாகப் பானைத் தெப்பத்தில் வந்து கொண்டிருந்த குண்டோதரனை மாமல்லர் பார்த்தார். கையின் சமிக்ஞையினால் "நில்லு!" என்று ஆக்ஞையிட்டார்.

அதே நேரத்தில் மேலேயிருந்து குனிந்து பார்த்த சிவகாமி, "அப்பா! இதோ குண்டோதரனும் வந்துவிட்டானே! பானைத் தெப்பம் கொண்டு வருகிறான்!" என்று கூறிக் கையைக் கொட்டி மகிழ்ந்தாள். இரவெல்லாம் அவளுடைய மனத்தில் குடி கொண்டிருந்த கவலையும் பீதியும் மறைந்து, இப்போது ஏதோ பெரிய வேடிக்கையில் ஈடுபட்டிருப்பது போன்ற குதூகலம் காணப்பட்டது.

தெப்பம் விஹாரத்தின் தூண்களின் மீது இடிக்காதபடி குண்டோதரன் அதைச் சாமர்த்தியமாகத் திருப்பி விட்டுக்கொண்டு மாமல்லரின் குதிரையண்டை வந்தான். "பிரபு! படகுக்கு வந்து விடுங்கள்!" என்றான்.

"யார் அப்பா நீ! எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கிறதே!" என்று மாமல்லர் கேட்டார்.

"சத்ருக்னனுடைய ஆள், சுவாமி!" என்று கூறிக் குண்டோதரன் தலையில் முடிந்து வைத்திருந்த இலச்சினையைக் காட்டினான்.

"இங்கே எப்படி வந்து சேர்ந்தாய்?"

"என்னுடைய எஜமானர் உத்தரவின் பேரில் எட்டு மாதமாக இவர்களுடன் இருக்கிறேன், பிரபு!" என்றான் குண்டோதரன்.

"தெப்பம் எப்படிக் கிடைத்தது?"

"ஒரு வயோதிக புத்த பிக்ஷு தள்ளிக் கொண்டு வந்தார். அவரை வெள்ளத்தில் நான் தள்ளி விட்டு விட்டு இதைக் கொண்டு வந்தேன்!"

"பிக்ஷுவையா வெள்ளத்தில் தள்ளினாய்? அட, பாவி! ஏன் அப்படிப்பட்ட காரியத்தைச் செய்தாய்?"

"தெப்பத்தில் அவருக்கு இடம் காணாதென்றுதான்! தங்களையும் சேர்த்துக் கணக்குப் பண்ணிப் பிக்ஷுவுக்கு இடம் காணாதென்று பிடித்துத் தள்ளினேன்!"

"நான் வருவேனென்று எப்படித் தெரியும்?"

"அதுகூடத் தெரியாவிட்டால் மகேந்திர பல்லவரின் ஒற்றர் படையிலே இருக்க முடியுமா, பிரபு?"

மாமல்லர் குதிரையின் முதுகிலிருந்து தாவி, பானைத் தெப்பத்தில் வெகு லாவமாக ஏறிக்கொண்டார். பிறகு குதிரையின் முகத்தை இரண்டு தடவை தடவிக் கொடுத்து அருமை ததும்பிய குரலில், "தனஞ்செயா! எங்கேயாவது ஓடித் தப்பிப் பிழைக்கப் பார். கடவுள் உன்னைக் காப்பாற்றுவார்!" என்று கூறினார்.

உடனே தனஞ்செயன் என்னும் அந்தக் குதிரை, வெள்ளத்தில் வேகமாக நீந்திக்கொண்டு, மரங்கள் இரு வரிசையாகத் தண்ணீருக்கு மேலே தலை நீட்டிக் கொண்டிருந்த சாலையை நோக்கிச் சென்றது.

குண்டோதரனும் மாமல்லரும் பானைத் தெப்பத்தைப் பத்திரமாகச் செலுத்திக்கொண்டு விஹாரத்தண்டை சென்றார்கள். மேல் மச்சில் இருந்தவர்களைத் தெப்பத்தில் இறக்குவதற்கு வெகு பிரயாசையாகப் போய்விட்டது. முக்கியமாக, சிவகாமிதான் அதிகத் தொந்தரவு கொடுத்தாள். சற்று முன்னால் வெள்ளத்திலே சாவதற்குத் துணிந்திருந்தவளுக்கு இப்போது உயிரின் மேலே அளவில்லா ஆசையும் வெள்ளத்தைக் கண்டு பெரும் பயமும் உண்டாகி இருந்தன.

யார் முதலில் தெப்பத்தில் இறங்குவது என்பதிலேயே தகராறு ஏற்பட்டது. ரதியை முதலில் இறக்கப் பார்த்தார்கள். அது ஒரு பிடிவாதம் பிடித்து இறங்குவதற்கு மறுத்தது.

ஆயனர் ரொம்பவும் வற்புறுத்திச் சொன்னதின்பேரில் சிவகாமி இறங்கச் சம்மதித்தாள். மேலேயிருந்து ஆயனரும் அத்தையும் பிடித்து இறக்க, கீழே தெப்பத்திலிருந்து மாமலர் கைகளினால் அவளைத் தாங்கி இறக்கி விட்டார். இறங்கியதும் தெப்பம் ஆடியபோது,

சிவகாமி ரொம்பவும் பயந்து அலறினாள். மாமல்லர் அவளைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு உட்கார வைத்துத் தைரியம் சொன்னார்.

பிறகு, அத்தையும் ஆயனரும் இறங்கியபோது, தெப்பம் ஆடியதனாலும் சிவகாமிக்குப் பயம் ஏற்பட்டது.

சுகர், மேலே வட்டமிட்டுக் கொண்டே இருந்தவர், எல்லோரும் தெப்பத்தில் இறங்கியதும், தாமும் வந்து ஒரு மூலையில் உட்கார்ந்து அண்ணாந்து பார்த்து, "ரதி! ரதி!" என்று கூவினார். அப்போது தெப்பம் கொஞ்சம் நகரவே, "ஐயோ! ரதியை விட்டு விட்டுப் போகிறோமே" என்று சிவகாமியும் சேர்ந்து அலறினாள்.

ரதி மேலேயிருந்து ஒரே தாவாகத் தாவித் தெப்பத்தில் குதித்தது. அதனுடைய முன்னங்கால் ஒன்று தெப்பத்துக்கு அப்பால் தண்ணீருக்குள் இறங்கி விடவே, மறுபடியும் சிவகாமி, "ஐயையோ!" என்று கூச்சலிட்டாள்.

எல்லோரும் உட்கார்ந்து எல்லாம் ஒழுங்கான பிறகு, குண்டோதரன், "பிரபு சற்றே படகை நிறுத்தி வையுங்கள். இதோ வந்து விடுகிறேன்!" என்று சொல்லிவிட்டு, தெப்பத்திலிருந்து குதித்து நீந்திக்கொண்டு, விஹாரத்துக்குள்ளே போனான்.

குண்டோதரனுக்கு ஆபத்து வந்து விடப் போகிறதே என்று கவலை சிவகாமியை பீடித்தது. அவன் திரும்பி வருவதற்குள் நேரமாக, ஆக அவளுடைய ஆர்ப்பாட்டமும் அதிகமாயிற்று.

கடைசியாக குண்டோதரன் மேல் மச்சின் வழியாக எட்டிப்பார்த்து, "இதோ வந்துவிட்டேன்!" என்றான். அவன் கையிலே ஒரு மூட்டை இருந்தது. மூட்டையை முதலில் கொடுத்துவிட்டுக் குண்டோதரனும் தெப்பத்தில் இறங்கியதும், "மூட்டையில் என்ன?" என்று ஆயனர் கேட்டார்.

அத்தை மூட்டையைத் தொட்டுப் பார்த்துவிட்டு, 'அவல்!' என்று தெரிவித்தாள்.

"இந்த ஆபத்தான சமயத்தில் கூடக் குண்டோதரன் வயிற்றுப்பாட்டை மறக்கவில்லை!" என்று சொல்லிச் சிவகாமி சிரித்தாள்.

"உங்களுக்குத்தான் என் விஷயம் தெரியுமே, அம்மா! நான் எது பொறுத்தாலும் பொறுப்பேன்; பசி மட்டும் பொறுக்க மாட்டேன்!" என்றான் குண்டோதரன்.

"நல்ல முன் யோசனைக்காரன்!" என்றார் மாமல்லர்.

"சமயசஞ்சிவி என்றால் நம் குண்டோதரன்தான்! பிக்ஷு அவல் வைத்திருந்தது உனக்கு எப்படி அப்பா தெரிந்தது?"

இப்படிக் குண்டோதரனை எல்லோரும் பாராட்டிய பிறகு, தெப்பத்தின் ஒரு முனையில் குண்டோதரனும், இன்னொரு முனையில் மாமல்லருமாக உட்கார்ந்து தெப்பத்தைச் செலுத்தினார்கள்.

விரைவாக ஓடிய வெள்ளத்தில் பானைத் தெப்பம் இலகுவாக மிதந்து சென்றது. ஆனால் வழியில் தென்பட்ட மரங்களில் மோதாமலும் வெள்ளத்திலே வந்த கட்டைகள் தாக்காமலும் தெப்பத்தை மிக ஜாக்கிரதையாக விட வேண்டியிருந்தது.

வானத்தில் மேகங்கள் இன்னும் குமுறிக்கொண்டிருந்தன. காற்றின் வேகம் குறைந்து போயிருந்ததென்றாலும், இலேசாக அடித்த காற்று, உடம்பில் சில்லென்று பட்டது. அவ்வப்போது நீர்த் துளிகள் கிளம்பிச் சுரீரென்று மேலே விழுந்தன.

சற்று நேரத்துக்கெல்லாம் சிவகாமியின் பயம் பறந்துவிட்டது. குதூகலமாய்ச் சிரிக்கவும் விளையாடவும் ஆரம்பித்து விட்டாள்.

"இப்படியே தெப்பத்தில் எத்தனை நாள் போய்க்கொண்டிருப்போம்?" என்று அவள் மாமல்லரைப் பார்த்துக் கேட்டாள்.

"ஏன்! கஷ்டமாயிருக்கிறதா?" என்றார் மாமல்லர்.

"இல்லை, இல்லை, இந்தத் தெப்போத்ஸவம் முடிந்து விடப் போகிறதே என்றுதான் கவலையாக இருக்கிறது" என்றாள் சிவகாமி.

"முடியக் கூடாதா?"

"ஆமாம்; இப்படியே முடிவில்லாமல் என்றென்றைக்கும் வெள்ளத்தில் மிதந்து

## அருள்வாக்கு

'தாளி' என்றால் பனை. தாலிகூட அதிலிருந்து வந்ததுதான். ஸம்ஸ்கிருதத்தில் 'ல'வுக்கும் 'ள'வுக்கும் பேதம் கிடையாது.

ஸ்திரீகளின் ஸௌ மங்கல்யத்துக்கு முக்கியமான சின்னங்கள் காதுத் தோடும் கழுத்திலுள்ள மங்கல ஸூத்ரப் பதக்கமும் தான். ஆதியில் ரொம்பவும் எளிமையாக நம் பெரியோர்கள் வாழ்க்கையை அமைத்துக் கொடுத்திருந்தபோது இந்தக் காதணி, கழுத்தணி இரண்டுமே பனையோலையால் ஆனதாகத்தான் இருந்தன. அதனால்தான் வைரத் தோடானால்கூட அதைப் பிற்காலத்திலும் வைர ஓலை என்று சொல்லும் வழக்கம் ஏற்பட்டது. 'ச்யாமளா நவரத்னமாலை'யில் அம்பாளையே 'தாளீ பலாச தாடங்காம்' என்று சொல்லியிருக்கிறது. அம்பிகையே பனை ஓலையைத்தான் தாடங்கமாகச் சுருட்டிப் போட்டுக்கொண்டிருக்காளாம். கழுத்தின் மங்கள ஸூத்ரப் பதக்கமாகவும் அந்த ஓலை நறுக்கே இருந்திருப்பதால்தான் அதற்குத் தாலி என்று பேர் ஏற்பட்டிருக்கிறது.



**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்**

போய்க் கொண்டிருந்தால் என்ன?"

"ஒருவேளை நீ நினைக்கிறபடி நடந்தாலும் நடக்கலாம். இந்த வெள்ளம் நேரே சமுத்திரத்தில் போய்த்தான் சேரும். தெப்பமும் சமுத்திரத்துக்குப் போய்விட்டால்...?"

"முடிவேயில்லாமல் மிதந்து கொண்டிருக்கலாமல்லவா...? ஒன்று மட்டும் சந்தேகமாயிருக்கிறது."

"என்ன சந்தேகம், சிவகாமி?"

"இதெல்லாம் கனவா, உண்மையா என்றுதான்!"

"கனவு என்பதாக ஏன் உனக்குத் தோன்றுகிறது?"

"இம்மாதிரி தெப்பத்தில் ஏறி முடிவில்லாத வெள்ளத்தில் மிதந்து செல்வதாக அடிக்கடி நான் கனவு காண்பதுண்டு. அதனாலேதான் இதுவும் ஒரு வேளை கனவோ என்று சந்தேகப்படுகிறேன்."

"இந்த மாதிரி சம்பவம் ஒருநாள் நேரிடக்கூடும் என்று நான் எப்போதும் எண்ணியது கிடையாது. ஆகையால் எனக்கும் இது கனவோ என்று சந்தேகமாயிருக்கிறது."

"ஆனால் என்னுடைய கனவிற்கும் இப்போது நடப்பதற்கும் ஒரு வித்தியாசம் உண்டு. கனவில் நான் காணும் படகிலே நானும் இன்னும் ஒரே ஒருவருந்தான் இருப்போம், இந்தப் படகிலே பலர் இருக்கிறோம்!"

"அந்த ஒருவர் யார்?"

"சொல்ல மாட்டேன்!"

பொழுது சாயும் சமயத்தில், கொஞ்ச தூரத்தில் பூமியும், பாறைகளும் மரங்களும் அடங்கிய காட்சி காணப்பட்டது. எப்போதும் முடிவில்லாமல் தெப்பத்தில் போய்க்கொண்டிருக்க ஆசைப்பட்ட சிவகாமிக்குக்கூட அந்தக் காட்சி ஆனந்தத்தை அளித்தது.

ஒவ்வொருவரும் தத்தம் மகிழ்ச்சியையும் திருப்தியையும் பலவிதமாகத் தெரிவித்தார்கள். குண்டோதரனுடைய முகத்தில் மட்டும் மலர்ச்சி காணப்படவில்லை.

"குண்டோதரா! இது என்ன இடம் தெரியுமா? இங்கே நாம் இறங்க வேண்டியதுதானே?" என்றார் மாமல்லர்.

"ஆம், பிரபு! இறங்க வேண்டியதுதான். ஆனால் தீவின் ஓரமாக வெள்ளத்தின் வேகம் கடுமை என்று தோன்றுகிறது. பாறைகள் வேறே இருக்கின்றன!" என்றான் குண்டோதரன்.

தீவை நெருங்க நெருங்க தெப்பத்தின் வேகம் அதிகமாயிற்று.

கரையோரமாக நின்ற சிறு சிறு பாறைகள் தெப்பத்திலிருந்தவர்களின் கண்களுக்குப் பிரம்மாண்ட மலைகளாகத் தோன்றின.

(தொடரும்)



“சில மாதங்களுக்கு முன் இந்தியா இங்கிலாந்து கிரிக்கெட் போட்டி நடந்ததே. அப்போது ஃபிளின்ட் ஆஃப்புக்கு பயங்கர முதுகுவலி. என்னிடம் வந்தார். சில சிகிச்சைகள் கொடுத்தேன். மறு நாளே செம ஃபார்மில் வந்து விக்கெட்டுகளாக எடுத்து

# கிரிக்கெட் டாக்டர்!

> “உங்க எம்.ஜி.ஆர். இப்போது எங்கள் ப்ரூக்லின் மருத்துவமனையில்தான் சிகிச்சை பெற்றுக் கொள்கிறார் என்று சொன்னேன். அவர் வண்டியை நிறுத்தி என் கால்களை முத்தமிட்டு, என் தெய்வத்தைக் கவனிச்சுக்கறவங்குளா நீங்க?” என்றார்.”

இந்திய அணியை ஒரு வழி பண்ணிவிட்டார். என் நண்பர்கள்கூட என்னிடம் விளையாட்டாக ஒரு இந்தியனாக இருந்து கொண்டு இப்படி காலை வாரிவிட்டுட்டியே என்றனர். ஆனால் ஃபிளின்ட் ஆஃப் என் கைகளைப் பற்றிக் கொண்டு தாங்க்யூ என்று மகிழ்ச்சி பொங்கச் சொன்னதை என்னால் மறக்க முடியவில்லை” என்கிறார் டாக்டர் தாமஸ் சாண்டி.

நமது இந்திய கிரிக்கெட் அணியில் அநேகமாக அத்தனை பேருக்குமே சிகிச்சையளித்திருக்கிறார் சாண்டி. “பங்களாதேஷி லிருந்து சமீபத்தில் முர்தஸா சிகிச்சை பெற்றுத் திரும்பினார். 18 வயதேயான முர்தஸா தங்க மகன் என்று பங்களா தேஷில் வர்ணிக்கப்படுகிறார். அவருக்கு அறுவை சிகிச்சை ஏதும் தேவைப்படவில்லை. அவருடைய பௌலிங் ஸ்டைலை மாற்றி, சில எக்ஸர்சைஸ்களும் பிஸியோதெரபியும் கொடுத்ததில் நல்ல குணம். பந்து வீச்சாளர்கள் எல்லோருக்குமே தோள் பட்டையில் பிரச்னை வருவது இயல்பு. ஒரு நாளைக்கு 25 ஓவர்கள் போட வேண்டியிருப்பதால் தோள் பட்டை அத்தனை ஸ்ட்ரெஸ்ஸைத் தாங்க முடியாமல் போகிறது. இதை ஓவர்யூஸ் சின்ட்ரோம் என்கிறோம்” என்று விளக்குகிறார் சாண்டி.

பங்களாதேஷ் அணியின் ஆஸ்திரேலிய பிஸியோதெரபிஸ்டான ஜான் க்ளாஸ்டருக்கு டாக்கா மற்றும் தென் ஆப்ரிக்காவில் தரும் சிகிச்சை திருப்தியளிக்கவில்லை. அவருக்கு டாக்டர் சாண்டி மற்றும் அவருடைய ‘ஹாஸ்மாட்’ மிகவும் பிடித்துப் போய், இப்போது எல்லா அணியினருக்குமே இங்கேயே வருமாறு சிபாரிசு செய்கிறார்களாம்.



அது சரி, ஹாஸ்மாட்?

ஹாஸ்மாட், Hospital for Sports Medicine, Arthritis and Traumaவின் சுருக்கம். பெங்களூரில் இருக்கும் அதி நவீன சாதனங்கள் கொண்ட ஆசிய அளவில்



பிரபலமான மருத்துவமனை. ஆர்த்தோபெடிக் மற்றும் மூட்டு மாற்று அறுவை சிகிச்சைக்கான ஐஎஸ்ஓ 9002 சான்றிதழ் கிடைத்த முதல் மருத்துவமனை என்ற பெருமையும் இதற்கு உண்டு.

ஸ்போர்ட்ஸ் மெடிஸின், ஆர்த்தரைடிஸ் மற்றும் மூட்டு மாற்று அறுவை சிகிச்சையில் டாக்டர் சாண்டி செம கில்லாடி.

"கிரிக்கெட் வீரர்களால் எந்த வித வேதனையையும் தாங்கிக் கொண்டு விளையாட முடியும். ஆனாலும் நம் அணியினரிடம் 'கில்லர் இன்ஸ்டிங்ட்' இல்லை. அந்த மனோபலத்தை வளர்த்துக் கொண்டால் எல்லா மாட்சிலுமே வெற்றி வாகைதான். நான் அவர்களுக்கு நல்ல நியூட்ரிஷன், கார்போஹைட்ரேட், சோயா கலந்த உணவு வகைகள் சிபாரிசு செய்து, உபயோகமான வார்ம்-அப் பயிற்சிகள் சொல்லிக் கொடுப்பேன். லேட் நைட், போதை, மது, போன்றவற்றுக்குத் தடை. மாட்சுக்கு முன்னால் ஹெவியாக சாப்பிடக் கூடாது. இப்படிப் பல செய், செய்யாதேக்களைச் சொல்வேன். அவர்களும் நல்ல பிள்ளைகளாகக் கேட்பார்கள்." சிரிக்கிறார் சாண்டி.

**டா**க்டர் சாண்டி மூட்டு மாற்று அறுவை சிகிச்சையிலும் கெட்டிக்காரர்.

"பிரதமர் வாஜ்பாயின் மூட்டு அறுவை சிகிச்சைக்கென வெளிநாட்டிலிருந்து வந்த டாக்டர் ரானாவத் எனக்கு சீனியர். நல்ல நண்பர்." என்று சொல்லும் சாண்டி இதுவரை 1,500 மூட்டு மாற்று அறுவை சிகிச்சைகளை வெற்றிகரமாக நடத்தியிருக்கிறார். ஹாஸ்மாட்டில் மொத்தம் ஏழு ஆபரேஷன் தியேட்டர்களில் ஒன்று வெறும் மூட்டு மாற்று அறுவை சிகிச்சைக்கெனவே பயன்படுத்தப்படுகிறது.

**சா**ண்டி கேரளத்தைச் சேர்ந்தவராயினும் வளர்ந்தது, படித்தது பெங்களூரில். பெங்களூரில் எம்.பி.பி.எஸ். முடித்துவிட்டு நியூயார்க் போய் மேல் படிப்பு படித்துவிட்டு, அங்கேயே பல பொறுப்பான பதவிகள் வகித்தவர்.

நான் நியூயார்க்கில் இருந்தபோதும் வருடா வருடம் பெங்களூர் வருவேன். அப்போது ஒரு முறை டாக்ஸி ஒன்று வாடகைக்கு எடுத்திருந்தேன். டிரைவருடன் பேசிக் கொண்டிருந்தபோது அவர் தமிழகத்தைச் சேர்ந்தவர் என்பது தெரிந்தது. எம்.ஜி.ஆர். ரசிகர் என்றார். நான் சொன்னேன். 'உங்க எம்.ஜி.ஆர். இப்போது எங்கள் ப்ரூக்ளின் மருத்துவமனையில்தான் சிகிச்சை பெற்றுக் கொள்கிறார். என் நண்பர் டாக்டர் ஸ்ரீபாத ராவ்தான் அவரைக் கவனிக்கிறார்' என்று சொன்னேன். உடனேயே அவர் வண்டியை நிறுத்தி என் கால்களை முத்தமிட்டு 'நன்றி, எங்க தெய்வத்தைக் கவனிச்சுக்கறவங்குளா நீங்க?' என்றார். நான் சிலிர்த்துப் போனேன். என்ன ஒரு அன்பு. என்னிடம் அவர் பணமும் வாங்க மறுத்துவிட்டார். இப்பேர்ப்பட்ட உள்ளங்களை, சென்னையில், தமிழ்நாட்டில் தான் பார்க்க முடியும்" என்று சொல்லும் டாக்டர் தமிழும் பேசுகிறார்.

டாக்டர் சாண்டிக்கு இன்னொரு முகமும் உண்டு. இவர் மிக நல்ல பாடகர். கிடாரில் வல்லவர். ஜாஸ் மியூசிக் க்ரூப் ஒன்று நடத்துகிறார். பல இசை நிகழ்ச்சிகள் நடத்தி அதில் பணம் திரட்டி ஏழை எளியோருக்கு மருத்துவம் பார்க்கிறார். 'ஜாஸ் ஃபார் எ காஸ்' என்கிறார். கதிரி கோபால் நாத்தின் விசிறி. இவருடைய வீட்டில் சுமார் 300 கிடார்கள் கலெக்ஷனாக வைத்திருக்கிறாராம் (கின்னஸ்?).

டாக்டருடைய கொஞ்சு தமிழை கேட்டுக் கொண்டேயிருக்கலாம். சிறு வயதில் 'வீரபாண்டிய கட்டபொம்மன்' பார்த்தாராம். அந்த வசனங்களைக் கேட்டு சிவாஜி கணேசனின் விசிறியாகிவிட்டேன் என்கிறார்.

கிரிக்கெட் மற்றும் இன்னபிற விளையாட்டு வீரர்களுக்கு ஹாஸ்மாட் ஒரு மெக்கா. தவறாமல் இங்கு வருவார்கள். ஸ்ரீநாத், கும்ப்ளே, சடகோபன் ரமேஷ், பிரசாத், பதானி, லான்ஸ் க்ளூஸ்னர்... பட்டியல் வெகு நீளமாகப் போகிறது.

— லதாசேகர்

# இனி யார்தான் பாக்கி?

**கா**ஸெட் மன்னன் குல்ஷன் குமார் கொலை வழக்கு நினைவிருக்கிறதா? ஒரு வழியாக ஐந்து வருடங்கள் கழித்து, அதற்குத் தீர்ப்பு வந்துவிட்டது. குறி வைத்து சுட்ட ராவுத் தாவூத்தைத் தவிர, மற்ற 17 நபர்களையும் போதுமான சாட்சியம் இல்லை என்று விட்டு விட்டார்கள். போலீஸ், முகத்தில் வழிவதைத் துடைத்துக் கொள்ள, கர்சீஃப்பைத் தேடுகிறது. துபாய் டான் அபுசலீமுடன் சேர்ந்து, குல்ஷன் குமாரைத் தீர்த்துக் கட்ட, 'டிப்ஸ்' அதிபர் ரமேஷ் தாவூரானி, நதீம் முதலானவர்கள் சூழ்ச்சி செய்ததாக இவர்கள் உருவாக்கிய கேஸை, கோர்ட் கட்டுக் கதை என்று விட்டதே! இசை உலகம், உதடுகளில் பசை ஒட்டிக்கொண்டு மௌனம் சாதிக்கிறது. குமாரின் மகன் பூஷண் மனம் வெறுத்து, "இனி கோர்ட் கச்சேரி எல்லாம் சித்தப்பாவிடம் விட்டு விட்டு அப்பாவின் பிசினஸைப் பார்த்துக் கொள்ளப்போகிறேன்; அவர் ஆன்மாவுக்குச் சாந்தி கிட்டவேண்டுமென்றால், ஆண்டவன் குற்றவாளிகளைத் தண்டிக்கட்டும்" என்று வேதாந்தி ஆகிவிட்டார். 'டிப்ஸ்' அதிபரின் மகனோ, "என் அப்பாவுக்கு துபாய் கனெக்ஷன் இருந்திருந்தால், 12 நபர்கள் கொண்ட எங்கள் குடும்பம், காட்கோபரில், ஒரு சாலிலா (ஒரே ரூம்) வசிக்கும்?" என்று குமுறுகிறார். சந்தோஷமாய் 'லல்லல்லா' பாடுவது நதீம்-ஷ்ரவண்தான்! "நான்தான் அப்போதே நிரபராதி என்று சொன்னேனே? என்னை லண்டனிலிருந்து இந்திய அரசாங்கம், வெற்றிலை பாக்கு வைத்து மும்பைக்கு ஏன் அழைக்க வேண்டும்" என்கிறார் நதீம்? "கொலைக் குற்றத்திலிருந்துதானே விடுவிக்கப்பட்டிருக்கிறார்? இன்னும் அவர் மீது எக்கச்சக்க வழக்குகள் உள்ளனவே?" என்று கொக்கரிக்கிறார் அரசாங்க வக்கீல். "இன்னும் ஆறே மாதங்களில் நாங்கள் இங்கிருந்து சேர்ந்தே இசை அமைக்க ஆரம்பித்து விடுவோம்" என்று சவால் விடுகிறார் ஷ்ரவண்! யாருக்கு நீதி கிடைத்ததோ?

**நீ**தி கிடைத்திருக்கிறது தையாபியான் பெண்கள் உயர்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியை ஆஸ்மா முகதமுக்கு; பெண்டி



# மும்பை மசாலா



* குல்ஷன் குமார்

பஜாரில் இருக்கும் இந்த 117 வருட பழமையான பள்ளியில் பயிலும் ஆயிரத்து சொச்ச மாணவியரில் பெரும்பாலானோர் 'மைனாரிட்டி' வகுப்பினரே. ஆசிரியர்களில் பாதிப் பேர் இந்துக்கள்! தஸ்நீமா ஹாஜி என்ற கணக்கு டீச்சர் இந்து டீச்சர்களோடு கலந்து பழக மாட்டாராம். மாணவிகள் 'ஹாப்பி தீபாவளி' என்று தப்பித் தவறி வாழ்த்திவிட்டால் கோபம் வந்துவிடுமாம். இவர் இந்துக்களைப் பரம வைரிகளாக பாவித்து, அவமரியாதையாகப் பேசி, இன மத வேறுபாடுகளை, இதமான சூழ்நிலையில் விஷமத்தனமாக விதைத்தது பிடிக்காமல், வேலை நீக்கம் செய்துவிட்டார், அதே மைனரிட்டி இனத்தைச் சார்ந்த தலைமை ஆசிரியை! ஹாஜி இதனை எதிர்த்து வழக்குத் தொடுத்தார். ஆனால் கோர்ட் தீர்ப்பு ஹாஜிக்குச் சாதகமாக இல்லை! இந்த வருடத்தோடு ரிடையராகும் 58 வயது ஆஸ்மா முதைமுக்கு, இந்தத் தீர்ப்பு அருமையான ஓய்வுப் பரிசு! தவறு செய்தவர் தன்னினத்தவரே ஆனாலும், தண்டித்த நேர்மையில், ஆஸ்மா எல்லோருக்கும் ஒரு 'ரோல் மாடல்!'

மாடல்களெல்லாம் பாலிவுட்டில் தடம் பதித்தாகிவிட்டது. விளையாட்டு வீரர்களும் நடிக்க வந்தாகிவிட்டது. இனி யார்தான் பாக்கி? ஏன், டிரெஸ் டிசைனர்கள் இல்லையா? ரோஹித் பால், தருண் தஹிலானி, அகி நெருலா... கைசாத் குஸ்தாதின் என்று புதிய படம் 'பூம்'மில் ஃபாஷன் டிசைனர்கள் பட்டாளத்தைப் பார்க்கலாம்; இவர்களுக்கும் அண்டர்வர்ல்டுக்கும் உள்ள தொடர்பை சில காட்சிகள் படம் பிடிக்கின்றன. சல்மான் ருஷ்டியின் காதலி பத்ம லக்ஷ்மியும் இப்படத்தில் இருக்கிறார். முதலில் தருண் தஹிலானியைத் துபாய் டான்கள் சுட்டுக் கொல்வதாகக் கதை அமைந்திருந்ததாம். தஹிலானியின் நல விரும்பிகள் இதை எதிர்க்கவே, இப்போது கதை மாற்றி அமைக்கப்பட, இவர் பிழைத்துவிட்டார். படம் பிழைக்க வேண்டுமே! 'பூம்' என்று (பாக்ஸ் ஆபீசில்) வெடிப்பது போல பெயர் வைத்திருக்கிறார்களே! விட்டுத் தள்ளுங்கள்... பெயரில் என்ன இருக்கிறது?



* அமிஷா



* பத்மலக்ஷ்மி

பெயரில் என்ன இருக்கிறதா? நன்றாகக் கேட்டீர்கள் போங்கள்.... அண்மையில் ஒரு மல்டிப்ளக்ஸ் தியேட்டருக்கு ஒரு பெண்மணி தொலைபேசி, அங்கு ஓடும் எந்தப் படத்துக்காவது டிக்கெட் கிடைக்குமா? என்று கேட்டிருக்கிறார். ஒரே ஒரு படத்துக்கு மட்டும் கிடைக்கிறதென்ற ஆண்குரல், படத்தின் பெயரைச் சொல்லத்தயங்கியது. 'உங்ககிட்ட எப்டிங்க சொல்வேன்?' என்று பரிதவித்தது. கடைசியில், 'ஹ்ருத்திக்கும் அமிஷாவும் நடிச்ச படங்க' என்று க்ளூ கொடுத்தது. இத்தனை வழிசலுக்கும் காரணம், படத்தின் பெயர்! 'ஆப் முஜே அச்சே லக்னே லகே' (உங்களை எனக்குப் பிடிக்கப் போச்!)... நல்ல வேளை நம்மூர் ஸ்டைலில், 'ஐ லவ்யூ டா' 'ஐ டு லவ் யூ டி' என்றெல்லாம் பெயர் இல்லாமல் இருந்ததே!

– ஜெயஸ்ரீ ராஜ்

● தலித் எழில்மலை பா.ம.கவில் இருந்தபோது அம்பேத்காரிசத்தைப் பிரதிபலிக்கும் நீலகலர் சட்டையை விடாப் பிடியாக அணிந்தவர். ஆனால் இப்போது பொதுத் தொகுதியில் நின்று வென்றிருப்பதால் 'நீலகலர்' சட்டை போட்டு வித்தியாசமாகக் காட்டிக் கொள்ள வேண்டாம்' என்று கட்சி மேலிடம் அவருக்கு அறிவுரை சொல்லியுள்ளதாம். கேட்காமல் இருக்க முடியுமா? இப்போது அவர் நீலக் கலரைத் தவிர்க்கிறார். அச்சிறுப்பாக்கம் தொகுதிக்கு இடைத்தேர்தல் வரும் இந்த நேரத்திலாவது கட்சியில் தமக்கு முக்கியத்துவம் கொடுப்பார் அம்மா என்றும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார் தலித். காரணம் அவரது சொந்த ஊர் அச்சிறுப்பாக்கம் தொகுதியில்தான் இருக்கிறதாம்.

● ஒவ்வொரு சனிக்கிழமை மாலையும் சேப்பாக்கம் சட்டமன்ற அலுவலகத்திற்கு வந்து மக்களின் மனுக்களை கலைஞர் பெற்றுக்கொள்வார் என்பது ஏற்பாடு. அதுபோலவே சமீபத்தில் ஒரு மாலை வந்தபோது, மனுக்களை வாங்கக்கூட அவகாசம் கொடுக்காமல், அவரை ரொம்பவே எரிச்சலடைய வைத்து விட்டார்கள் பகுதி உடன் பிறப்புகள். காரணம் உட்கட்சிப் பூசல்! கலைஞரும் அவரது மகன் தமிழரசுவும் கிளம்பிச் சென்ற பிறகு அலுவலக வாசலில் இரு கோஷ்டிக்குக் கைகலப்பு! நல்லவேளையாக சில நிர்வாகிகள் குறுக்கிட்டுப் பெரிய மோதலாகாமல் தடுத்தார்கள். 'பகுதிச்செயலாளர் தமிழரசுவைக் கையில் போட்டுக்கொண்டு எதேச்சதிகாரமாகச் செயல்படுகிறார்' என்று எதிர்க்கோஷ்டியினர் புகார் சொல்கிறார்கள். "சென்ற தேர்தலைக் கடைசித் தேர்தல் என்று சொல்லிவிட்டதால் கலைஞருக்குப் பிறகு சேப்பாக்கம் தொகுதியைக் குறி வைத்துச் செயல்படும் தமிழரசு எல்லா தரப்பையும் அனுசரித்துப் போவது நல்லது. தனது சொந்த வீடான சேப்பாக்கத்தைக் கலைஞர் கவனிக்க வேண்டும். இல்லையேல் தலைவலி திருகுவலி ஆகிவிடும்" என்கிறார்கள் உடன்பிறப்புகள்.

● அமலாக்கப் பிரிவில் அம்மா மீது வழக்குகள் எதுவும் இல்லை. ஆனால் தோழி, தினகரன் மற்றும் அவர் சகோதரர்கள் மீது வழக்குகள் இருக்கின்றன. சிறிது காலத்துக்கு முன்னர் அமலாக்கப் பிரிவு விதிமுறைகள் மாற்றப்பட்டன. "அந்நியச் செலாவணி ஒழுங்குபடுத்தும் சட்டம் (FERA) அந்நியச் செலாவணி நிர்வகிக்கும் சட்டம் (FEMA) என்று மாற்றப்பட்டது. திருத்தப்பட்ட புதிய சட்டத்தால் கைது, ரிமாண்ட் போன்ற விஷயங்களில் அமலாக்கப் பிரிவு அதிகாரிகளுக்கு இருந்த அதிகாரங்கள் வெட்டப்பட்டன. குற்றம் நிரூபிக்கப்பட்டால் அபராதம் என்று போடப்பட்டது. இதற்குக் காரணம் மாறி வரும் சூழலுக்கேற்ப வெளிநாட்டு முதலீடுகளை இந்தியாவுக்குக் கொண்டு வருவதில் எந்தச் சிக்கலும் இருக்கக்கூடாது என்பதுதான். இந்தப் புதிய சட்டம் வந்தவுடன் 'அப்பாடா' என்று பெருமூச்சு விட்டார்கள் தோழி குடும்பத்தினர். ஆனால் இப்போது ஓர் அதிர்ச்சி. புதிய சட்டம் வந்தாலும், ஏற்கென்வே பதிவு செய்யப்பட்ட வழக்குகள், பழைய சட்டப்படியே (FERA) தொடர்ந்து

## கெட்ட வார்த்தையா? கேட்ட வார்த்தையா?

விசாரிக்கப்படுமாம். அதன் காலக் கெடு இரண்டாண்டுகள் நீட்டிக்கப்பட்டுள்ள தாம். அம்மா பா.ஜ.க அரசிடம் தாஜா செய்து கொள்ள முயல்வதற்கான பல காரணங்களில் இதுவும் ஒன்று என்று சொல்கிறார்கள்.

● சட்டமன்றத்தில் ஜெயலலிதாவும் அமைச்சர்களும் கலைஞர் மீது குற்றம் சாட்டுகையில், அதை மறுக்க அனுமதி மறுக்கப்படுவதாக தி.மு.க உறுப்பினர்கள் புகார் கூறுகிறார்கள். இந்த மோதலில் மாட்டிக் கொண்டு தவிப்பவர் சபா நாயகர் காளிமுத்துதான். பல சமயங்களில் தி.மு.க உறுப்பினர்களின் கோபம் சபாநாயகர் மீது பாய்கிறது. சபைக் குறிப்பில் இடம் பெறாத தடித்த வார்த்தைகள் அரங்கேறுகின்றன. ஆபாச பேச்சுக்கள் பேசப்படுவதாகக் குற்றம் சாட்டப்பட்டு வெளியேற்றப் படுகிறார்கள் தி.மு.க எம்.எல்.ஏக்கள். இப்படிச் சமீபத்தில் வெளியேற்றப்பட்ட பின்னர் கலைஞரைச் சந்தித்து நடந்ததை விளக்கினார்கள் அவர்கள். ''நீங்கள் பேசியது கெட்ட வார்த்தை போலத் தெரியவில்லையே; எங்கோ 'கேட்ட' வார்த்தைகளாகத் தானே இருக்கின்றன'' என்றாராம் கலைஞர்.



• காளிமுத்து



• தலித் எழில்மலை



• மு.க. தமிழரசு



● முரசொலி மாறனின் பினாமி இந்தியா சிமெண்ட்ஸ் சீனிவாசன் என்று சட்டசபையில் குற்றம் சாட்டினார் ஜெ. இரு தொழிலதிபர்களுக்கிடையே இருக்கும் மோதல்தான் அரசியல்வாதிகள் வாய் வழியாக குதிப்பதாக கிசுகிசுக்கிறார்கள் கார்ப்பரேட் வட்டாரத்தினர். உரத் தொழிலதிபர் ஒருவர் இன்றைய ஆளும் கட்சிக்கு வேண்டியவர். கடந்த காலத்தில் சிமெண்ட் அதிபர் அவரது தொழிற் சாம்ராஜ்யத்தை ரொம்பப் படுத்தி விட்டாராம். அது தவிர இருவரும் தமிழ்நாடு கிரிக்கெட் அஸோஸியேஷனின் விவகாரத்தில் முஷாரப்பும், பேனசிருமாக இருக்கிறார்களாம். இப்படிப்பட்ட போட்டிகள் காரணமாக, அரசியல்வாதிகள் மூலமாக குழிப்பறிப்பு வேலைகள் நடக்கின்றனவாம். இப்போது காற்று, உரத் தொழிலதிபருக்கு ஆதரவாக வீசுகிறது!

— சஞ்சயன்

# சர்வதேச நீதிமன்றத்தில் மோடி மீது வழக்காமே?

## நீங்கள் கேட்டவை • தராசு

● ப. சித்ரா, மலப்பாம்பாடி அஞ்சல்

*? பல நேரங்களில் எதிர்க்கட்சியினர் பேசும்போது சட்டப்பேரவையில் அ.தி.மு.க. வினர் கூச்சல் போடுவது எதைக் காட்டுகிறது?*

! அவையில் நடைபெறும் விவாதங்களே சாரமின்றி வெறும் கிழிந்த ஜிப்பாவும் தகரடப்பாவுமாக மாறி வருவதைத்தான்!

● ஆரோக்கியதாஸ், சென்னை - 8

*? சட்டிஸ்கர் மாநிலத்தில் எட்டு, ஆறு வயதில் திருமணங்கள் நடந்து கொண்டு தானே இருக்கின்றன. அம்மாநிலத்து அரசு அதிகாரிகள் வேடிக்கை பார்த்துக் கொண்டுதானே இருக்கிறார்கள்?*

! பெண்களுக்குப் பதினெட்டு வயதுக்கு முன்னரும் ஆண்களுக்கு 21 வயதுக்கு முன்னரும் திருமணம் செய்யக் கூடாது என்று சட்டமே இருக்கிறது. அதை அமல்படுத்துவதில்தான் பலான காரணங்களால் தயக்கம். தயாராகாத உடலையும் மனத்தையும் திருமண பந்தத்துக்கு உட்படுத்துவது கொடுமை என்கிற உணர்வு பெற்றோருக்கு வர வேண்டும். அப்படி வருவதற்குப் பண்பட்ட கல்வி மிக அவசியம். அது இல்லாததால்தான் பிரச்னைகள்.

● உமரி பொ.கணேசன், மும்பை-37 ★

*? தமிழக சினிமா தியேட்டர்களில் கவுன்டரிலேயே அதிக விலைக்கு டிக்கெட்டுகள் விற்பனை செய்வது அரசுக்குத் தெரியாதா? அரசும் அதன் பங்குக்கு அதிக விலைக்கு விற்பனை செய்ய அனுமதி கொடுத்துள்ளதே?*

! விதிமுறைகளை மீறி கட்டடம் கட்டும் போது எப்படி, எதற்காக அனுமதிக்கிறார்கள்? அப்புறம் எதற்கு கட்டணம் பெற்றுக் கொண்டு அதை 'ரெகுலரைஸ்' பண்ணுகிறார்கள்? அதைப் போல்தான் இதுவும்!

● ஜி. ஜெயராமன், கூந்தலூர்

*? கனவு- கற்பனை - வித்தியாசம் கூறவும்.*

! கனவு - இறுதி இலக்கு. கற்பனை - அதை எவ்வாறு அடைவது என்பதற்கான மானசிக வரைவுத் திட்டம்.

● டி.எஸ்.டி.ராயன், மயிலாடுதுறை ❒

*? இனப்படுகொலை செய்தார் என்று முதல்வர் மோடியை நாடு கடத்தி சர்வதேச கோர்ட்டில் வழக்குத் தொடர லண்டனில் வாழும் குஜராத்தியர் ஏற்பாடு செய்கிறார்களாமே..?*

! சர்வதேச கோர்ட்டில் வழக்கு நடந்து, மோடி தண்டனை பெறுவாரா? என்பது ஒரு புறமிருக்க, இத்தகைய சிந்தனை அயல்நாட்டில் வாழும் இந்தியர் உள்ளங்களில் கூட எழுந்திருக்கிறது என்றால், இங்கு நிலைமை அவ்வளவு மோசம் என்றாகிறது அல்லவா? இவரைப் போய் புனிதனாக்க பி.ஜே.பி. தலைவர்கள் செய்யும் முயற்சி படு பாதகமானது அல்லவா!



• 'புனிதப்' போர்வை!

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
டி.எஸ்.டி. ராயன்,
197பி, உடையார் தெரு, நல்லத்துக்குடி,
மயிலாடுதுறை - 609 001

● வி. ஜானகி, சென்னை - 4

? நடுநிலைமை என்பது பிரச்னைகளி லிருந்து நழுவுவதுதானே?

! இல்லை; யார் தவறு செய்தாலும் அஞ்சாமல் சுட்டிக் காட்டுவது. திருத்தி மாற்ற முயற்சி செய்வது.

● எம். ராஜேந்திரசோழன், பல்லவநாடு

? அரசுகளின் கடனை நாமே ஏன் நேரில் அடைக்கக் கூடாது. அதாவது பொது மக்களிடமிருந்து நன்கொடை பெற்று...?

! இப்போது மட்டும் யார் அடைக்கிறார்கள் என்று நினைக்கிறீர்கள்? ஒருவர்





● ஆட்சியும்...



● ... ஆங்கிலமும்!



● பட்டியல் கைங்கர்யம்!

பாக்கியின்றி எல்லா மக்களும்தான் நேர்முக, மறைமுக வரிகள் செலுத்தி கடன் அடைக்க உதவுகிறார்கள். பிரச்னை என்ன வென்றால் வட்டி செலுத்தவே வரி வருமானம் முழுதும் தீர்ந்து போகும் அளவுக்குப் பல்வேறு அரசுகளின் கடன் சுமை அதிகரித்து வருகிறது. இந்த அபாயத்திலிருந்து மீள ஒரே வழி; உற்பத்திக்கு உதவாத செலவினங்களை மத்திய, மாநில அரசுகள் கட்டுப்படுத்துவது தான்; இல்லையெனில் அர்ஜென்டினா கதிதான் நமக்கும்!

● கே. முரளிதரன், மதுரை - 10

? சைதாப்பேட்டை, வாணியம்பாடி தொகுதிகளில் அதிகாரிகள் மாற்றம் செய்ததில் அரசுக்கு எந்த உள்நோக்கமும் இல்லை என்று அமைச்சர் துரைராஜ் கூறியுள்ளாரே?

! இப்படிக் கூறுவதிலும் உள்நோக்கம் உண்டு என்று உணர்க.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? முன்னாள் முதல்வரின் ஆங்கில அறிவு குறித்து இந்நாள் முதல்வரின் விமர்சனம் எப்படி...?

! ஆங்கிலம் தெரிந்தவர்கள் எல்லோருமே ஆளத் தெரிந்தவர்களாகி விட மாட்டார்கள்; ஆங்கிலம் தெரியாதவர்கள் ஆளத் தகுதியற்றவர்களாகவும் ஆகிவிட மாட்டார்கள். இவரும் மொழி பெயர்ப்பை நம்பிப் பேசியிருக்க வேண்டாம்; அவரும் அடக்கமின்றி வார்த்தைகளை உதிர்த்திருக்க வேண்டாம்.

● ப.நாகலட்சுமி, கிழக்கு தாம்பரம்

? காதல், ஒருவனைப் பித்தனாக்குகிறது... அப்படியானால் அரசியல்...?

! பித்தலாட்டக்காரனாக்குகிறது!

● ஆர். ராமசுப்பிரமணியன், வடவள்ளி

? பிரபாகரன் பத்திரிகையாளர் சந்திப்பு பாதுகாப்பு ஏற்பாடுகள் பற்றிய தராசின் பதில் சரியல்ல. அவரது பாதுகாப்பு குறித்த அச்சம் நியாயமானதே. அப்படிப் பார்த்தால், 'மக்களெல்லாம் என் பக்கம்' என்று சவால் விடும் ஜெயலலிதா, சுப்ரமண்யன் சுவாமி போன்றோருக்குக் கறுப்புப் பூனைப்படை பாதுகாப்பு எதற்கு?

! புலிகளின் 'ஹிட் லிஸ்ட்'டில் அவர்கள் இருப்பதால்தான்!

● மின்னல் பரிதா, கரூர்

? தமிழக காவல்துறையை உலகிலேயே சிறந்ததாக ஆக்கிக் காட்டுவேன் என்று தமிழக முதல்வர் உறுதி பூண்டிருப்பது குறித்து...?

! சென்னை மாநகரில் நடக்கும் நித்தியப்படி கொலை, கொள்ளைகளுக்குக் காரணமாயிருப்பவர்கள் இதைப் படித்துவிட்டு ரகசியமாகச் சிரித்துக் கொண்டிருப்பார்கள்.

**★ ரூ.50 பரிசு பெறுபவர் :**
**உமரி பொ. கணேசன்,**
ஸ்ரீ நாராயணா ஸ்டோர், ஏ-114,
மோதிலால் நேரு நகர், ஆன்டாப் ஹில்,
மும்பை - 400 037.

தலம்தோறும் தமிழ்க் கடவுள் - 25

குருஜி ஏ.எஸ். ராகவன்

# சென்னிமலைச் செல்வன்



முருகன் என்று சொன்னதுமே வேல் பிடித்த கரமும் மயிலாரோகணமும்தான் ஞாபகம் வரும். அடுத்து அவனது இரு தேவியரும் ஞாபகம் வருவார்கள். ஆனால், ஆகம சிற்ப சாஸ்திரப்படி பார்த்தால் பதினாறு வகையான தோற்றங்கள் உண்டு முருகனுக்கு.

ஆறுமுகம், ஆறு கரங்கள் கொண்ட கார்த்திகேய மூர்த்தி; ஆறுமுகம், எட்டு கரங்களுடன் கிரௌஞ்ச பேத மூர்த்தி; ஒரு முகமும் இரு கரங்களுமாக் சரவணபவர், இரு முகங்கள் எட்டு கரங்களுடன் அக்னிஜாத சுப்ரமண்யர் என்று பல்வேறு அரிய தோற்றங்கள் நாம் அதிகம் அறியாத தோற்றங்களாக இருக்கின்றன.

பதினாறு வகை தோற்றங்கள் ஏன், எவ்வாறு ஏற்பட்டன? அவற்றின் தாத்பர்யம் என்ன? என்றெல்லாம் ஆராயப் புகாமல் நாம் ஓர் அரிய தோற்றத்து சுப்ரமண்யரைக் காணப் புறப்படுவோம்.

போக வேண்டிய இடம் சென்னிமலை.

தமிழ்நாட்டில் வடசென்னிமலை, தென்சென்னிமலை என்று இரண்டு தலங்கள் உள்ளன. நாம் காணப் போவது தென்சென்னிமலை. ஈரோடிலிருந்து கோவை செல்லும் வழியிலுள்ள ஈங்கூர் என்னும் ரயில் நிலையத்திலிருந்து சுமார் எட்டு கி.மீ. தொலைவில் இருக்கிறது சென்னிமலை. சிருகிரி, சிகரகிரி, சென்னியங்கிரி, புஷ்பகிரி என்று பல பெயர்கள் கொண்டது. சென்னிமலை, ஊறிமலை, வட்டமலை, சிவன்மலை, திருமுருகன் பூண்டி என்று ஒரே பகுதியில் உள்ள ஐந்து மலைகளுள் தலையாயது சென்னிமலை. (சென்னி-தலை) – இப்படி ஒரு பெயர்க் காரணம் சொல்லப் படுகிறது! இம்மலை மற்றவற்றைக் காட்டிலும் அளவில் பெரிதாக இருப்பதால் பொருத்தமான காரணம்தான்.

மலை உச்சியை அடைய, வாகனங்களுக்குத் தனிச் சாலை உண்டு. படி ஏறுவோர், 1279 அடி உயர உச்சியை அடைய 1320 படிகள் ஏற வேண்டும்.



புளியமரத்தடியில் ஒரு பிள்ளையார் இருக்கிறார். பெயரும் புளியடிப் பிள்ளையார் தான்! புளியமரம்தான் தலவிருட்சமும் கூட!

மலையடிவாரத்தில் உள்ள இடும்பனையும் அதன்



செல்வதாகக் கூறப்படும் குகையும் உள்ளன. சித்தர்களுக்கும் முருகன் திருத்தலங்களுக்கும் உள்ள தொடர்பு குறித்து தனியொரு ஆராய்ச்சி நடத்தலாம் என்று தோன்றுகிறது.

வலம் வருகையில், கருவறையின் வெளிப் புரையில்தான் இருக்கிறது நாம் தேடி வந்த அரிய முருகனின் உருவச் சிலை.

பின்னர் வழியிலிருக்கும் மலைவழி விநாயகரையும் வணங்கிவிட்டு மேலே செல்கிறோம்.

வழியில் மாமாங்க தீர்த்தம், குமார தீர்த்தம், சரவணப் பொய்கை தீர்த்தம் என்று நீர் நிலைகள் கண்ணில் படுகின்றன. நமது கண்களுக்குப் புலப்படாத 'காணாச் சுனை' ஒன்றும் இருப்பதாக அறிகிறோம். ஞானிகளின் கண்களுக்கு மட்டும்தான் புலனாகுமாம் இந்தக் 'காணாச் சுனை'.

மலையுச்சிக் கோயிலில் சென்னிமலை முருகன் தண்டபாணி திருக்கோலத்தில் காட்சியளிக்கிறான். கிழக்கு நோக்கி நின்று கதிரவனுக்குச் சவால் விடுகின்ற முக தேஜஸ்! சற்று நேரம் சமைந்து போய் நிற்க வைத்துவிடுகிறது அவன் அழகு. அவனை வலம் வருகையில், வள்ளியும் தெய்வானையும் அமிர்தவல்லி, சுந்தரவல்லி என்ற பெயர்களுடன் தனி சன்னிதிகளில் இருப்பதைக் காண்கிறோம். இந்திரனின் மகன்களான இவர்கள் முருகனை அடையத் தவமிருந்து, பின்னர்தான் வள்ளி தெய்வானையராக அவதரித்ததாக புராணம். தவக்கோல கன்னிகையர் விழி மூடியிருக்க, நாம் அவர்களை விழி மலர்ந்து ஆவலுடன் தரிசிக்கிறோம்.

இன்னும் சென்றால் பிண்ணாக்குச் சித்தர் சமாதியும், பழநி போகர் சந்நிதிக்குச்

'அக்னிஜாத சுப்ரமண்யர்' என்ற கம்பீரமான பெயருடன் போட்டிப் போடுகிற கம்பீரத் தோற்றம்:

இரண்டு திருமுகங்கள்; எட்டு திருக் கரங்கள். தலையில் கிரீடங்கள் தாங்கி ஜொலிக்கிறார். நெய்பாத்திரம் (அக்னி வளர்ப்பதற்கு), கத்தி, கேடயம், உருமுத்திரை, அபயமுத்திரை என்று கைக்குக் கை பூஷணங்கள்.

முருகனின் வேறு பல தோற்றங்களும் இங்கே காணக் கிடைக்கின்றன.

சிரகிரி வேலாயுதர் என்று ஆறு முகனாக ஒரு தோற்றம். முகத்துக்கொரு புன்னகை போதாதென்று பன்னிரு விழிமலர்களிலும் ஒளிரும் சிரிப்பு! இந்த முருகனுக்கும் பன்னிரு கரங்களில் பன்னிரு ஆயுதங்கள். மார்பில் கடப்ப மாலை; தோள்களில் வாகுவலையம். இடையில் செம்பட்டாடையுமாக, திருவடிகளில் தண்டையும் சிலம்பும் ஒலிக்க நடந்தே வந்து நம்மை ஆட்கொண்டுவிடுவார் போலிருக்கிறது. இவர்தான் இத்தலத்தில் சரவண முனிவர் என்பவருக்கு முதன் முதலில் காட்சி தந்த முருகன். தண்டாயுதபாணி தோற்றத்து முருகன் இதே முனிவருக்கு இரண்டாவது முறையாகக் காட்சி தந்தவராம். முனிவர் விருப்பப்படி தண்டாயுதபாணி மலைக்கோயிலிலும் சிரகிரி



வேலாயுதர் மலைநகர்க் கோயிலிலும் எழுந்தருளியிருக்கிறார்கள்.

சிரகிரி என்று திருச்சிராப்பள்ளி மலைக் கோட்டைக்கு ஒரு பெயர் உண்டு. 'சிரகிரி விளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே!' என்று தாயுமானவரின் பாடலில் பதிவு பெற்றுள்ளது இப்பெயர். அப்பர், ஞானசம்பந்தர் தேவாரப் பாக்களிலும் சிரகிரி என்பது திருச்சியையே குறிக்கிறது.

ஆனால், அருணகிரிநாதர் இச்சென்னி மலையைத்தான் தமது திருப்புகழில் சிரகிரி என்று குறிப்பிடுகிறார்.

*பகலிரவினிற் றடுமாறா; பதி குருவெனத்*
*தெளிபோத;*
*ரகசியமுரைத் தநுபூதி; ரதநிலைதனைத்*
*தருவாயே*
*இகபரமதற் கிறையோனே;*
*இயலிசையின் முத்தமிழோனே*
*சகசிரகிரிப் பதிவேளே; சரவணபவப்*
*பெருமாளே*

அருணகிரியார் குறிப்பிடும் சரவணபவப் பெருமாள் 'ஸ்ரீதத்வநிதி' என்கிற சிற்ப சாஸ்திர நூலில் குறிப்பிட்டுள்ளபடி சிம்ஹ வாகனத்தில் காட்சி தருகிறார்.

ஞானசம்பந்தருக்கும் அப்பருக்கும் சிவபெருமான் படிக்காசு தந்து அருளியது போல் சென்னிமலை முருகன், அருணகிரி நாதரின் திருப்புகழைக் கேட்டு மகிழ்ந்து படிக்காசு தந்ததாக புராணம்.

*நாட்டில் அருணகிரி நாதன் திருப்புகழ்*
*சொல்*
*பாட்டின் மகிழ்ந்து படிக்கா சளித்த*
*பிரான்*
*தாலமிருஞ் சென்னிமலை தன்னில்*
*வளர்கல்யாண*
*வாலகப்ப ராயனென்று வாணர்புகழ்*
*வாசலினான்*

– இது 'சென்னிமலையாண்டவன் காதல்' என்ற நூலில் இடம்பெறும் பாடல்.

கண்ட கணத்திலேயே நாமும் காதல்கொள்ளும்படிதான் அவனுடைய ஒவ்வொரு தோற்றமும் இருக்கிறது. பால தண்டாயுதபாணி ஆயினும் சரி, சரவண பவன் ஆயினும் சரி, சௌரபேயன் ஆயினும் சரி... அத்தனைத் தோற்றங்களும் பொலிவுதான். அத்தனை பொலிவுக்கும் காரணம் அவன் எல்லையில்லா கருணைதான். ○

# மரப்பெயர்ச்சி!











திருச்சி – செம்பட்டு விமான நிலையமருகே சாலையை அகலப் படுத்த நெடுஞ்சாலைத் துறையினர் முயன்றனர். வரிசையாகப் புளியமரங் கள். அவற்றை எப்படி வெட்ட? பார்த்தார் திருச்சி கலெக்டர் க. மணி வாசகன். இளம் மரங்களை அப்படியே மற்றொரு இடத்துக்கு 'மரப்பெயர்ச்சி' செய்யலாமே என்று யோசனை சொன் னார். ஐடியா 'ஒர்க் அவுட்'ஆக, நிகழ்ந்தது மரப்பெயர்ச்சி!

— திருநாவு



• க. மணிவாசகன்



# 25வது வயதில் இலக்கிய சரணாலயம்!

**இலக்கிய சரணாலயம் என்கிறார்கள் அவரை. பறவைகள் சரணாலயமான வேடந்தாங்கலைத் தமது அமைப்பு மூலம் இலக்கியச் சரணாலயமாக்கியதால் மட்டுமல்ல; இன்று பிரபலமாக இருக்கும் சில எழுத்தாளர்களுக்கு ஆரம்ப கால அஸ்திவாரம் போட்டதால் என்கிறார்கள். மற்றவர்களின் படைப்புகளை உயர்த்த தாம் படைப்பதையே நிறுத்திவிட்ட அந்தச் சரணாலயம் 'இலக்கிய வீதி' இனியவன்!**

**இன்னும் ஒரு மாதத்தில் இருபத்தைந்தாவது வயதில் அடியெடுத்து வைக்கும் 'இலக்கிய வீதி' பற்றி மனம் திறந்தார் இனிமையான நினைவுகளுடன்.**

வேடந்தாங்கல்தான் சொந்த ஊர். அறுபதுகளில் சிறுகதைகள் எழுதத் தொடங்கிவிட்டேன். அப்போது என்னோடு எழுதிக் கொண்டிருந்த செங்கல்பட்டு மாவட்ட நண்பர்கள் 'நம் பகுதியிலேயே ஓர் இதழை ஆரம்பிக்கலாமே' என்றார்கள். எங்கள் சிந்தனை இப்படித்தான் சென்று கொண்டிருந்தது. அப்போதுதான் தீபம் நா.பா., போன்றவர்கள் ஒரு பத்திரிகையை நடத்த எவ்வளவு சிரமப்படுகிறார்கள் என்பது தெரியவந்தது. இதழ் ஆரம்பிப்பது ஒன்றும் சாதாரண விஷயமில்லையே. அதனால் இலக்கிய சர்ச்சைகளை, கதை, கவிதை வாசித்தல், நாவல் திறனாய்வு போன்றவற்றை ஒவ்வொரு மாதமும் நடத்தினால் என்ன? என்று தோன்றியது. இதற்கு நண்பர்களிடையே நல்ல ஆதரவு இருந்தது.

ஆயிரத்து தொள்ளாயிரத்து எழுபத்து ஏழாம் ஆண்டு, ஜூலை மாதம் நாரண. துரைக்கண்ணனை அழைத்து, ஜே.எம். சாலி தலைமையில் மதுராந்தகத்தில் இலக்கிய வீதியை ஆரம்பித்தோம்.

புதிய எழுத்தாளர்களை அறிமுகப்படுத்தி அவர்களின் படைப்புகள் இந்தக் கூட்டத்தில் வாசிக்கப்படும். அதுபற்றி ஆய்வு செய்யப்பட்டுச் சிறந்ததாக இருந்தால், 'இலக்கிய வீதி' சிபாரிசு செய்து பத்திரிகைகளுக்கு அனுப்பும். அப்படி அனுப்பப்படும் கதைகள் நிச்சயமாக



''ச்சே! ஜோக் எழுத்தாளரைக் கட்டிக்கிட்டுப் பெரிய தொல்லையாப் போச்சுடீ!''

''என்ன விஷயம்?''

''ஆசையா கூப்பிடறாரேன்னு கிட்ட போனா, ஒரு ஜோக் சொல்லி நல்லா இருக்கான்னு கேட்டுக் கொல்றாருடீ!''

— சீர்காழி ரேவதி

பிரசுரிக்கப்படும்.

இந்த அமைப்புக்குக் காலப்போக்கில் இலக்கிய வட்டங்களில் நல்ல வரவேற்பு ஏற்பட்டது. அறிமுக எழுத்தாளர்கள் மட்டுமின்றி, நா.பா, வலம்புரி ஜான் உட்பட பிரபலமான எழுத்தாளர்களேகூட 'இலக்கிய வீதி'யில் கவிதை, கதை, வாசிக்கப்படுவதைப் பெருமையாக நினைத்து வர ஆரம்பித்தனர். வைரமுத்து, பாலகுமாரன், மாலன் போன்றோர் இலக்கிய வீதி கூட்டத்துக்கு வந்திருக்கிறார்கள்.

மாதம் ஒரு கதை தேர்ந்தெடுக்கப்பட்டு ஆண்டுக்கு ஒரு சிறந்த சிறுகதை பரிசுக்குரியதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, பிறகு அதைத் தொகுப்பாகவும் கொண்டு வந்தோம்.

'இலக்கிய வீதி' பற்றி நன்றாக வெளியே தெரிய ஆரம்பித்ததும் செங்கல்பட்டு மாவட்டம் தவிர, மற்ற நகரங்களிலும் கூட்டத்தை நடத்தத் தொடங்கினோம். 'ஆழ்வார்களும் நாயன்மார்களும் ஊர்தோறும் சென்று பக்தி வளர்த்த மாதிரி நீங்கள் இலக்கியம் வளர்க்கிறீர்கள்' என்று எழுத்தாளர் சுஜாதாகூட ஒருமுறை சொல்லியிருக்கிறார்.

பழைய தலைமுறை இலக்கியத்துக்கும், புதிய தலைமுறை இலக்கியத்துக்கும், பாலமாக இருப்பது, திறனாய்வுத் தமிழை வளர்ப்பது, எழுத்தாளர்களை நேருக்கு நேர் சந்திக்க வைப்பது போன்றவை இலக்கிய வீதியின் நோக்கம். எண்பத்தைந்து எழுத்தாளர்களை இதன் மூலம் உருவாக்கியிருக்கிறோம். இவர்களின் படைப்புகளை உள்ளடக்கிய ஏழு தொகுப்புகள் வெளிவந்திருக்கின்றன.

இந்த அமைப்புக்கு வந்த பிறகு மற்ற எழுத்தாளர்களை ஊக்குவிக்கும் பொருட்டு என்னைப் பற்றிய பிரஞ்ஞையற்று எழுதுவதை நிறுத்திவிட்டேன். இப்போது மீண்டும் எழுதத் துவங்கியிருக்கிறேன். நீண்ட இடைவேளைக்குப் பிறகு, வேடந்தாங்கலுக்கு வரும் இலக்கியவாதிகளுக்கும் நண்பர்களுக்கும் பறவைகளைப் பற்றிச் சொல்லி சொல்லி அது பற்றிய தகவலாளனாகவே மாறிவிட்டேன். அந்தத் தகவல்களை வைத்து 'வேடந்தாங்கல்' என்ற நூலைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதியிருக்கிறேன்.

இடையில் ஒரு நிகழ்ச்சியைக் கண்டிப்பாகக் குறிப்பிட விரும்புகிறேன். பதினாறு கவனக கலைஞர் தியாகி ராமையா விடுதலைப் போரில் ஒரு கண்ணை இழந்தவர். கண் பாதிப்பால் வறுமையில் வாடிய அவர் குடும்பத்தைக் காப்பாற்ற வழியின்றி தற்கொலைக்குத் துணிந்தவருக்கு பல வகைகளில் உதவி, பலவித போராட்டங்களுக்குப் பிறகு அவரை 'அரசு கலைஞர்' ஆக்க 'இலக்கிய வீதி' பாடுபட்டது. அவரது மறைவுக்குப் பிறகு, அவருக்கு நடந்த இரங்கல் கூட்டத்தில் கவனக நிகழ்ச்சிக்கான மரியாதையைத் தெரிந்துகொண்டு, "இதுவரை இந்த விஷயத்தை மதிக்காமல் இருந்துவிட்டேன். இனிமேல் என் தந்தையின் வழியை நான் பின்பற்றுகிறேன்" என்று அந்தக் கூட்டத்திலேயே அவரது மகள் கனகசுப்புரத்தினம் சொன்னார். சில மாதங்களுக்குப் பிறகு நன்றாகப் பயிற்சி பெற்றுக்கொண்டுவந்த அவரை நாங்களே அரங்கேற்றினோம். இன்றைக்கு அவருக்குப் நல்ல வரவேற்பு.

இப்போது இலக்கிய வீதி வெள்ளி விழாவை எட்டியிருக்கிறது. ஒரு பெரிய நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்ய இருக்கிறோம். மறைந்த கவிஞர் தாராபாரதி நினைவாக அறக்கட்டளை ஒன்றை ஆரம்பித்து இலக்கிய பரிசுகள் வழங்க முயன்று வருகிறோம். கூடவே நாட்டுப்புற கலை இலக்கியத்தை வளர்க்க ஏதாவது செய்யலாம் என்றிருக்கிறோம்.

இலக்கியம் ஊற்று மாதிரி, எவ்வளவு அள்ளுகிறோமோ அதற்கு மேலும் வந்து கொண்டுதான் இருக்கும். நாங்கள் எவ்வளவு அள்ளியிருக்கிறோம் என்பது தெரியாது. இன்னும் அள்ள வேண்டும்; அமுதமாய் ருசிக்க வேண்டும்.

— அப்பு

படம்: 'கிளிக்' ரவி

ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை P.R. ஜுவல்லரி

# P.R. JEWELLERY

**GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES**
**Old No. 102, New No. 138, USMAN ROAD,**
**T. NAGAR, CHENNAI - 600 017.**
**PH: 4344442, 4327764 TUESDAY HOLIDAY**
**(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)**
**PROPRIETOR : P. RAVINDHIRAN**

**எங்கு ஜோதிடம் பார்த்தாலும் P.R. ஜுவல்லரிக்கு வந்து ரூ.400/-க்கு ராசிக்கல் வாங்கி பயன் பெறுங்கள். கல் ஒரிஜினல் என முழு உத்திரவாதம் தருகிறோம்.**

| ராசி | ராசிக்கல் | வெள்ளி மோதிரம் விலை |
|---|---|---|
| மேஷம், விருச்சிகம் | பவழம்- 2 CARAT | 400/- |
| ரிஷபம், துலாம் | வைரம் - 5 CENT | 2250/- |
| மிதுனம், கன்னி | மரகத பச்சை - 20 CENT | 400/- |
| கடகம் | முத்து - 2 CARAT | 400/- |
| சிம்மம் | மாணிக்கம் - 20 CENT | 400/- |
| தனுசு, மீனம் | புஷ்பராகம் - 1 CARAT | 400/- |
| | கனகபுஷ்பராகம் - ½ CARAT | 1000/- |
| மகரம், கும்பம் | நீலம் - 20 CENT | 400/- |

**தங்கத்தில் ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ. 1800/- முதல் 5000/-ம் வரை உடனே கிடைக்கும்.**

**அனைவரும் அணியக்கூடியது கார்னெட் வெள்ளி மோதிரம் விலை ரூ. 400/- இதை அணிவதால் படிப்பு, ஞாபக சக்தி, வேலை வாய்ப்பு, வியாபாரம், செல்வ வளம் பெருகும்.**

**தபால் மூலம் மோதிரம் 1க்கு ரூ 450/-**
M.O. (or) D.D. அனுப்பவும்.

தபால் எழுதினால் முழு விவர பாம்லட் இலவசமாக அனுப்புகிறோம்.

கடகராசி - முத்து * சிம்மராசி - மாணிக்கம் * தனுசு ராசி, மீனராசி - புஷ்பராகம் * மகரராசி, கும்பராசி - நீலம் *

மேஷ ராசி, விருச்சிக ராசி- பவழம் * ரிஷப ராசி, துலாம் ராசி - வைரம் * மிதுன ராசி, கன்னி ராசி - மரகத பச்சை

**வாஸந்தி**

பிளாஸ்டிக் குளியல் தொட்டியில் அம்மணமாக அமர்ந்திருந்த பரத், குஷியுடன் தன்னைச் சுற்றி இருந்த நீரைப் பட்பட்டென்று அடித்துச் சிரித்தான். நீரில் மிதந்த வாத்துகளும் மீன்களும் தளக் புளக்கென்று சப்தித்தன. பரத் அதிக குஷியுடன் நீரை அடித்தான். அடித்த வேகத்தில் ஜான்சன் பேபி சோப்பை ஒருகையால் நுரைத்துக் கொண்டிருந்த சகுந்தலாவின் மூக்கில் புஷ்பம் போல நுரைப் பந்து ஒன்று தெறித்து அமர்ந்தது. சகுந்தலா அதைப் பரத்துக்குக் காண்பித்த போது பரத் சிரித்து அதை எடுக்கக் கை நீட்டினான். சகுந்தலா சற்று நேரம் பஃபூனைப் போல கன்னங்களை உப்பவைத்து முகத்தை அசைத்து அசைத்து வேடிக்கைக் காண்பித்தாள். புஷ்பப் பந்து நட்சத்திரம் போல தொட்டியில் விழுந்தது.

"குளிச்சது போதும். ஓ.கே.?" என்றபடி பரத்தை, டர்கி டவலால் சுற்றிப் படுக்கைக்கு அழைத்துச் சென்றபோது பரத்துடன் வாத்தும் வந்தது.

அவசரம் அவசரமாகத் தலைத் துவட்டி, உடம்பைத் துடைத்துப் பவுடர் ஒற்றும்போது சகுந்தலாவுக்கு ராஜாவின் நினைவு வந்தது. பரத்தைக் குளிப்பாட்டும் சமயத்தில் ராஜா வீட்டில் இருந்தால், அவன் தான் பவுடர் போடுவான். சகுந்தலாவுக்கு உதவுவதாக வந்து, பிறவிப்பயன் கண்டது போல பரவசப்படுவான்.

"பரத், அப்பா எங்கே, அப்பா?" என்றபோது தொண்டையடைத்தது.

மும்முரமாக வாத்தை ஆராய்ந்து கொண்டிருந்த பரத் நிமிர்ந்தான். அவன் கேள்வியைக் கிரகித்துக் கொண்டு கதவுக்கு அப்பால் பார்த்தான்.

"ப்பா, ப்பா!" என்றான் அழுத்தமாக. அவளுக்குக் கண்களில் நீர் நிறைந்தது. 'அப்பாவுக்கு உவ்வா!' என்றான் அவன், அவன் ஏதோ கேள்வி கேட்டுப் பதில் சொல்பவன் போல. ராஜா ஆஸ்பத்திரியில் இருந்து வீடு வந்து சேர்வதற்குள்

# பொய்யில் பூத்த நிஜம் 5

> "முன்பின் தன்னைப் பார்த்திராத, சென்னையைத் தாண்டியிராத பெண்மணியின் எதிரில் தனது வழக்கமான உடையுடன் நின்றால் ஒரு கலாசார அதிர்ச்சி ஏற்படலாம்."



பரத்துக்கு அப்பாவின் முகமே மறந்து போகுமோ என்று கவலையேற்பட்டது. "அப்பா வந்துருவார் சீக்கிரமே" என்று அவள் சமாதானப்படுத்தினாள். "டேய் சொல்ல மறந்துட்டேன் - உங்க பாட்டி தாத்தா வராளாம் இன்னிக்கு! என்னையும் உன்னையும் பார்த்து ஷாக் அடிக்கப்போறது!" அவள் அதை ஹாஸ்யம் போல் சொல்லிச் சிரித்தபோது பரத் தன் இரண்டு முன்பல்லைக் காட்டிச் சிரித்தான். அவள் திடீரென்று தனக்குள் ஆழ்ந்த மௌனத்துடன் அவனுக்கு உடுப்பைப் போட்டு ஷூவை மாட்டினாள். ராஜாவின் பெற்றோர்கள் வரும் செய்தி ராஜாவைப் பற்றின அவளது கவலையைத் திசை திருப்பிவிட்டதுபோல் இருந்தது. ஒரு கையால் பரத்துக்கு ஃபேரக்ஸ் கொடுத்தபடி இன்னொரு கையால் காய்ந்துபோன டோஸ்டைச் சாப்பிட்டாள். எதேச்சையாக எதிரில் இருந்த கண்ணாடியில் முகம் தெரிந்தபோது கழுத்துப் பட்டை எலும்பு துருத்திக் கொண்டு நின்றது. இரண்டு நாளில் ஒரு கேஜி குறைந்திருந்தது. பீதியில் எடை குறையும் என்று அவளுக்குத் தெரியாது. அவளுடன் வேலை செய்யும் மனீஷா போன வாரம் அலுத்துக் கொண்டாள். 'எத்தனை டயட் செஞ்சாலும் வெயிட் குறையமாட்டேங்கிறது. VLCCக்குப் போகலாமான்னு பார்க்கறேன்!' "உன் பர்ஸ் தான் இளைக்கும்" என்று அவள் சிரித்தாள். அவளுக்குச் சொல்லவேண்டும். எதுக்காவது பயப்படு. உருகு - உடம்பு உருகும். பரத்தின் வாயைத் துடைத்துவிட்டு அவன் கீழே விழுந்து விடாமல் இருக்க ப்ளேபென்னில் உட்கார்த்தி விட்டுத் தனக்குக் காப்பி கலந்து சமையலறை மேடையைத் துடைக்கும்போது சிரிப்பு வந்

தது. விவேக்கின் ஃபோன் செய்தி கேட்டதும், இந்தச் சமையலறை மேடைதான் அபத்தமாக நினைவுக்கு வந்தது. இரவு பத்து மணிக்குமேல் டெலிபோன் ஒலித்தபோது ஆஸ்பத்திரியிலிருந்துதான் ஃபோன் என்ற பீதி தன் நெஞ்சைக் கவ்வியதும், கால்களும் கைகளும் துணியாய்த் துவண்டதும், ஃபோனை எடுக்கவே தயங்கியதும் ஸ்பஷ்டமாக இப்பவும் நினைவில் நின்றது. விவேக்கின் குரல் என்று புரிந்தபோது பயத்தில் நாக்கு உலர்ந்தது. "ராஜாவுக்கு என்ன ஆச்சு?" என்றாள் முந்திக் கொண்டு.

"ராஜா அப்படியேதான் இருக்கான்" என்றான் விவேக். "இப்பத்தான் ராஜாவுடைய அப்பா மிஸ்டர் சரவணன் ஃபோன் செஞ்சார். நாளைக்குக் காலை ஃப்ளைட்லே அவங்க ரெண்டு பேரும் வராங்க."

"ரெண்டு பேருமா?" என்று திகைக்கும் போது கடவுளே சமையலறை மேடையையெல்லாம் அதுக்குள்ள சுத்தப்படுத்தி ஒழுங்கா வைக்கணும் என்று நினைவு ஓடிற்று.

"பயப்படாதே. அவங்க மகாராணி பாக்லே ஒரு கெஸ்ட் ஹவுஸ்லே தங்கறாங்க."

சரசரவென்று ஒரு நிம்மதி உணர்வு படருவது கண்டு அவளுக்கு வெட்கமாக இருந்தது.

"நீயா ஏற்பாடு செஞ்சே?"

"இல்லே. அந்த மனுஷனுக்குத் தில்லி பழக்கமாம். அவரே ஏற்பாடு செய்திருக்கார், டீப்பான ஆசாமின்னு நினைக்கிறேன்."

"எப்படிச் சொல்றே?"

"ராஜ் மோஹனுடைய ஃப்ரெண்ட் பேசறேன்னு ஆரம்பிச்சேன். ராஜ்மோஹன்ங்கறது யாருன்னார்."

அவன் சிரித்தான்.

"அப்புறம் என்ன ஆச்சு?"

"ஆக்ஸிடன்ட், டாக்டர் சொல்லச் சொன்னார்ன உடனே, குரல் மாறிட்டது. கொஞ்சம் பொறுத்து ஃபோன் பண்றேன், நம்பர் கொடுங்கன்னு வாங்கிக்கிட்டார் – வைஃபைக் கன்ஸல்ட் பண்ணியிருப்பார் போல இருக்கு."

"வேற ஏதாவது கேட்டாரா?"

"ஒண்ணுமே கேக்கல்லே. அதிகம் பேச மாட்டாரோ என்னவோ, வேற என்ன கேட்பார்னு எதிர்பார்த்தே?"

"ஒண்ணுமில்லே!"

"கெஸ்ட் ஹவுஸிலே தங்க முடிவு செஞ்சதினாலே, ராஜாவுடைய வீட்டிலே யாரும் இருப்பாங்கன்னு யோசனை வந்திருக்காது."

அவன் சொல்வது சரிதான் என்று அவள் நினைத்துக் கொண்டாள்.

"நீயா ஒண்ணும் சொல்லல்லியா?"

"இல்லே; நேர சொல்றதுதான் சரி."

"யூ ஆர் ரைட்" என்றாள் அவள் யோசனையுடன்.

"மொட்டை மாடில வடகம் காயப் போட்டிருக்கியா?"

"எப்படித் தெரிஞ்சது?"

"நம்ம ஏரியாவுல உள்ள காகம் பூரா வேற ஏரியா போயிடுச்சு!"

– அம்பை தேவா

---

"அவங்க வர்றது ஒரு வகையில் நல்லது" என்றான் அவன். "உனக்கு ஒரு துணை கிடைச்சமாதிரி இருக்கும், மாரல் சப்போர்ட் தேவை உனக்கு."

"எனக்குத் தெரியல்லே, எப்படிப்பட்ட ஆதரவு கிடைக்கும்னு. ஒரு விஷயம், அவங்க இங்க தங்கல்லேங்கறது பெரிய நிம்மதியாயிருக்கு. மூணு நாளா வேலைக்காரி வேற வரல்லே. வீடு ஒரே களேபரமா இருக்கு, சமையலறையைப் பார்க்க எனக்கே சகிக்கலே. நல்ல வேளை உடனடியாக க்ளீன் பண்ண வேண்டாம்!"

விவேக் சிரித்தான்.

"நல்ல கவலை!"

"அம்மாக்களைப் பத்தி உனக்குத் தெரியாது."

அவன் மீண்டும் சிரித்தான்.

"நீ எப்ப வருவே ஆஸ்பத்திரிக்கு?"

"வழக்கம்போல."

"ஓ.கே. அவங்களை நா கெஸ்ட் ஹவுஸிலே மீட் பண்ணி அழைச்சிட்டு வருவேன். பதினோறு மணி ஆகும்னு நினைக்கிறேன்." அவர்கள் வருவது எந்த வகையிலோ விவேக்கிற்கு நிம்மதி என்று அவளுக்குத் தோன்றிற்று. அவளுக்குத்தான் நிம்மதி போயிற்று. இரவு முழுவதும் சரியாகத் தூக்கம் வராமல், அடிக்கடி நீர் குடிக்க எழுந்தாள். நீர் குடித்ததால் அரைமணிக்கொருமுறை கழிவறைக்குச் செல்ல வேண்டியிருந்தது. ராஜா அடிபட்டு நினைவில்லாமல் படுத்திருக்கும் தருணத்தில், இரண்டு ஆண்டுகளுக்கு மேல் அவனோ தொடர்பு இல்லாமல் இருந்த, அவளுக்குப் பரிச்சயமில்லாத அவனது பெற்றோர்களைச் சந்திக்க வேண்டியிருக்கும் என்று எந்த கற்பனையிலும் அவள் நினைத்திருக்கவில்லை. தன்னை அவர்கள் எப்படி எதிர்கொள்வார்கள் என்று அவள் யோசித்தாள். விடியும் தருவாயில், இரவெல்லாம் தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டு யோசனை செய்தது அசட்டுத்தனம் என்று ஞானோதயம் ஏற்பட்டது. ராஜா அவர்களுக்கு மகன் என்ற காரணத்தால் அவர்கள் அவனைப் பார்க்க வருகிறார்கள். இரண்டு நாட்கள் இருந்துவிட்டுக் கிளம்பப் போகிறார்கள். இதில் அவளுடைய பங்கு எதுவுமே



இல்லை. உறவு ஒட்ட வேண்டுமானால், அவர்களுக்கும் ராஜாவுக்குமிடையே சமாதானம் ஏற்பட வேண்டுமே தவிர அவள் செய்யக் கூடியது ஒன்றுமில்லை, அவர்களைப் பற்றி அவளுக்கோ அவளைப் பற்றி அவர்களுக்கோ ஒன்றுமே தெரியாது என்பதால், அவளுக்கும் ராஜாவுக்கும் நடுவில் இருக்கும் உறவு நிலையில் எந்த மாறுதலும் இருக்கப் போவதில்லை.

காலையில் எழுந்து பல் துலக்கி காபி சாப்பிட்டதும், ராஜாவின் அத்தனை உறவினர்களையும் சமாளித்துவிடலாம் என்ற தெம்பு ஏற்பட்டுவிட்டது – வீட்டை மட்டும் ஏதாவது ஒரு தேவதை வந்து சுத்தம் செய்துவிட்டால்.

பரத்தின் ப்ளேபென்னில் இன்னும் இரண்டு பொம்மைகளைப் போட்டு அவள் குளிக்கச் சென்றாள். குளியலறையின் கதவைத் திறந்து வைத்து பரத்துடன் பேச்சுக் கொடுத்தபடியே குளிக்கும்போது ராஜாவுக்கு இது தெரிந்தால் என்ன சொல்வான் என்று நினைத்துச் சிரிப்பு வந்தது. 'குழந்தைக்கு ஒண்ணும் தெரியாதுன்னு நினைக்காதே. கண்ணாலே பார்க்கறது மனசிலே ஆழமாப் பதிஞ்சு போகும். இந்த நினைவெல்லாம் மறக்காது' என்று ஃப்ராய்டியன் தத்துவம் பேசுவான்.'வேற எப்படிச் சமாளிச்சிருப்பேன் தனியாக' என்று அவன் வீட்டுக்கு வந்ததும் கேட்க வேண்டும். 'உனக்குப் புரியுமா நா பட்ற கஷ்டம்? ஆஸ்பத்திரிக்கும் க்ரெஷ்ஷுக்கும் வீட்டுக்கும்னு நான் தட்டாமாலை சுத்தறது? நாசமாய்ப் போகிற வேலைக்காரி வேற மூணு நாளா மட்டம்!' சுய பச்சாதாபத்தில் மனசு கரைந்தது.

அவசரமாக பெட்ரூமிற்குள் வந்து பரத்தின் எதிரிலேயே உடையணிய ஆரம்பித்தாள். கிடக்கிறான் ஃப்ராய்ட். பரத் ப்ளேபென்னில் அமர்ந்து அவளைப் பார்த்துச் சிரித்தான். வார்த்தை ஆராய்ந்த தீவிரத்துடன் அவளை ஆராய்ந்தான்.

"நீ ஞானப்பழம்" என்றாள் அவள். "போக்கிரியுடைய பார்வை இருக்க முடியாது உனக்கு" என்று நற்சான்றிதழ் கொடுத்தாள்.

வாசல் பெல் அடித்தது. அவள் திகைப்புடன் பரத்தைப் பார்த்து 'உங்க தாத்தாவோ?' என்றுகேட்டபடி விரைந்தாள். பரத் பட்பட்டென்று வாத்தை அடித்தான்.

கதவுக்கு வெளியில் வேலைக்காரி சமேலி நின்றிருந்தாள். கோபமும் நிம்மதியும் ஒரே சமயத்தில் ஏற்பட்டு சகுந்தலா ஏதும் கேள்வி கேட்குமுன் சமேலி, தன் புராணத்தை ஆரம்பித்தாள். குடிகார புருஷன் யாருடனோ சண்டை போட்டு உதை வாங்கியதில் ஆஸ்பத்திரியில் சேர்த்து கூடவே போலீசுக்கும் பதில் சொல்ல வேண்டியதாகி –

"செத்துரலாம்போல இருக்கு தீதீ!"

"எனக்கு இங்க அதுக்கு மேல" என்றாள் சகுந்தலா சமாதானத்துடன். சுருக்கமாக ராஜாவுக்கு நேர்ந்த விபத்தையும் ஆஸ்பத்திரிக்கும் வீட்டுக்குமாகத் தான் அல்லாடுவதைப் பற்றியும் சொன்னாள். சொல்லும்போது துக்கத்தில் வார்த்தைகள் தடுமாறின. சமேலியின் அனுதாபத்தைப் பூரணமாகப் பெற்ற உணர்வில் ஒரு இலேசான நிம்மதி ஏற்பட்டது. சமேலி வீட்டைத் துப்புரவாக்கி விடுவாள். இரவுக்கும் சேர்த்து சமைத்து வைத்துவிடுவாள். உண்மையிலேயே தேவதை வந்து இறங்கியது போலிருந்தது. 'நல்ல கவலை' என்று விவேக் சிரித்தது நினைவுக்கு வந்தது. சமையலறை ஃபிக்ஸேஷன் என்பது என்னுடைய மரபணுக்களில் இருப்பது என்றால் அவன் புரிந்து கொள்வானா என்று தெரியவில்லை. ராஜாவுக்குப் பதில், தான் ஆஸ்பத்திரியில் படுத்திருந்தால் ராஜாவுக்கு இந்தக் கவலை தோன்றியிருக்காது என்பது சமூகவியல் சமாசாரம் என்று அவனுக்கு விளக்க வேண்டும்.

கண்ணாடியில் தன்னைப் பார்த்துக் கொண்டு 'அம்மாவுடைய வேஷத்தைப் பாத்தியா?' என்றாள் பரத்திடம். ஜீன்ஸ், டீஷர்ட்டுக்குப் பதில் இன்று சல்வார் கம்மீஸ் உடுத்தியிருந்தாள். நெற்றியில் ஸ்டிக்கர் பொட்டு. அவங்களுக்காக என் வேஷத்தை மாத்திக்க முடியாது' என்று விவேக், சுதிரிடம் நேற்று வீறாப்புப் பேசியது நினைவுக்கு வந்தது. இது வேஷமில்லை. ராஜதந்திரம். முன்பின் தன்னைப் பார்த்திராத, சென்னையைத் தாண்டியிராத பெண்மணியின் எதிரில் தனது வழக்கமான உடையுடன் நின்றால் ஒரு கலாசார அதிர்ச்சி ஏற்படலாம். தன் மகனுடன் அவளைச் சம்பந்தப்படுத்திப் பார்க்கவே அருவெறுத்துப் போகலாம். இப்போதிருக்கும் பிரச்னைகளுக்கு மேலாகப் புதிய மறைமுக சங்கடங்கள் ஏற்படுவதைத் தவிர்ப்பதே புத்திசாலித்தனம். மீண்டும் கண்ணாடியில் உருவத்தைப் பார்த்துக் கொள்ளும்போது பாட்டியின் குரல் கேட்டது. 'மூளிக்கழுத்தா நிக்கறியேடி!' எனக்கு நேரமாயிடுத்து என்று முணுமுணுத்தபடி அலமாரியில் தேடினபோது தங்கச் சங்கிலியை எங்கே வைத்தோம் என்று

நினைவுக்கு வரவில்லை. கிடைத்த ஒரு பாசி மணி மாலையை அணிந்து, பரத்தைத் தூக்கிய போது மாலையை பரத் பிடித்து இழுத்ததில் அது கையோடு இரண்டாகப் பிளந்து மணிகள் சிதறிக் கீழே விழுந்தன. ஸெராமிக் டைலில் உருண்டு உருண்டு, ஒன்றன்பின் ஒன்றாக பாத்ரூமுக்குள் நுழைந்து பால்கனி பக்கம் எட்டிப்பார்த்து சமையலறைக்குள் நகர்ந்து ஸிங்கில் இருந்த பாத்திரத்தைத் தேய்த்துக் கொண்டு நின்றிருந்த சமேலியின் வெடித்து சொறசொறத்துப் போன பாதங்களில உரசி நின்றன.

சமேலி திரும்பிப் பார்த்து விளக்கம் கேட்குமுன் சகுந்தலா கிளம்ப ஆயத்தமானாள். "சமேலி கதவைச் சாத்திக்கோ. எல்லா வேலையும் சுத்தமா முடிச்சுட்டுச் சாவியை வழக்கம்போல் பக்கத்து வீட்டிலே கொடுத்திடு. நா கிளம்பறேன்!"

"அச்சா தீதி!" என்று சமேலி கதவைச் சாத்த வந்தபோது வெளியில் கிளம்பும் குஷியில் பரத் காலை உதைத்து அவளைப் பார்த்துச் சிரித்தான்.



"பக்கத்து வீட்டு ராதா புதுசா ஃப்ரிஜ் வாங்கியிருக்காளாம், ரொம்பத்தான் பீத்திக்கிறா!"

"எப்படி?"

"அவங்க வீட்டுக்குப் போனபோது காபிய ஜில்லுனு தரட்டானு கேட்கறா!"

— எஸ். சரவணன்

"ஆஸ்பத்திரிக்கா அழைச்சுட்டுப் போறீங்க முன்னாவை?" என்ற சமேலியைத் திரும்பிப் பார்க்காமல் படியிறங்கியபடி "இல்லே, க்ரெஷ்லே விட்டுட்டுப் போவேன்" என்றாள் சகுந்தலா. குழந்தையை மிஸஸ் மல்ஹோத்ராவிடம் விட்டுவிட்டு ராஜாவைப் பற்றின கேள்விகளுக்குச் சோர்வுடன் பதிலளித்துவிட்டு ஆஸ்பத்திரியை நோக்கி வண்டி ஓட்டுகையில், காலையிலிருந்து தோன்றியிராத நிராசை மனத்தை அழுத்தியது. இன்றையப்போது எப்படி நகரப் போகிறது என்ற கேள்விக் குறி விஸ்வரூபமெடுத்து கவனத்தைச் சிதறடித்தபடி இருந்தது. இன்று காலையில் ஆஸ்பத்திரியிலிருந்து பேசிய கதிர், ராஜாவின் உடல் நிலையில் தனக்கு எந்த மாற்றமும் தெரியவில்லை என்றான். ஆனால் டாக்டர்கள் நம்பிக்கையுடன் இருப்பதாகச் சொன்னான். டாக்டர்களும் அமானுஷ்யமான கடவுளைத்தான் நம்பியிருப்பதாகத் தோன்றிற்று. ஆஸ்பத்திரி வளாகத்தில் இருக்கும் சாமிக்குமுன் அவர்களும் தங்களால் தூக்க முடியாத சுமைகளை இறக்கிவிடுபவர்களாக இருக்க வேண்டும். சுமைக்குமேல் சுமையால் அழுத்தப்பட்டு அமர்ந்திருக்கும் சாமிக்கு ஐ.ஸி.யு.வில் நான்காவது படுக்கையில் பிரக்ஞையற்றுப் படுத்திருப்பவனை ஞாபகம் இருக்குமா?

'நம்பிக்கையுடன் இருக்கிறார்கள்' அந்த வார்த்தைகள் அவளுள் சந்தேகத்தைக் கிளப்பின. 'இது நிஜம்' என்றால், பொய் என்பதும் உண்டு என்று பொருள் படும் தர்க்கம் போல. 'கடவுள் இல்லை' என்ற வாக்கியத்தில் 'கடவுள் இருக்கிறார் என்ற வாதம் அடங்குவது போல - நம்பிக்கை என்னும் பதத்திற்குள் அவநம்பிக்கை என்பதும் அடக்கம்.

காரைப் பார்க் செய்துவிட்டு, கோவிலைப் பார்த்து ஏதும் பிரார்த்திக்கத் தோன்றாத பயத்துடன் அவள் ஐ.ஸி.யு.வை நோக்கி நடந்தாள். அவள் உள்ளே நுழையப் போனபோது, வெளியில் அமர்ந்திருந்த ஆள் தடுத்தான். ஏற்கெனவே மூன்றுபேர் உள்ளே சென்றிருப்பதாகச் சொன்னான். அவள் கண்ணாடிக் கதவுக்கு அப்பால் நின்றபடி பார்த்தாள். ராஜாவின் பெற்றோர்களாக இருக்கவேண்டும். எதிரில் விவேக் ஏதோ மெல்லிய குரலில் பேசியபடி நின்றிருக்க, வைரமும் தங்கமுமாக இருந்த அந்த அம்மாள் வாயைப் பொத்திக் கொண்டு படுக்கையில் கண்மூடி இருந்த ராஜாவைப் பார்த்தபடி நின்றிருந்தாள். கண்ணீரைக் கஷ்டப்பட்டு அடக்குகிறாள் என்று தோன்றிற்று. ராஜாவின் அப்பாவின் முகம் இறுகியிருந்தது. இவர்கள் எனக்கு அன்னியர்கள் என்ற நினைப்பு சகுந்தலாவின் அடிவயிற்றில் ஒரு சங்கடத்தை எழுப்பிற்று. ராஜாவுக்குச் சுய நினைவு வராதவரை இவர்களுடன் உறவு ஏற்படுவது சிரமம் என்று பட்டது. இன்றைக்குள் அவனுக்குப் பிரக்ஞையேற்படணும் ஈசுவரா – அவர்கள் வெளியில் வந்தார்கள். இனிமேல் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள இயலாது என்பதுபோல் அந்த அம்மாள் தலைப்பால் வாயைப் பொத்தியபடி அழ ஆரம்பித்தாள். அவளைச் சமாதானப்படுத்தத் தோன்றாமல் சரவணன் 'டாக்டர்' எப்ப வருவார்?' என்று கேட்டார்.

'பன்னிரண்டு மணிக்கு' என்றாள் சகுந்தலா, தன்னிடம்தான் அந்தக் கேள்வி கேட்கப் பட்டதாக நினைத்தவள் போல. அழுகையை நிறுத்திவிட்டு அம்மாள் நிமிர்ந்தாள். இவர்களுக்குத் தன்னை அறிமுகப்படுத்தும்போது விவேக் ஏதும் உளறி வைக்கப்போகிறானோ என்றிருந்தது சகுந்தலாவுக்கு.

(தொடரும்)

# கல்கி

மே 26 இதழில்



# பாலகுமாரன்

எழுதும்



# மனம் உருகுதே

தன் தொழில் என்னவென்று எவரால் காண இயலும்? தன் புத்தியை கவனிப்பவரால். தன் புத்தி தான் காணுதல் எவ்விதம்? அமைதியான குணத்தால்.

அமைதிக்கு என்ன வழி? நல்ல மனைவி.

இது, நல்ல மனைவியை நமஸ்கரித்து உயர்ந்தவர் கதை.

மூலிகை கேலரி - 17

# சத்தியம், சிவம், வில்வம்!

'தெய்வீக மூலிகை, தெய்வீக மூலிகை' என்று சொல்லக் கேள்விப் பட்டவர்கள், வில்வத்தைப் பற்றித் தெரிந்துகொண்டால், உண்மைதானென்று ஒப்புக் கொள்வார்கள்.

வில்வ இலை சிவனுடைய அர்ச்சனைக்கு உகந்த பத்ரம். வில்வ மரத்தின் காற்றுக்குக் கூட நோய் தீர்க்கும் ஆற்றல் உண்டு. வில்வமரத்தடி வாசம் உடல்நலம் தரும். வில்வ இலை, பூ, தளிர், வேர், காய், பிஞ்சு, பட்டை, பழம், பிசின் என அனைத்தும் மருத்துவ குணமுடையவை.

உங்கள் முகத்துக்குப் பெரும் கவர்ச்சியை வாரி வழங்கும் வள்ளல்கள் கண்கள்தான். அதனால் கண்களைக் 'கண்' போல காக்க வேண்டும். கண்வலி, கண் சிவப்பு, கண் எரிச்சல் போன்ற பிரச்னைகள் தவிர்க்கப்பட வேண்டியவை. கண்களைச் சுற்றிக் கருவளையம், சுருக்கம் இருந்தால் முதுமைத் தோற்றம் ஏற்படும். கண்கள் பளீர் அழகுடன் ஆரோக்கியமாக மின்ன, வில்வ இலை உதவும். கைப்பிடியளவு வில்வ இலையை வாணலியிலிட்டு, இளஞ்சூட்டில் வதக்கி, மெல்லிய துணியிலிட்டு கண்கள் மீது ஒத்தடம் தர, கண் வியாதிகள் கண் சிமிட்டும் வேளையில் ஓட்டமெடுக்கும்.

"இளமையை நீட்டிக்கும் அதி அற்புதசக்தி வில்வத்துக்கு உண்டு. உங்கள் தோற்றத்தில் பத்து வயதை மைனஸாக்கி கற்பனை செய்து பாருங்கள்."



'வில்வாதி லேகியம்' என்பது கண் நோய் மருந்து. வில்வ பழத்தின் சதைப்பற்று அரைக்கிலோ, பனை வெல்லம் முந்நூறு கிராம், பசுவின் பால் கால்லிட்டர், பசு நெய் நூறு கிராம், தேன் நூறு கிராம், ஏலத்தூள் முப்பது கிராம்... இருந்தால் இதை வீட்டிலேயே எளிதாகத் தயாரிக்கலாம்.

பாலைக் கொதிக்கவிட்டு, அதில் வில்வப்பழத்தின் சதையை இட்டு வேக வைக்கவும். நன்றாக வெந்ததும் பனைவெல்லம் சேர்த்துக் கிளறி, ஏலம், சுக்கு, சேர்க்கவும். பசுவின் நெய்யைச் சிறிது சிறிதாகச் சேர்த்து இறக்கி, ஆறியதும் தேன், குங்குமப்பூ கலந்து பத்திரப்படுத்தவும்.

இந்த லேகியத்தில் நெல்லிக்காய் அளவு எடுத்து தினமும் இருவேளை உட்கொள்ள, கண் சம்பந்தப்பட்ட நோய்கள் குணமாகும்.

இதே செய்முறையை அடிப்படையாகக் கொண்டு, வில்வப் பழத்துக்குப் பதிலாக காய்ந்த வில்வ மலர்களைச் சேர்த்து லேகியம் தயாரித்து உட்கொண்டால், நரம்பு மண்டலம் சுறுசுறுப்பாகும், வற்றிய தேகம் வளம் காணும். குறிப்பாக குழந்தைகளின் உடல் வளர்ச்சி மிகவும் சிறப்பாக அமையும்.

இது வெயில் காலம். 'சித்திரை பிறந்தா நித்திரை இருக்காது' என்று சொல்வதற்கேற்ப தாகம், கண் எரிச்சல், தலைவலி, உடல் சூடு என ஏதேதோ பிரச்னைகள் மனுஷனைப் படுக்க விடாது படுத்தி யெடுக்கும். வில்வ வேரை ஒன்றிரண்டாகத் தட்டி, ஒரு செப்புப் பாத்திரத்திலிட்டு, நீர் ஊற்றி, இரவு முழுவதும் மொட்டை மாடியில் வைக்கவும். மறுநாள் அந்த நீரை வெறும் வயிற்றில், ஒரே ஒரு கிளாஸ் ஜில்லென்று பருகுங்கள். அப்புறமென்ன, அன்னிக்குப் பூரா குளுமை... குளுமை...! வில்வ இலையைப் பறித்து, நிழலில் காய விட்டு, அரைத்து சலித்துக்

கொள்ளவும். தினமும் வில்வ இலைத் தூளுடன், சில சொட்டுக்கள் தேன் கலந்து, முகத்தில் பூசி, பயத்தமாவு கொண்டு கழுவி விடுங்கள். ஆறே வாரத்தில் மாசு மருவில்லாத சருமம் உங்களை மேலும் அழகாக்கி யிருக்க, காண்பவர்தான் அசந்து போவார்கள்.

இளமையை நீட்டிக்கும் அதி அற்புதசக்தி வில்வத் துக்கு உண்டு. வில்வத் தூளை, பசும்பாலில் கலந்து



அருந்தினால் காயகல்ப எஃபெக்ட் கிடைக்கும். உங்கள் தோற்றத்தில் பத்து வயதை மைனஸாக்கி கற்பனை செய்து பாருங்கள். தாங்க்யூ வில்வா! வில்வ வேருக்கு ஆண்மை விருத்தி செய்யும் பேராற்றல் உண்டு. வில்வ வேரை வெட்டி, காய வைத்து, தூளாக்கி, ஒரு ஸ்பூன் பொடியை, ஒரு தம்ளர் பசும்பாலில் சாப்பிட்டு வர, தாது விருத்தியாகும். ஆண்மை பெருகும்.

நாகரிகமான உணவுமுறை கொடுத்த தண்டனைதான் மூலநோய். இந்த நோயால் மனிதன் படும் அவதியும் இழப்பும் பயங்கரமானவை. சிறு வில்வக்காயுடன், ஒரு துண்டு இஞ்சி, ஒரு டீ ஸ்பூன் சோம்பு சேர்த்து அரைத்து தினமும் சாப்பிட்டு வந்தால் மூலநோய் முற்றிலும் குணமாகும்.

புடைவை அவிழ்ந்து விடாமலிருக்க வேண்டும் என்பதற் காக சில பெண்கள் உள்பாவடையை இறுக்கமாக அணி வார்கள். இதனால் இடுப்பு பாகத்தில் கறுப்பாகத் தழும்பு விழுந்திருக்கும். இரத்த ஓட்டம் குறைந்து, நமைச்சலும் தோன்றும். அதேபோல ரசாயனம் கலந்த குங்குமம் இட்ட இடங்களில் சருமம் கறுப்பாகியிருக்கும். சிறிய வில்வ மரக்கட்டையை, சந்தனக் கல்லில் அரைத்துப் பூசினால், கறுப்பு மறைந்து விடும்; அரிப்பும் இருக்காது.

ஆண்டிபயாடிக்குக் கூட பழிப்புக் காட்டும் நாள்பட்ட இருமலால் அவதியுற நேரும்போது, நீங்கள் வில்வ வேரை நம்பிச் செயல்படலாம். வில்வ வேர், சுக்கு, நெல்பொரி ஆகியவற்றைச் சம அளவு எடுத்து தண்ணீரில் காய்ச்சிக் குடித்தால் இருமல் குணமாகிவிடும்.

சூதக வலியும், பெரும்பாடு எனப்படும் அதிக இரத்தப்போக்கும் பெண்களைப் பாடாய்ப்படுத்தி விடும். இந்தப் பிரச்னை உள்ளவர்கள், வில்வ இலையை அப்படியே மென்று ஒரு டம்ளர் வெந்நீர் குடித்துவிட, நாளடைவில் வயிற்றுவலி நீங்கும்.

வயிற்றுக் கடுப்பு, பேதி, வாய்வுத் தொல்லை போன்ற சாதா நோயிலிருந்து, இரத்த புற்றுநோய், தொழு நோய் போன்ற மெகா நோய்கள் வரை, வில்வம் எளிதில் குணமாக்கும் என்பதை திருமூலர் சித்தநூல் தெரிவிக்கிறது.

விஷ்ணுவுக்குப் பிரியமான துளசியில் ஆரம்பித்த மூலிகை கேலரியை சிவனுக்கு உகந்த வில்வத்தில் இப்போது கட்டுரையில் முடித்து விட்டாலும், விலை மதிப்பற்ற நம் நாட்டு மூலிகைகளின் ஒப்பும் உயர்வும் எளிதில் விளக்கிவிடக் கூடியதா என்ன?

தொகுப்பு : **அனுராதா சேகர்**

படம் : **ஸ்ரீஹரி**

(முற்றும்)

ராஜம் முரளி

சாதாரணமாக, ஒரு மனிதரை வரவேற்க யானை எல்லாம் அழைத்துக் கொண்டு வந்தால், அந்த மனிதரின் வருகையை போஸ்டரடித்துப் பறைசாற்றினால், நாம் என்ன நினைப்போம்? அவர் ஒரு அரசியல்வாதியோ, சினிமா நடிகரோ, குறைந்த பட்சம் ஆன்மிகத் தலைவரோ என்றுதானே?

ஆனால் இவை எதுவுமில்லாமல், சமூக சேவை ஒன்றையே தம் பேச்சாகவும் மூச்சாகவும் கொண்ட ஒருவருக்குத்தான் இந்த மரியாதைகள் என்றால்... சரி... வெய்யில் ஜாஸ்தியாகிவிட்டது என்ற ரீதியில் பார்க்காதீர்கள்... உண்மையிலேயே ஜி.கே.ஆர். சாரிடீஸ் என்று போர்டு போட்டுக் கொண்டு, தானதர்மம் ஒன்றை மட்டுமே தொழிலாகக் கொண்டு, அதற்கென பிரத்யேக அலுவலகமும் வைத்து நடத்தும் நவீன பாரி ஒருவர் மும்பையில் இருக்கிறார்! அவர்தான் ஜி.கே.ராமமூர்த்தி!

இந்தப் பாரி முல்லைக்குத் தேர் கொடுப்பதில்லை, காலத்துக்கேற்றார் போல் 'கார்' கொடுப்பார், அத்துடன் விடாமல், கொடி படர்கிறதா? போஷாக்குடன் வளர்கிறதா? என்பதையும் கவனித்து அதை நடமாடும் பிருந்தாவனமாகவே மாற்றி விட்டுத்தான் செல்வார்.

பார்வையற்றோருக்கு கம்ப்யூட்டர் கல்வி பயிற்றுவிப்பது ஜி.கே.ஆர். 1,2,3 என்றெல்லாம் கோட் நம்பர் வைத்து டயாபடீஸ், கான்ஸர் நோயாளிகளுக்கு வாழ்நாள் பாதுகாப்பை ஏற்றிருப்பது என என்னென்னவோ செய்திருப்பது பெரிசில்லை; 'ஜனனி'யையும் 'ஜன்ம பூமியை'யும் மறக்கலாகாது என்ற தர்ம சாஸ்த்திரப்படி, நாகை தாலுகாவில், குத்தாலம் பஞ்சாயத்து யூனியனில், இருக்கும் "பழைய கூடலூர்" கிராமத்தை ஒரு "மாடலூராக" மாற்றும் பணியில் ஈடுபட்டிருக்கிறாரே, அங்கே தான் மண்வாசனை தூக்கலாக இருக்கிறது.

"அந்தக் காலத்திலெல்லாம் எங்கள் கிராமத்துக்குச் செல்ல, மாட்டு வண்டியில் ஆற்று நீரைக் கடக்க வேண்டும்; நானும் என் சகோதரியும் குஷியாக, கால்களை நீரில் நனைத்தபடி விளையாடிக் கொண்டு செல்வோம். 'அந்த நினைவுகளுடன், ஐம்பது ஆண்டுகள் கழித்து, என் பிறந்த மண்ணில் காலடி வைத்த எனக்குப் பேரதிர்ச்சி! 'பூடம் காஞ்சிபுரம்' என்று பெயர் பெற்ற எங்கள் ஏகாம்பரேஸ்வரர் – காமாட்சி கோயில் இருளடைந்து கிடந்தது; கற்பூரத்தை நானே கொளுத்தி சாமி கும்பிடும் நிலை. ஐயோ... இங்கே என்ன செய்ய முடியும்? என்று கலங்கி நின்றேன்" என ஆரம்பித்தார் ஜிகே.ஆர்.

"இருநூறு குடும்பங்கள் உள்ள அந்தக் கிராமத்தில், முதலில் என்னைச் சந்தேகத்துடன் பார்த்தார்கள்.



எனக்குச் சொந்தமான நிலங்களைக் கேட்க வந்து விட்டேனோ என்று பலர் கதவையே திறக்கவில்லை; முதலில் அவர்கள் நம்பிக்கையைப் பெற, தனி நபர்களுக்கு அடகு வைத்த நிலத்தை மீட்க, இஸ்திரிப் பெட்டி வண்டி வாங்க என்பன போன்ற உதவிகளைச் செய்தேன். அதனால் என்னை ஒரு பணங்காய்ச்சி மரமாகப் பார்க்கத் துவங்கினார்கள். என்ன செய்வது? என்று பரிதவிக்கையில், முரளிதர் சுவாமிகள் என்ற ஆன்மிக குரு, வழிகாட்டினார்.

"ஒரு கிராமத்தின் உயிர்ப்பு அதன் கோயில்களுடன் பின்னிப் பிணைந்துள்ளதை உணர்த்தி, பாழடைந்திருந்த கோயில்களைப் புதுப்பித்து கும்பாபிஷேகம் செய்யச் சொன்னார்" என்று நிறுத்தினார்.

ஒன்றேகால் கோடி செலவில் கும்பாபிஷேகம், ஐந்து நாள்

தொடர் அன்னதானம், கிரேஸி மோகன், ஹூஸ் மோகன் போன் றோரின் கலை நிகழ்ச்சிகள் மக்களுக்குப் புத்துணர்ச்சியையும் புதுத் தென்பையும் ஊட்டின. தாழ்த்தப்பட்ட மக்கள் விரும்பிய படி 'காலனி'யம்மன் கோயில் ஒன்று கட்டிக் கொடுத்துள்ளார். அனைத்து கோயில்களும் புதுப் பொலிவுடன் திகழ்வது மட்டு மில்லை, தினசரி பூஜைகள், உற்சவங்கள், திருநாள்கள் இவற்று டன் மக்களைக் கோயிலுக்கு ஈர்க்க பிரசாதங்கள் என்று ஏராளமாய் ஏற்பாடுகள்.

ஐம்பது ரூபாய் கட்டணம் தான், குழந்தைகளை அழைத்து வர ஸ்கூல் பஸ் கள், டீச்சர்கள் ஆங்கிலத்தி லேயே உரையாட ஸ்பெஷல் ட்ரெயினிங், குழந்தைகளுக்கு எளி மையான ஆரோக்கிய உணவுகளை அளிப்பது பற்றி பெற்றோர்களுக்கு ட்ரெயினிங் என்று வெளுத்துக் கட்டியுள் ளார்.

உடல், உள்ளம், அறிவு, அனைத்துமே ஆரோக்யமாக இருக்க வேண்டாமா? அதற்கென மருத்துவ வசதிகளையும் தீர்க்க தரிசனத்துடன் திட்டமிட்டிருக்கிறார் ஜி.கே.ஆர். ஊர்க் குழந்தை ஒன்று தேள் கடியில் மரிக்க, மனம் வருந்திய ஜி.கே.ஆர்., முதலில் விஷக் கடிகளுக்குத் தேவையான உபகரணங்கள், சாதாரண நோய் களுக்குத் தேவையான மருந்துகள் இவற்றுடன் ஒரு ஹெல்த் சென் டரை நிர்மாணிக்க இருக்கிறார். இளைஞர் பேரவை ஒன்றை உருவாக்கி, மக்களைக் குடிப்பழக்கம் முதலான தீய நெறி களிலிருந்து காக்கவும் ஊக்கு விக்கிறார்.



# மாடலூராக மாறும் கடலூர்!

> “ஒன்றேகால் கோடி செலவில் கும்பாபிஷேகம், ஐந்து நாள் தொடர் அன்னதானம், கிரேஸி மோகன், ஹூஸ் மோகன் போன்றோரின் கலை நிகழ்ச்சிகள் மக்களுக்குப் புத்துணர்ச்சியையும் புதுத் தெம்பையும் ஊட்டின.”

இவர் மேற்கொண்டுள்ள வளர்ச்சித் திட்டங்களில் ஈடு பட்டிருப்பவர்களின் குடும் பங்கள் நலமுடன் வாழ, கூடலூரிலேயே வசதிகள் செய்து கொடுத்துள்ளது முக்கியமான விஷயம் – யாரும் அரைகுறையாக விட்டுவிட்டு ஓட மாட்டார் களே?

திட்டமிடுதல், தேவை யானவற்றை அலசி ஆராய் தல், பின்னர் நிர்மாணித்தல், பிறகு தொடர்ந்து இடையூ றின்றி அவை செம்மையாக நடத்தப்படுதல் என்ற பழுதில்லாத ஃபார்முலாவை வைத்திருப்பதால், இவர் எண் ணியவை எண்ணியவாறே நடக்கின்றன.

''சிலர் இருக் கும் பணத்தை எப்படிக் காப் பது என்று கவ லைப்படுவார் கள்; சிலர் இன்னும் எப்படி பணம் பண்ணு வது என்று அல்லலுறு வார்கள்; நான், இந்தச் சமூகம் எனக்களித்ததை எப்படித் திருப்பித் தரப் போகிறேன் என்று தினமும் கவலைப்படு கிறேன்'' என்கிறார் ஜி.கே.ஆர்.

– ஜெ.ஆர்.

# ஹலோ பில்கேட்ஸா..?

## அரசியல் வெற்றி!

கறுப்புக்கொடி போராட்டத்தில் அண்ணாதுரை மீது தொடுக்கப்பட்ட வழக்கு. அவருக்காக வாதாடிய வக்கீல் ராமன், பதற்றமாக "தீர்ப்பு நமக்குச் சாதகமாக இருக்காது போலிருக்கிறது.." என்றார்.

அண்ணாதுரை, "இல்லை, தீர்ப்பு எப்படியிருந்தாலும் வெற்றி நமக்குத்தான்" என்றார்.

"எப்படி?" என்று கேட்டார் வக்கீல்.

அண்ணாதுரை சிரித்துக்கொண்டே, "விடுதலை செய்யப்பட்டால் வழக்கில் வெற்றி; தண்டனை பெற்றால் அரசியல் வெற்றி" என்றார்.

- சித்தோடு க. பூங்கொடி.



## காக்க மாட்டீரா?

ஒரு தொலைக்காட்சியில் கலைஞர் தலைமையில் கவியரங்கம் ஏற்பாடாகியிருந்தது. பங்கு பெறும் கவிஞர்கள் வருவதற்குள் கலைஞர் வந்து அமர்ந்திருந்தார். தமது தலைமைக் கவிதையில் அவர், ''என்னைக் காக்க வைத்த கவிஞர்களுக்கு வணக்கம்'' என்றார். அடுத்துப் பாட வந்த அப்துல் ரகுமான், ''எங்களைக் காக்கத்தானே உங்களை வைத்தோம்... காக்க மாட்டீரா?'' என்றதும் அரங்கமே அதிர்ந்தது.

- தஞ்சாவூர் இக்பால்.

**கோ**டை காலத்தில் கிருபானந்த வாரியார் ஓர் ஊரில் உபன்யாசம் செய்துகொண்டிருந்தார். புழுக்கம் தாங்காமல் இடையில், "அப்பனே... முருகா..." என்றபடி நெற்றி வியர்வையை மேல் துண்டால் ஒற்றி எடுத்தார். உடனே அருகிலிருந்தவர் ஒரு பனை ஓலை விசிறியைக் கொண்டு வந்து விசிறி விட்டார். வாரியார் சொன்னார்: "அப்பனை வேண்டினேன்.... இப்'பனை' வந்தது!"

- இக்பால்

**ப**யனற்ற பொருளாக வீசியெறியப்படும் வாழைப்பழத் தோலிலிருந்து பயனுள்ள பல பொருட்களைத் தயாரிக்கலாம் என்று ஜெர்மனியைச் சேர்ந்த விஞ்ஞானி ஹெயின் ரக் கூறியுள்ளார். நூலிழைகள், காகிதம், உரங்கள் போன்றவற்றைத் தயாரிக்கலாம் என்கிறார்.

- தஞ்சை மு. ஜெரினாபேகம்.

## சும்மா நிற்கும்போது...?

**லி**யோனார்டோ டாவின்ஸி இத்தாலிய ஓவியர். படம் வரைந்துகொண்டு இருக்கும்போதே திடீரென்று அதை நிறுத்திவிட்டுப் பல மணிநேரம் தாம் போட்ட படத்தையே பார்த்துக்கொண்டு நிற்பார். அவர் அப்படிச் சும்மா நிற்பது டாவின்ஸிக்கு வேலை கொடுத்த மாதா கோவில் பாதிரிக்குப் பிடிக்கவில்லை. ஒருநாள் டாவின்ஸியிடம் "வேலையை ஏன் பாதியில் நிறுத்திவிட்டுச் சும்மா நிற்கிறீர்?" என்று கேட்டார்.

"சும்மா நிற்கும்போதுதான் நான் ரொம்ப வேலை செய்கிறேன்" என்றார் டாவின்ஸி!

- பா. அச்சுதன்

**மை**க்ரோசாஃப்ட் உரிமையாளர் பில்கேட்சுக்கு ஒரு ஃபோன் வந்தது.

"ஹலோ... பில்கேட்ஸ்! கனடா பிரதமர் ஜீன் கிரெஷியன் பேசறேன். எப்படி இருக்கீங்க?" என்றதும் புல்லரித்துப் போனார் பில்கேட்ஸ்.

தொடர்ந்து மிகவும் ஆர்வத்துடன் பேசிக்கொண்டிருந்தார்.

கனடா பிரதமரும் பொருளாதார விஷயங்கள் பற்றி மிகவும் அக்கறையுடன் பேசினார். பில்கேட்ஸை ஒருமுறை கனடா வந்துபோகும்படி அழைப்பும் விடுத்தார். அதை பில்கேட்ஸும் ஏற்றுக்கொண்டார்.

உரையாடல் முடியும் நேரத்தில் : "சாரி பில்கேட்ஸ் சார்... நாங்கள் கனடாவின் கியூபெக் ரேடியோ ஸ்டேஷனிலிருந்து பேசறோம். இன்றைக்கு ஏப்ரல் 1ஆம் தேதி ஞாபகம் இல்லையா?" என்றது குரல்! இதை கியூபெக் வானொலி நேரடி ஒலிபரப்பு செய்து பெயர் வாங்கி விட்டது!

- திருநள்ளாறு இ.ஜே. தீன்.

## கம்பங் கூழ்!

**கொ**டுங்கோடைச் சூட்டைத் தணிக்க தர்பூசணி, ஐஸ்கிரீம், கூல்டிரிங் என்று தேடி ஓடுகிறீர்கள். கோவை ஸ்ரீ அன்னபூர்ணா ஹோட்டலில் ஆறு ரூபாய்க்கு ஒரு கிளாஸ் நிறைய ஜில்லென்று அருமையான கம்பங்கூழ் தருகிறார்கள். தொட்டுக் கொள்ள அரிந்த வெங்காயமும், ஊறுகாயும் ஆஹா, பரம சுகம்!

- வடவள்ளி ஆர். ராமசுப்ரமணியன்

## சுருக்குவது எப்படி?

**உ**லகப் புகழ் பெற்ற பத்திரிகை ஆசிரியர் 'புலிட்சர்' தம் இளம் வயதில் ஒரு பத்திரிகையில் வேலைக்குச் சேர்ந்தார். அந்த இதழ் ஆசிரியரைப் பார்த்து "சுருக்கமாக எழுதுவது எப்படி?" என்று கேட்டார். அதற்கு ஆசிரியர் "சொல்ல வேண்டிய எல்லாவற்றையும் எழுது. அதை இங்கிருந்து ஆஸ்திரேலியாவிற்கு உன் சொந்த செலவில் தந்தி அடிப்பதாக நினைத்துக்கொள். தானே செய்தி சுருங்கிவிடும்" என்று பதில் தந்தார்.

- எஸ். விஜயா சீனிவாசன்





• திருமுருகன்

# ஒலி செண்டிமெண்ட்!

சென்னை மேற்கு மாம்பலத்தி லுள்ள ஒரு வீட்டில், 'ரெடி, ஆக்ஷன்' என்று சொல்லிக் கொண்டி ருந்தார் 'மெட்டிஒலி' இயக்குனர் திருமுருகன்.

"எதற்காக மெட்டி ஒலி?" என்றோம்.

"மெட்டி நம்ம பண்பாட்டுச் சின்னம். மெட்டி ஒலியை வச்சே மனைவி என்ன மூடுல இருக்காங்ககறதையும் கணவனோட முகம் என்ன சொல்லுதுங்கறதையும் புரிஞ்சுப்பாங்க கிராமத்துல. அதாவது அவ்வளவு அந்நியோன்யமா இருப்பாங்க. இருக்கணுங்கறதைதான் இந்தக் கதையில சொல்றேன்'' என்று ஆரம்பித்தார் இந்த பிலிம் இன்ஸ்டிடியூட் கோல்டு மெடல் இயக்குனர்.

"ஒவ்வொரு இடத்துலயும் வித்தியாச மான மனிதர்களைச் சந்திக்கிறோம். அவங்க கேரக்டரைப் பார்த்தா, அட இது இவன மாதிரி இருக்கேன்னு நமக்குள்ளத் தோணும்; அது மாதிரியாக நீங்க பார்த் திருக்கிற, பார்த்திட்டிருக்கிற கேரக்டர்களை இதுல உலவவிட்டிருக்கேன். வித்தியாசமான குணங்கள் கொண்ட கணவன் மனைவி இதுல வர்றாங்க; இப்பதான் ஆரம்பிச்சிருக் கோம். நல்ல வரவேற்பு" என்று சொல்லும் திருமுருகனின் தந்தை டாக்டர்!

''அம்மாவுக்கும் அப்பாவுக்கும் என்னை டாக்டராக்கணுங்கறது தான் எண்ணம். நான்தான் விடாப் பிடியா சினிமா ஆசையில பிலிம் இன்ஸ்டிட்டியூட்ல சேர்ந்தேன். இன்ஸ்டிட்டியூட்ல நான் எடுத்த டாக்குமெண்டரிக்கு கோல்டு மெடல் கிடைச்சதும்தான் அப்பாவுக்கு என் மேல நம்பிக்கை வந்தது.''

"ஒவ்வொரு டீவிதொடர்லயும் ஏதாவதொரு சைக்கோ கேரக்டர், அல்லது குழந்தை இல்லாத பிரச்னையை வச்சி பண்ற கூத்துன்னு தாங்க முடியலை, இதையெல்லாம் மாத்தவே மாட்டீங்களா?'' என்றதும் 'ஜிவ்'வென்று உஷ்ணமானவர் சிறிது நேரத்துக்குப் பிறகு அடங்கினார்.

''பஞ்சவர்ணகிளி' தொடர்ல நான்தான் முதன் முதலா ஒரு வக்கிரமான கேரக்டரைப் பயன்படுத்தினேன். அதையே எல்லோரும் ஃபாலோ பண்ண ஆரம்பிச்சுட்டாங்க; அப்புறம் திடீர் திடீர்னு கேரக்டர்களைச் சாகடிக்கிற நிலைமையும், மனசைப் பிழியறமாதிரி கண்ணீர்க் காட்சிகளும் வந்துட்டிருக்கு. இது மாறணும். 'மெட்டிஒலி' மங்களகரமான தொடர். 'தமிழ்க் கலா சாரத்தைப் பிரதிபலிக்கிற இனிமையான தொடர்'' என்றவரிடம், ''சார் ஆர்டிஸ்ட் ரெடி.'' என்று உதவியாளர் சொல்ல, வேக மாக எழுந்தார்.

''உங்க வீட்ல எப்ப 'மெட்டி ஒலி' கேட்கப் போகுது?'' என்றதும், மனிதர் அநியாயத்துக்கு வெட்கப்பட்டு 'கொஞ்ச நாளாகட்டுமே' என்றார் அவசரமாக.

— சலாம்ஜி




ஆல் டைம் கிளாசிக்ஸ் மாதிரி ஆகிவிட்ட முக்கோணக் காதல் கதையைத் தமிழகப் பின்னணியில் சொன்னால் போரடித்துவிடும் என்று பயந்து, மலேசிய மண்ணுக்குச் சுற்றுலா போகிறார்கள்.

மலேசியாவில் டிசைனராக வேலை செய்யும் மம்முட்டி, அங்கே ஐந்து நட்சத்திர ஹோட்டலில் கேட்டரராக வேலை செய்யும் அம்சவர்த்தனுக்குத் தனது அபார்ட்மெண்டில் அடைக்கலம் தருகிறார்.

இந்த ஜூனியரும் - சீனியரும், மலேசியத் தமிழ்ப் பெண் லீனாவை ஒரு தலையாய்க் காதலிக்கிறார்கள். காதலிப்பது ஒரே பெண்தான் என்று தெரியாத இருவரும், ஒரு கட்டத்தில் தைரியமாய்த் தங்கள் காதலை லீனாவிடம் சொல்கிறார்கள். அந்த மலேசிய மங்கையோ மம்முட்டியின் மணிப்பர்சுக்காக அவரை மணாளனாய்த் தேர்ந்தெடுக்க... ஜூனியரும் சீனியரும் விழித்துக் கொண்டார்களா என்பதை, மூச்சு வாங்க வாங்க, நீட்டி முழக்கிச் சொல்கிறார் இயக்குனர்.

'முதிர் கன்னன்' பாத்திரம் என்றால் மம்முட்டிக்கு அல்வா சாப்பிடுவது போல அத்தனை இஷ்டம் போலும். தமது சட்டையில் எதிர்பாராமல் பட்ட லிப்ஸ்டிக் முத்திரையைப் புது டிசைன் என்று சொல்லி, வெட்கமும் காதலுமாய்ச் சமாளிக்கும் மம்முட்டி, இயல்பாக உணர்ச்சிகளைக் கொட்டுகிறார்.

மம்முட்டிக்கு இணையான நடிப்பு என்று சொல்லத்தக்க வகையில் அம்சவர்த்தன் நடிப்பிலும் இயல்பின் ஆட்சி.

முக்கால்வாசிப் படத்திற்குப் பிறகு நாயகி லீனா 'பணமோகினி' எனப் புதுக்கதை விடுவது எடுபடவில்லை.

ஏழை சமையல்காரரின் மகனான அம்சவர்த்தனுக்கு மலேசியாவில் எப்படி வேலை கிடைத்தது? என்ற சின்ன ப்ளாஷ் பேக், கவிதை!

பிழைப்புத் தேடி மலேசியாவிற்குப் புலம் பெயர்ந்த தமிழர்களின் பிரச்னைகளைக் கொஞ்சமாவது பயன்படுத்திக் கொண்டிருந்தால் திரைக்கதை, காட்சி அமைப்புகள் இரண்டுக்கும் 'டானிக்' மாதிரி ஆகியிருக்கும்.

டைட்டில் இசையோடுத் தூங்கிப் போகிறார் யுவன். டி.ராஜாவின் பனிச் ஒளிப்பதிவும் பிரசன்னகுமாரின் வசனங்களும் நெத்தியடி, படத்தின் முடிவைப் போல.

- விஷுவல்தாசன்

● ஆவரெஜ்

# காற்றில் கலந்த ஞாபகங்கள்...

இலக்கியத்துக்கும் சங்கீதத்துக்கும் வானொலி செய்துள்ள சேவைக்கு ஈடுஇணை யில்லை. எத்தனை எழுத்தாளர்களை உருவாக்கியிருக்கிறது அது! இன்றுள்ள புகழ்பெற்ற எழுத்தாளர்களில் பலரும் தொடக்கத்தில் வானொலியால் ஊக்குவிக்கப்பட்டவர்கள் தான். அடக்கமாக, தன்னைப் பற்றி எந்தத் தம்பட்டமும் அடித்துக் கொள்ளாமல் நல்லிலக்கியத்திற்காகத் தொடர்ந்து குரல் கொடுத்து வருகிறது அது.

வானொலிக்காக எழுதிப் பழகிய எழுத்தாளர்களுக்கு, எழுத்தில் ஒரு கண்ணியம் வந்து படிந்து விடும். வானொலியின் விதிகள் அப்படி. ஆபாசமாக ஒரு வார்த்தை இடம் பெறக் கூடாது. மத விரோதக் கருத்துகள் வரக் கூடாது. அரசியல் கட்சிச் சார்புகள் இருக்கக் கூடாது.

நானும் சென்னை வானொலியில் கதை, கட்டுரை, கவிதை என்று நிறையப் படைப்புகளை வாசித்திருக்கிறேன். 'கண்ட பேட்டிகள், கொடுத்த பேட்டிகள்' என்றும் பல. வானொலி நடத்திய தேசிய ஒருமைப் பாட்டுக் கவிதைப் போட்டியில் கலந்து கொண்டேன். 'வந்தே மாதரம் வந்தே மாதரம் ஒன்றே பாரதம் எனப்பாடு, இந்தியத் தாயின் ஆலயத்தினிலே ஒற்றுமைதானே வழிபாடு!' என்று தொடங்கும் அந்தப் பாடலுக்கு முதல் பரிசு கொடுத்ததோடு மட்டுமல்ல, அந்தப் பாடலை ராஜ்குமார் பாரதியின் இனிய குரலில் சென்னை கலைவாணர் அரங்கில் பாடவைத்து என்னைப் பெருமைப் படுத்தியது வானொலி.

தி. ஜானகிராமன், அகிலன், மீ.ப. சோமு எனப் பற்பல இலக்கியவாதிகள் பணிபுரிந்த இடம். மறக்க முடியாத பல உயர்ந்த மனிதர்களைச் சந்திக்கும் வாய்ப்பு வானொலி மூலம்தான் எனக்குக் கிடைத்தது.

சென்னை, கோவை, புதுவை, மதுரை என எல்லாத் தமிழ் வானொலி நிலையங்களும் சேர்ந்து நாடக விழா நடத்தும் வழக்கம் உண்டு. ஒருமுறை அப்படி நடந்த விழா நாடகங்கள் பற்றிக் கலந்துரையாட மதுரைக்கு அழைக்கப் பட்டிருந்தேன். பேராசிரியர் வண்ணமுத்து, நான், வானொலி முன்னாள் இயக்குநர் கே.பி.எஸ். ஹமீத் மூவரும் அரைமணி கலந்துரையாடினோம். நிகழ்ச்சிப் பதிவு முடிந்ததும், செந்தாமரை என்ற பெயரில் கவிதைகள் எழுதும் ஹமீத் என்னை அன்போடு பார்த்தார். நான் பிரியம் மிகுந்த அவர் கரங்களைப் பற்றி விடைபெற்றேன். "நான் யார் என உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார் அவர். "சொல்லுங்கள். தெரிந்து கொள்கிறேன்" என்றேன் ஆர்வத்தோடு. "என் தந்தையார்தான் செய்குதம்பிப் பாவலர்!" என்றார் அவர். என் ஆச்சரியத்திற்கும் மகிழ்ச்சிக்கும் அளவே இல்லை.



* அகிலன்



• ராஜ்குமார் பாரதி

காலஞ்சென்ற செய்குதம்பிப் பாவலர்தான் எப்பேர்ப்பட்ட அரிய சாதனையாளர்! கணிப்பொறி இல்லாத காலத்தில் வாழ்ந்த மனிதக் 'கணிப்பொறி' அவர். அவரது 'மவுசை' இன்று சரிவர உணர்பவர்கள் இல்லையே! அவர் விரல் நுனியில் தமிழிலக்கிய விவரங்கள் கொட்டிக் கிடந்தன. நூறு செயல்களை ஒரே நேரத்தில் செய்யும் சதாவதானக் கலையில் பேராற்றல் பெற்றவர். ஒருமுறை சதாவதானத்தின் இடையே அந்த இஸ்லாமியக் கவிஞரை நோக்கி 'துருக்கனுக்கு ராமன் துணை' என்று ஒரு குறும்பான ஈற்றடி கொடுத்து வெண்பா பாடச் சொல்லி விட்டார்கள்.

அசரவில்லை அவர். 'சத்-துருக்கனுக்கு' ராமன் துணை என்று வருகிற மாதிரி அமைத்து வெண்பா பாடி இரு மதத்தவரையும் மனம் மகிழச் செய்தார்.

ஹமீத் தம் தந்தையாரைப் பற்றி இது போன்ற இன்னும் பல சுவாரஸ்யமான செய்தி களைச் சொல்லக் கேட்டு மகிழும் பேறு அன்று வானொலியால் எனக்குக் கிடைத்தது.

மலையாளத்தைத் தாய்மொழியாகக் கொண்ட தமிழ் எழுத்



• ஹமீத்



• அரசு மணிமேகலை

தாளரான சி.ஏ. பாலனை வானொலிக்காகப் பேட்டி கண்டேன். 'தூக்கு மரத்தின் நிழலில்' என்ற புகழ்பெற்ற சுயசரிதை நூலை எழுதிய பொதுவுடைமைவாதி. 'தமிழ், மலையாளம் ஆகிய இரு மொழிகளில் எந்த மொழியை நீங்கள் அதிகம் நேசிக்கிறீர்கள்?' என்ற கேள்வியைத் தம்மிடம் கேட்குமாறு அவரே கேட்டுக் கொண்டார். அதன்படி கேட் கப்பட்ட கேள்விக்கு அவர் சொன்ன பதில் : ''சந்தேகமென்ன? மலையாளத்தை விடவும் தமிழைத்தான் அதிகம் மதிக்கிறேன், நேசிக் கிறேன். தற்கால இலக்கியம் மலையாளத்தில் உள்ளதை விடவும் தமிழில்தான் அதிகம் வளர்ந்திருக்கிறது!'' பொதுவாக நிலவும் கருத்துக்கு மாறுபட்ட அவருடைய இந்தக் கருத்து வானொலியில் அப்படியே ஒலி பரப்பாயிற்று.

வானொலி அறிவிப்பாளருக்கான எழுத்துத் தேர்வு நடைபெற்றது. அந்த விடைத் தாள்களைத் திருத்தும் பணியை, நிலையத் திற்கே சென்று நானும் காலஞ்சென்ற சகோதரி அரசு மணிமேகலையும் மேற்கொண்டோம். கேட்கப்பட்டவற்றில் ஒரு வினா : 'பதி னெண்கீழ்க் கணக்கு - சிறுகுறிப்பு வரைக. ஒருவர் 'அது ஒரு வகையான அல்ஜீப்ரா!' என்று எழுதியிருந்த விடையை நாங்கள் ரசித்துச் சிரித்தோம். இந்தக் 'கணக்கில்' போனால் தமிழ் என்ன ஆகும்? 'தமிழ் வாழ்க!' என்று சொல்லும் வெற்று ஆரவார அரசியல் கோஷங்களால் மட்டுமே தமிழ் எப்படி வாழும்? 'தமிழைக் கருத்தூன்றிப் படிப்பவர் களால் மட்டும்தான் தமிழ் வாழ முடியும் என்ற உண்மையை நம் மக்களுக்கு எப்படிப் புரியவைப்பது?' என்று உணர்ச்சிவசப்பட்டுக் கேட்டார் தமிழ்ப் பேராசிரியை அரசு மணி மேகலை.

வானொலியின் சிறப்பான பகுதிகளில் ஒன்று புதினப் பக்கங்கள். ஒரு சிறந்த நாவலை நாடக பாணியில் சுடுபட்டு வாசிக்கிறார்கள். தற்கால இலக்கிய அன்பர்களுக்குப் பரம சுகமான ஒரு பகுதி அது. கல்கியின் அலை ஓசை நாவல் அந்தப் பகுதியில் முழுமை யாக வாசிக்கப்பட்டது. நாவல் வாசிப்பு நிறைவடைந்ததும் அந்த நாவல் பற்றி ஒரு கலந்துரையாடலும் இடம்பெற்றது. கல்கியின் தீவிர ரசிகனான நானும் கல்கியின் புதல்வர் கி. ராஜேந்திரனும் உரையாடினோம். தந்தை யைப் பற்றிய தூய நினைவுகளில் ஆழ்ந்து அவர் புதல்வர் பேசிய பேச்சு நெஞ்சைத் தொட்ட ஆத்மார்த்தமான பேச்சு. நான், எழுத் தாளர் வண்ணநிலவன், கல்கியைப் பற்றிச் சொன்ன ஓர் அபிப்ராயத்தை எடுத்துச் சொன் னேன். 'தமிழில் கல்கியின் எழுத்து மட்டும் சங்கீதம் மாதிரி. சங்கீதத்தைத் திரும்பத் திரும் பக் கேட்கிற மாதிரி கல்கியின் எழுத்தை மட் டும்தான் திரும்பத் திரும்ப வாசிக்கலாம்' என்று எழுதியிருந்தார் அவர்.

அந்தக் கருத்துத்தான் எத்தனை முறை மறுபடி மறுபடி நிருபணமாகிறது! வற்றாத ஜீவநதி போல கல்கியின் எழுத்து, கல்கி பத்திரிகையின் நிராத பக்கங்களில் ஓடிக் கொண்டே இருக்கிறது. வாசகர்கள் அந்த ஜீவநதியில் குளித்துக் குளித்துப் புத்துணர்ச்சி பெறுகிறார்கள்.

'கல்கி எழுத்துக்கு மணியம் படம் வரைந் தார். பிறகு அவரது செல்வன் வரைந்தார். இப்போது சரித்திர வாசனையுடன் வரையும் பத்மவாசனையும் பார்த்துக் கொண்டிருக் கிறோம். பத்மவாசனது கொள்ளுப் பேரனும் இதே கல்கிக்குப் படம் வரையக்கூடும். இப் போதைய கல்கி வாசகர்களின் கொள்ளுப் பேரன்கள் அப்போது பேரன்போடு கல்கி எழுத்தை வாசித்துக் கொண்டிருப்பார்கள்' என்றேன் நான். 'கம்பராமாயணம், திருக்குறள், கல்கி, வானொலி இதெல்லாம் தமிழர்களின் நிரந்தர சுகங்கள் அல்லவா!' என்றார் வானொலியில் பணிபுரியும் என் நண்பர் என்னிடம். உண்மைதானே?

(தொடரும்)

திருப்பூர் கிருஷ்ணன்

எந்த வேலையை முதலில் செய்வது என்றே மகா குழப்பமாக உணர்ந்தான் அவன். நேற்று மாலை அவன் கைக்கு வந்த எல்லா கடிதங்களிலும் 'ஸ்பெஷல்' என்று போட்டிருந்தார் அதிகாரி. ஒரு சில கடிதங்களுக்குத் துணை அலுவலகத்திலிருந்து பதிலறிக்கை பெறவேண்டும். இதற்கு ஒரு வாரத்திற்கும் மேலாகிவிடும். அதற்கே ஒரு மேற்குறிப்பாணையும் அதைத் தொடர்ந்து ஒரு கடிதமும், பிறகு ஒரு நினைவூட்டுக் கடிதமும் எழுதியாக வேண்டும். இந்த லட்சணத்தில் 'ஸ்பெஷலாம்' ஸ்பெஷல்!

கடிதத்தை வாங்கியதுமே எரிச்சல் மேலிட்டது. இரண்டு நாட்கள் கடப்பதற்குள்ளாகவே அதிகாரி அவனை அழைத்து... 'கடிதங்களுக்குப் பதிலறிக்கை அனுப்பியாகிவிட்டதா...?' என்று கேட்பார்.

இதற்கிடையில் நேற்று மாலை துணை அதிகாரி அவனை அழைத்து ஆய்வறிக்கை உடனடியாகத் தயாரிக்கப் பணித்தார். இது அவன் வேலையல்ல. ஏற்கெனவே இது குறித்து துணை அதிகாரியிடம் வாக்குவாதம் செய்திடாமல், 'செய்ய முடியாது. இது என் வேலையல்ல..' என்று மறுத்திருக்கிறான்' வருத்தத்துடன்.

"அப்படியெல்லாம் சொல்லாதீங்க. எல்லா வேலையும் எல்லாரும் செய்தாகணும்..." என்று அவர் கடிந்துகொண்டார். நாளை அதிகாரி ஆகக் கூடியவரிடம் முறைத்துக் கொள்ள வேண்டாம் என்று பணிந்துபோனான் வழக்கம் போல.

ஏற்கெனவே முத்துக்குமார் இவனிடம் சொல்லியிருந்தார்: "நல்ல வேலை செய்யறவரை இளிச்சவாயன் ஆக்கிருவாறுங்க. நைசா எல்லா வேலையையும் நம்ம தலைல கட்டிருவாறுங்க. நா அப்படித்தான் கொஞ்ச நாளா மாட்டிட்டு முழிச்சேன். நீங்களும் அப்படி ஆயிறாதீங்க..."

இது ஓர் எச்சரிக்கையாகப் பட்டது. யார் எதைச் சொன்னாலும் மறுத்துப் பழக்கமில்லை அவனுக்கு - வீட்டிலும் சரி - அலுவலகத்திலும் சரி. சிறு வயது முதலே அப்பா அவனை அப்படிப் பழக்கப்படுத்தியிருந்தார். மிக நல்ல பழக்கமாகத் தெரிந்தது. இப்போது அவனை வாட்டிக்கொண்டிருக்கிறது.

திடீரென்று அதிகாரி கூப்பிடுவார். யாருடைய பேப்பரையெல்லாமோ இவனிடம் கொடுத்து "கொஞ்சம் பாருங்க.." என்பார். அதிகாரி செய்யச் சொல்லும்போது முடியாது என்று சொல்ல முடியுமா... என்ன? தலையாட்டிக்கொண்டு பேப்பரை வாங்கி வந்து, மாங்கு... மாங்கு... என்று செய்து முடிப்பான். அப்படியும் ஒரு நல்ல பெயர் உண்டா...?

சின்னத் தவறு ஏதும் ஆகிவிட்டால் போதும் போட்டு காய்ச்சி விடுவார் - நாளெல்லாம் வருத்தப் பட்டுக்கொண்டிருக்கும் படியாக.

இவன் வேலை செய்வதைக் கண்ட 'பிரிவு அதிகாரி' மேலும் சில வேலைகளைக் கூடுதலாக இவனுக்கு ஒதுக்கினார். கோபப்படாமல் சிரித்துக்கொண்டே பணிச்சுமையை விளக்கி வருந்தினான்.

"ஒண்ணுமில்ல. சும்மா ரெக்கார்ட் பேப்பர் தான். ஃபைல் போட்டு வச்சாப் போதும்..." என்றார் அவன் பிரிவு அதிகாரி. 'சரி சார்..' என்று ஒப்புக்கொண்டதன் விளைவு ஒண்ணுமில்லாத ரெக்கார்டு பேப்பருக்கெல்லாம், பதிலறிக்கை பெற்று மாதந்தோறும் பக்கம் பக்கமாகத் தலைமை அலுவலகத்திற்குப் பதிலறிக்கைச் சமர்ப்பிக்கும்படி ஆகிவிட்டது. தாமதமானால் போதும் நேர்முகக் கடிதம் வருகிறது. அதுமட்டுமல்ல இதையொட்டி பணி முன்னேற்ற அறிக்கை தயாரிப்பதும் இவன் தலையில் விழுந்தது. 'அப்பாடா... விட்டது தொல்லை..' என்று தப்பித்துக்கொண்டான் சுரேஷ்குமார். இவனைப் பார்த்து நையாண்டியாகச் சிரிக்கவும் செய்கிறான் இப்போதும்.

'எல்லாம் என் தலையெழுத்து..' இப்படியாக நொந்துகொள்வதைத் தவிர வேறு எதுவும் செய்ய இயலாதவனாகிப்போனான் அவன்.

ஆய்வறிக்கைப் பணி, இன்று முழுக்கவும் செய்தால்தான் நிறைவுபெறும். இந்த 'ஸ்பெஷல்' கடிதங்களை என்ன செய்வது? குழம்பியவனாக உட்கார்ந்திருந்தவனை அதிகாரி அழைத்தார். இறுக்கம் கூடியவனாக அவர் அறைக்குள் நுழைந்தான். 'காலை வணக்கம்' கூறிக்கொண்டு.

கோப்பிலிருந்து ஒரு கடிதத்தை உருவி இவனிடம் நீட்டிய அதிகாரி, "ஏன் இத்தனை நாளா இதற்கான பதில் தாமதம்..? தலைமையிலிருந்து டி.ஓ. லெட்டர் வந்திருக்கு பாருங்க... இன்னிக்கே ரிப்ளை டெஸ்பேச் பண்ணுங்க..." என்றார். தலையாட்டிக் கொண்டு வந்தான். நல்லவேளை மூடு அவுட்டாகும்படியாக எதுவும் திட்டவில்லையே என்று ஆறுதலாக இருந்தது.

சிறிது நேரம் கழித்து துணை அதிகாரி அவனை அழைத்து, ஆய்வறிக்கை எந்த நிலையில் இருக்கிறது என்று விரட்டினார். பிரிவு

ஃபிர்தவ்ஸ் ராஜகுமாரன்

வாது.

பா ரதியைப் படிக்கும்போது ரௌத்திரம் பழகும் ஆசை வந்தது. ஒருமுறை அலுவலகத்தில் வெகுண்டபோது எல்லோரும் சிரித்தார்கள். அவனின் கோபம் எல்லோருக்கும் நகைச் சுவையாகப்பட்டதில் அவமானப்பட்டதைப் போல உணர்ந்தான். 'இதுக்குத்தான் மூடிக்கிட்டு இருக்கணும்ங்கறது. உன்னை எவன்டா கோபப்படச் சொன்னது..?''

மாலை ஐந்து மணிக்கும் முன்பாக சனி, ஞாயிறு இரண்டு நாட்களுக்கு 'டேர்ன் டியூட்டி' அவசரப்பணி நிமித்தமாகப் போட்டிருப்பதாகச் சொல்லி ரிஜிஸ்டரில் கையெழுத்து வாங்கினான் ரமணி. அப்போதுதான் இன்று வெள்ளிக்கிழமை என்பதே ஞாபகத்தில் வந்தது அவனுக்கு. சரி பதற்றமில்லாமல் அவசர வேலைகளை முடிக்கலாம்.

இரவு எட்டு மணிக்கும் மேலானது ஆய்வறிக்கை முடிக்கப்படும் போது.

வீடு வந்தவுடன், "என்னங்க நாளைக்குக் கடைவீதி போலாமில்ல..." என்றாள் மனைவி.

''கடைவீதிக்கா...எதுக்கு...?'' என்றான் மேலும் குழப்பமுற்றவனாகவும், திடுக்கிட்டவனாகவும்.

"எங்க குடும்ப காரியம்னாலே உங்களுக்கு மறந்து போயிருமே...?" என்றாள் கிண்டலுடன் எரிச்சல் மேலிட்டவளாக.

அவன் எதுவும் புரிபடாதவனாக, அவளையே பார்த்துக்கொண்டிருக்க _

''எங்க மாமா பொண்ணு கல்யாணம் ஞாயித்துக்கிழமை. ஞாபகமிருக்கா...? அன்பளிப்பு பொருள் வாங்க கடைவீதி போணும்னு சொல்லியிருந்தேனே...?" என்றாள் கோபமுடன்.

"ரெண்டு நாளுக்கு டியூட்டி போட்டிருக்காங்க..." என்றான் மெல்லிய குரலில்.

"அப்பவே நெனைச்சேன்; இப்படி எதாச்சும் வேணும்னே பண்ணுவீங்கன்னு.. எங்க குடும்பத்துக்கு என்ன செஞ்சிருக்கீங்க..? உங்க வீட்டுக் காரியம்னா, விசேஷம்னா மறப்பீங்களா?"

"ஏன் இப்படிப் பிரிச்சுப் பேசுறே...?"

"யாரு... நானா...? கேட்டுவிட்டு அவள் இளக்காரமாகச் சிரித்தாள்.

சட்டென்று அவனுக்குக் கோபம் பொங்கியது. அவனே எதிர்பார்க்கவில்லை இதை! என்ன...ஏது... என்று அவன் உணரும் முன்பாகவே, "என்னடி! உங்களுக்கு என்னைக் கண்டா அவ்வளவு எளக்காரம்...?" என்றவாறு அவள் கன்னத்தில் 'பளார்' என்று அறைந்தான். அவன் வாழ்க்கையில் மறக்க முடியாத கோபமாகிப் போனது அது. ○



''இப்பல்லாம் பையனை 'தண்டச்சோறு'ன்னு திட்ட முடியலை...''

''ஏன்?''

''உடனே கோயிலுக்குப் போயிடறான்!''

— மங்கை

அதிகாரி ஒரு வேலையைக் கொடுத்து முடிக்கச் சொன்னார்.

"ஏற்கெனவே அவசர வேலை நிறைய இருக்குன்னு சொல்லித் தொலைக்க வேண்டியது தானடா... சரியான இவ..டா...நீ" அவனை அவனே திட்டிக்கொண்டான். அவனை யாரும் குறை சொல்லிவிடக்கூடாது. தப்பாக எண்ணிவிடக்கூடாது. அவன் பிம்பம் தகர்ந்து விடக்கூடாது.. என்பதில் உஷாராகவே இருந்தான். எங்கும் எப்போதும் எல்லோரும் அவனைப் பாராட்டிக் கொண்டிருக்க வேண்டும். நல்லவன், வல்லவன் என்று புகழ்பாடிக் கொண்டிருக்க வேண்டும். இதற்காகவே யார் எதைச் சொன்னாலும் மறுப்பே தெரிவிக்க மாட்டான். யாருடைய மனமும் புண்படும் படியாக ஒரு சொல்கூட சொல்லிவிடமாட்டான் சொன்னதில்லை என்பதுதான் நிஜம்.

யாராவது கிண்டல் செய்து பேசுவார்கள் எதற்காகவாவது. அதற்குக் கோபப்படாமல் சிரிப்பது போல் காட்டிக்கொள்வான்.

"ஏம்ப்பா! இப்படிப் பேசுறான் உன்னை. சிரிச்சுட்டுப் பேசாமயிருக்கியே...?" உசுப்பேற்றுவார்கள்.

"சொல்லிட்டுப் போறான் போ. இதனால அவனுக்கு என்ன கெடச்சுறப்போவுது..? இல்ல எனக்குத்தான் ஏதாச்சும் பாதிப்பா..? ஏன் வெட்டிப் பொல்லாப்பு...?'' என்பான் சிரித்த



சைதைத் தொகுதிக்கு வேட்பாளராக அறிவித்த அடுத்த நிமிடத்திலிருந்து, ஊழியர் கூட்டம், தொண்டர் சந்திப்பு, தொகுதி உலா என்று பிஸியாகிவிட்டார் நடிகர் ராதாரவி.

"சைதை தொகுதியையொட்டியுள்ள தேனாம் பேட்டையில்தான் குடியிருக்கிறேன். ராயப் பேட்டை புதுக்கல்லூரியில் படிக்கும்போது, கிண்டி என்ஜினீயரிங் கல்லூரிக்குப் பல போட்டிகளில் கலந்து கொள்ளச் செல்லுவேன். அப்போது சைதையில் உள்ள இளங்காளியம்மன் கோயிலில் தான் கும்பிட்டு விட்டுப் போவேன். மற்றபடி சைதை என்றால் மீன் ஞாபகம்தான் வருகிறது. ஞாயிறு அன்று சைதை மார்க்கெட்டில் நல்ல விரால் மீன் கிடைக்கும். சில சமயம் நானும் சென்று வாங்கி வருவேன்" என்றார் ராதா ரவி.

எம்.ஆர். ராதா குடும்பத்தில் தேர்தலில் நிற்கும் முதல் நபர் ராதா ரவிதானாம்! "அப்பா பழுத்த பகுத்தறிவுவாதியாக இருந் தாலும் தீவிர அரசியலில் அவர் ஈடுபட்டது கிடையாது. எங்கள் குடும்பத்துக்குப் பெரிய வாய்ப்பை புரட்சித் தலைவி கொடுத்திருக்கிறார்" என்றார் ராதா ரவி.

தனக்குச் சீட்டு கிடைக்கும் என்று எதிர்பார்த்திருந்தார் சைதை துரைசாமி. "கவலைப்படாதீங்க. நல்லா பண்ணுங்க. எதிர்காலத்தில் பார்த்துக் கொள்ளலாம்" என்று அவரைச் சமாதானப் படுத்தினாராம் ஜெ.

# "சைதாப்பேட்டையில் மீன் வாங்குவேன்"

**- ராதா ரவி**

தி.மு.க சார்பில் நிறுத்தப்பட்டுள்ள மா. சுப்பிரமணியன் மண்ணின் மைந்தர். சைதைக் கிட்டுவின் சிஷ்யர். அவருக்கு உடல் நலமில்லாத நிலையில் ஸ்டாலினோடு நெருங்கிப் பழகும் வாய்ப் பைப் பெற்றவர்.

"தி.மு.க ஆட்சிக் காலத்தில் அரசு சார்பாகவும், மாநகராட்சி சார்பாகவும் பல நலத் திட்டங்களை நிறைவேற்றியிருக்கிறோம். மக்கள் அதற்காக எங்களைத் தொடர்ந்து ஆதரிப்பார்கள்" என்கிறார் மா. சுப்பிரமணியன். பெங்களூரில் சட்டப் படிப்பை முடித்தவர் இவர். 'மா.சு' என்று தொண்டர்களால் அழைக் கப்படும் இவரை வேட்பாளராக நிறுத்தியதில் கட்சி வட்டாரத்தில் உற்சாகம் கரை புரண்டு ஓடுகிறது.

"அது சரி... மா.சு! மேயர் மற்றும் கவுன்சிலர் தேர்தல்களில் ஆளும் கட்சி சார்பாக அராஜகம், அதிகார துஷ்பிரயோகம் நடந்ததே. அது போல் சைதையில் நடந்தால்...?"

"நடக்கவிட மாட்டோம்" என்று தலைவரே சொல்லியிருக்கிறார். இது தவிர இந்தத் தேர்தலை நடத்துவது மத்திய தேர்தல் கமிஷன். அராஜகம் நடந்தால் அதை எப்படி அடக்குவது என்று எங்கள் தொண்டர்களுக்குத் தெரியும்."

**- கௌசி**



• மா.சு

# பூஜ்ய சாதனை!

உலகக் கோப்பைப் பந்தயங்களில் ஒரு கோல் போடுவதே சாதனைதான். அப்படியிருக்க 1994ல் நடந்த போட்டிகளில் காமரூன்

இத்தாலியைச் சேர்ந்த ஒடொரினோ பரஸி என்பவர் கால்பந்து உலகிற்கு ஒரு பெரும் சேவை செய்திருக்கிறார். இரண்டாம் உலகப் போர் நடந்த காலகட்டத்தில் கால்பந்து உலகக் கோப்பையைப் பத்திரமாக வைத்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு அவருக்கு. அவர்தான் அப்போதைய உலக கால்பந்து கூட்டமைப்பின் உதவித் தலைவர். தனது பெரிய பெட்டி ஒன்றில் அந்தக் கோப்பையை வைத்து அதைத் தன் படுக்கைக்குக் கீழேயே வைத்துக் கொண்டு, எதிரிப் படைகள் அதைக் கைப்பற்ற முடியாத அளவுக்குப் பாதுகாத்திருக்கிறார் இவர்.

ஷேன் வார்ன் ஜெயித்திருக்கிறார். கிரிக்கெட் களத்தில் அல்ல. "ஹெரால்ட் சன்" என்ற ஆஸ்திரேலிய நாளிதழுக்கு எதிராகத் தொடுத்த வழக்கில். 'மேட்ச் ஃபிக்ஸிங்' பற்றி நீண்டதொரு கட்டுரையை வெளியிட்ட அந்த நாளிதழ், அதில் பெரிதாக ஷேன் வார்னின் புகைப்படத்தையும் பிரசுரித்திருந்தது. கட்டுரையில் தன்னைப் பற்றி எதுவும் குறிப்பிடவில்லை என்றாலும் தன் படத்தை அதில் சேர்த்தது தன் பெயருக்குக் களங்கம் ஏற்படுத்தும் முயற்சி தான் என்று வாதிட்டார் வார்ன். இதைத் தொடர்ந்து நீண்டதொரு மன்னிப்புக் கடிதத்தை வெளியிட்டிருக்கிறது அந்த நாளிதழ்.



"விளையாட்டுகளிலேயே தலைசிறந்தது கால்பந்துதான். இதில் எந்தத் தனிநபரும் தானாக ஜெயித்துவிட முடியாது. பீலே ஒரு பிரபலமான பெயராக இருக்கலாம். ஆனால் சரியான நேரத்தில் சக விளையாட்டு வீரர்கள் அவருக்குப் பந்தை அனுப்பவில்லையென்றால் பீலேவால் கோல்களைப் போட்டிருக்க முடியாது. அதே போல் பிரேசில் அணி பலமுறை வெற்றிக் கனிகளைப் பறித்திருக்கிறது என்றால் அதற்குக் காரணம் தான் மட்டுமே எல்லா கோல்களையும் போட முயற்சிக்க வேண்டும் என்று நினைக்காமல், பிறருக்கு கோல்போடும் சந்தர்ப்பம் நேர்ந்தபோது தயங்காமல் தன் அணியைச் சேர்ந்த அந்த நபர்களுக்கு பீலே பந்தை அனுப்பியிருக்கிறார் - இப்படி சமீபத்தில் வெளியான தமது நூல் ஒன்றில் கூறியிருப்பது... பிரபல கால்பந்து விளையாட்டு வீரர் பீலே!

• பீலே



அணிக்கு எதிராக விளையாடியபோது ரஷ்ய வீரர் ஓலெக் சலன்கோ ஒரு மாபெரும் சாதனையைப் புரிந்தார். அந்தப் போட்டி யில் அவர் போட்டது ஐந்து கோல்கள். இந்தச் சாதனையை அதற்கு முன்பும் இது வரையும் யாரும் எட்டியதில்லை.

பென்ட் ஹவுஸ் என்ற இதழ் ப்ளேபாய் வகையைச் சேர்ந்தது. இதில் இடுப்புக்கு மேல் எந்த உடையுமின்றி பிரபல டென் னிஸ் வீராங்கனை அன்னா கோர்னி கோவாவின் புகைப்படம் வெளியானது. இந்த ரஷ்ய வீராங்கனையின் ஏஜென் டான டேவிட் என்பவர் அது அன்னா வின் புகைப்படம் அல்ல என்று அறிவித் திருக்கிறார். யாருடைய உடலையோ அன்னாவின் தலையுடன் பொருத்திருக்





தொகுப்பு - குல்லூ

கிறார்களாம்! குறிப்பிட்ட பத்திரிகையின்மீது வழக் குத் தொடுக்கப்போகிறார்களாம். நிறைவான ஆட்டத் திறமை கொண்டவர் என்றாலும் குறைவான உடை களை அணிவதன் காரணமாகவே பொதுவாக அன்னா கோர்னிகோவா செய்திகளில் அதிகம் இடம் பிடித்திருக்கிறார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

சமீபத்தில் மாஸ்கோவில் நடைபெற்ற ஆறாவது உலக சிறு தூர நீச்சல் பந்தயங்களில் பலரது கவனத் தைக் கவர்ந்திருக்கிறார்கள் ஸ்வீடனைச் சேர்ந்த எம்மா இகெல்ஸ்ட்ரான் மற்றும் தெரஸா அல்ஷமர் என்ற வீராங்கனைகள். அந்தப் போட்டியில் அதிக பட்ச தங்கமெடல்களை (நான்கு) தெரஸா பெற்றார் என் றால் எம்மா வேறு வகையான சாதனையை நிகழ்த்தி யிருக்கிறார். ஐம்பது மீட்டர் பிரஸ்ட் ஸ்ட்ரோக் நீச்சல் போட்டியில் குறிப்பிட்ட தூரத்தை முப்பது நொடி களுக்கும் குறைவான நேரத்தில் கடந்தவர் என்ற உலக சாதனையைப் படைத்திருக்கிறார். 29.96 நொடி களில் ஐம்பது மீட்டரைத் தாண்டியிருக்கிறார் இவர்.

பிராட்மன் எடுத்த ரன்களை யும் தாண்டிச் சென்று டென் டுல்கர் சாதனை படைத்து விட்டது தெரிந்த விஷயம்தான். ஆனாலும் வேறொரு வித்தியாச மான விஷயத்திலும் இவர்களுக் கிடையே ஓர் ஒற்றுமை. ஒரே டெஸ்ட் மாட்ச்சில் ஒரு இன்னிங் ஸில் சதத்தைத் தாண்டிய ரன்களையும் மற்றொன்றில் பூஜ்ஜிய ரன்னும் எடுப்பது அரிதான விஷயம்! இப்படி இரு போட்டிகளில் நேர்ந்திருக்கிறது பிராட்மனுக்கும் டென்டுல் கருக்கும்.



# ஆனாலும் தேடுகிறேன்.

**வ**யாகராவுக்கு அடுத்தபடியா மேலை நாட்டைப் பிடிச்சுட்டிருக்கிற அப்செஷன் போடாக்ஸ் (botox). அழகுப் புரட்சி சாதனமாம் இது! முகத்துல விழற ஓல்ட் ஏஜ் சுருக்கங்கள், சிந்தனைக் கோடுகள் எல்லாத்தையும் அழிச்சுத் தள்ளிடுதாம் இந்த இன்ஜெக்ஷன். நம்ம உடம்புல விழற சுருக்கங்களுக்குக் காரணம் தசைகள்லேருந்து வெளிப்படற சில கெமிகல்ஸ் தானாம். போடாக்ஸ் போய் அந்த கெமிகல்ஸ் உற்பத்தியைத் தடுத்துடுதாம். ஆனா நடிக நடிகைங்க இந்த போடாக்ஸ் யூஸ் பண்றதுல ஒரு சிக்கல் இருக்காம் - கெமிகல் உற்பத்தியைத் தடை பண்ற இந்த மருந்து, தசைகளோட அசைவையும் கட்டுப்படுத்திடுதாம். அதனால ஃபேஸ்ல எக்ஸ்பிரஷன் காட்டற ஆற்றல் பாதிக்கப்படுதாம்.



★ ராது

இயற்கைக்கு விரோதமா ஒரு யுத்தம் நடத்தினா எப்பவுமே இந்த மாதிரி சிக்கல் உண்டுன்றதை இதன் மூலம் அறிக!

சில வாரங்கள் முன்புதான் அமெரிக்க அரசு இந்த மருந்துக்கு ஓ.கே. சொல்லியிருக்கு. ஆனா ஓ.கே. கிடைக்கறதுக்கு முந்தியே 1.6 மில்லியன் அமெரிக்கர்கள் போடாக்ஸ் இன்ஜெக்ஷன் போட்டுக்கிட்டாங்களாம்! இத்தனைக்கும் தலைவலி, ஃப்ளூ, வயிற்றுக் குமட்டல்னு இதுக்கு ஏகப்பட்ட சைட் எஃபக்ட்ஸ் உண்டு!

முதுமையை, இயற்கையான உடல் சேஞ்சஸ்ஸை எதிர்க்கறவங்களைப் பார்த்தா பாவமா இல்லே...! இங்கலீஷ்ல ஒரு அழகான வசனம் சொல்லுவாங்க - grow old gracefully, for the best is yet to come...

**த**ன்னோட லைஃப்ல வந்த மாறுதலை ரொம்ப கிரேஸ்ஃபுலா ஒத்துக்கிட்ட ஒரு ஆசாமி ராது. ரீசன்ட்டா ஸ்ரீகிருஷ்ண கான சபா இவருக்கு 'நாடக சூடாமணி'ன்னு பட்டம் கொடுத்தது.

சுமார் நாற்பது மேடை நாடகம் எழுதியிருக்கற ராது முதல்ல ஆக்டரா ஆகணும்ங்ற ஆசைலதான் எழுத ஆரம்பிச்சார். ஆனா ஒரு ஸ்டேஜ்ல நிர்வாகத்தைக் கவனிக்க ஆளில்லாம போகவே ஆக்டிங்கை விட்டுட்டு அட்மினிஸ்ட்ரேஷனுக்குப் போய்ட்டார். அதுவும் ஒருமுறை நாடகம் முடிஞ்ச பிறகு பணம் கொடுக்க வேண்டிய ஆளைத் தேடினா, அவர் ஜூட்! அப்புறம் எல்லா ஆர்டிஸ்டுக்கும் அன்னைக்கு ரிசர்வ் பாங்க்ல, தான் சுடச்சுட வாங்கி வந்த சம்பளத்துலேருந்து பேமென்ட் கொடுத்து செட்டில் பண்ணியிருக்கார்.

"ரிசர்வ் பாங்க்ல மாசம் ஒரு தடவைதான் சம்பளம்; ஆனா நாடகம் மன்த்லி ஃபோர், ஃபைவ் டைம்ஸ் நடத்த வேண்டியிருக்கே... அதனாலே நான் மேக் அப் போடற ஆசையை விட்டுட்டு மேடை நிர்வாகம் பார்த்துக்க ஆரம்பிச்சுட்டேன்''ன்னு ஜோக் அடிக்கிறார் ராது.

**ஒ**ரு ஜோக் கவிதை படிக்கறீங்களா...? டைட்டில் **வில்லங்கம்** :

*ராமன் காலத்தைவிட*

பரதன் காலத்திலேயே
ராம ராஜ்யம்
நடந்து வந்ததற்கு
பாதுகைகளே சாட்சி.

அந்த ஜோடியை
அயோத்திக்கே
திருப்பிவிட்ட
ராமனுக்குத் தெரியும்
தெற்கே வர
வெறுங்கால்களே உசிதம் -
சுக்ரீவ - விபீஷணாதிகள் மட்டுமன்றி
தலைவன் என்றதும்
கண்டவனெல்லாம் (I mean பார்த்தவன்)
காலில் வந்து விழுவானே என்று.

வில்லை
வைத்துக் கொண்டிருந்த ராமன்
ஒரு 'Will'-லையும்
வைத்துவிட்டுப் போயிருக்கலாம்,
எந்த இடம் யாருக்கு
என்பது என்றோ
தீர்ந்து விட்டிருக்கும்.

Willing-ஆ வேற யாரு இப்படியொரு கவிதை எழுதுவாங்க... வீ.விஜயராகவன்தான்!

**ஆ**ங்கில வழி தமிழாக்கமா ஒரிய மொழிக் கவிதைகள் நூல் ஒண்ணு வந்திருக்கு. ஒரிசா சாஹித்ய அகாடமி வெளியீடு. அஷ்வின் குமார் மித்ரா எடிடிங்ல தமிழ் டிரான்ஸ்லேஷன் இந்திரன் பண்ணிருக்கார். ஒரியா தெரியாததால நான் ரொம்ப சொல்றதுக்கில்லே... பட் ஒரிய சிந்தனையோட பவர் புரியுது. தமிழ் மொழிபெயர்ப்புல நிறைய ஆர்வம்; ஏராளமா தடுமாற்றம், அப்புறம் அச்சுப் பிழைகள்...! மனோரமா பிஸ்வல் மொஹா பாத்ரா கவிதையை ஒரு சாம்பிளுக்குப் படிக்கிறீங்களா..?

இப்போது சிறிது தானாக
வீடு
சோகம் கவிந்ததாக உள்ளது
ஒரு காலத்தில்
காதல் நிறைந்து வழிந்து
நம்பிக்கையின் தாமரையாக மாறும்.
தாமரையின் நறுமணம்
வீடு முழுதும் கமழும்
இப்போது
காற்றோ வெளிச்சமோ அற்று
வீட்டிற்குள் நிறைய தீவுகள் உள்ளன.
தோட்டத்தின் அழகை
மரங்கள் எடுத்துக் கொண்டுவிட்டன.
இப்போது வீடு
சோகமயமாய் உள்ளது.

**சோ**கம்லாம் வேணாம்பான்றவங்களுக்கு ஒரு ரொமான்ஸ் கவிதை :

சொல்லிவிட்டுத்தான்
போனாய்
ஆனாலும் தேடுகிறேன் ...
வீதி முனையிலும்
வீட்டின் அறையிலும்
உணவின் ருசியிலும்
உறங்கும் நிசியிலும்

'ஆகும் ஒரு வாரம்' என்றாய்
ஆனாலும் தேடுகிறேன் ...
அழைக்கும் மணியிலும்
ஒலிக்கும் இசையிலும்
தெறிக்கும் மொழியிலும்
வலிக்கும் அமைதியிலும்

'ஆகட்டும் போய்வா!'
என்றேன்
ஆனாலும் தேடுகிறேன் ...




• ஒரியா - ஆங்கிலம் - தமிழ்!

பெருகும் அன்பிலும்
சொரியும் விழியிலும்
பொங்கும் உணர்விலும்

தங்கும் நிறைவிலும்
கண்ணிமைபோல்
காக்கின்றாய்
ஆனாலும் தேடுகிறேன் ...
கன்னத்தில் முத்தமிட்ட
கணமதில் தொலைந்துபோன
உன்னில் என்னையும்
என்னில் உன்னையும்

இது டிரான்ஸ்லேஷன் இடையாது ஒரிஜினல் தமிழ்!

- சுமி

**வ**ங்கிக்கு வந்ததிலிருந்தே ஒருவித தவிப்பிலே இருந்தான் துரை. காரணம் அவனுக்கு வந்திருந்த காதல் கடிதம்.

முத்து முத்தான கையெழுத்தில் ஒரு கல்லூரிப் பெண் எழுதியிருந்தாள் இயல்பாகவே அமைதியான குணம் அவனுக்கு. சிரிப்பதில்கூட அவன் சிக்கனம்தான். அவனது இந்தக் குணமே இப்போது ஒரு காதலியைக் கொண்டு வந்திருக்கிறது.

மேற்படி விஷயத்தை வெளியே சொல்ல முடியாத தவிப்பில் நாள் முழுதும் இருந்தான். மாலை தன் அறைக்குத் திரும்பியதும் கதவைத் தாழ்ப் போட்டுக் கொண்டு மறுபடியும் படித்தான்.

*என் இனியவருக்கு,*

*உங்கள் ராஜ பார்வை என் மீது பட ஏங்கிக் கொண்டிருக்கிறேன். ஒருநாள் சாலையோரம் பஸ் ஸ்டாப்பில் உங்கள் நண்பர்கள் பெண்களைப் பற்றி அரட்டை அடித்துக்கொண்டிருக்க, நீங்கள் அமைதியாக ஏதோ புத்தகம் படித்துக்கொண்டிருந்ததை அங்கே இருந்த நான் கவனித்தேன். அப்போதே என் உள்ளத்தை உங்களிடம் பறி கொடுத்துவிட்டேன்.*

*....... என்னை நீங்கள் ஏற்றுக் கொள்வதாயிருந்தால் வரும் பிரதோஷ தினத்தன்று மாலை நேர பூஜைக்குச் சிவன் கோவிலுக்கு வரவும். நான் என்னை உங்களுக்கு அடையாளம் காட்டுகிறேன். தயவு செய்து என்னை ஏமாற்ற வேண்டாம்.*

*என்றும் உங்கள்*
*சரண்யா.*

**கீ**ழே வகுப்பு முகவரியைத் தந்திருந்தான்.

இப்போது மனத்தில் இனம் புரியாத மகிழ்ச்சி ஏற்பட்டது. ஆனால் பயமாகவும் உணர்ந்தான். இது சாத்தியமா? தைரியமாக இதில் இறங்கலாமா?



# கறுப்பு வெள்ளைக் கன

யோசித்துக்கொண்டிருந்த போது கதவு தட்டப்பட, திறந்தான். நண்பன் ரமேஷ் நின்றிருக்க, அவசரமாய்க் கடிதத்தை மறைத்தான்.

"என்னடா அது? மறைக்கறே... லவ் லெட்டரா...?"

''நெருங்கிய நண்பன் உன்னிடம் மறைப்பேனா... சும்மா ஒரு ஆர்வக் கோளாறு...'' எனக் கடிதத்தை ரமேஷிடம் காண்பித்தான்.

அவன் படித்துவிட்டு, ''மேட்டர் இன்ட்ரஸ்டிங்காதான் இருக்கு. முதல்லே இவ யாருன்னு தெரிஞ்சுக்கணும். இந்த துப்பறியும் வேலையெல்லாம் எங்கிட்டே விட்டுடு. ஆளைக் கண்டு பிடிச்சு, உனக்கும் பிடிச்சதுன்னா... அப்புறம்... ஓகே...கலர் கனவு தான்.''

துரையைத் தட்டிக் கொடுத்து நம்பிக்கை தந்தான்.

**வீ**ட்டுக்கு வந்ததும் தன் தங்கை ராஜியை அழைத்து விசாரித்தான் ரமேஷ்.

''ராஜி! உன்னோட படிக்கற பெண்களில் எத்தனை பேருக்குக் காதல் கடிதம் எழுத வரும்...?''

அதிர்ச்சியுடன் அண்ணனைப் பார்த்தாள் அவள்.

"என்னண்ணா... திடீர்னு எங்கிட்டே இப்படிக் கேட்கறே...?"

"சரண்யான்னு ஒருத்தி உன் வகுப்பில் படிக்கறாளா...?"

"அ...ஆமாம்... அவ யாருக்காவது...?"

''ஆமாம். மேன்ஷன்லே தங்கி இருக்கானே என் ஃப்ரண்ட் துரை. அவனுக்குத்தான் கடிதம் போட்டிருக்கா இந்தப் பொண்ணு. அவனோ பயந்த சுபாவம். இதைப் பார்த்துத் தவிச்சுக்கிட்டிருக்கான். உன் தோழியோட இந்தக் காதல் விஷயம் உனக்குத் தெரியுமா...?''

சற்று யோசித்தாள் ராஜி.

''எனக்கு இப்ப



ஞாபகம் வருதுண்ணா. போன வாரம் அவ நம்ம வீட்டுக்கு வந்திருந்தா. நீ நண்பர்களோட கேரம் ஆடிக் கிட்டிருந்தே. அவங்களிலே சிவப்பா, உயரமா இருந்தவரைக் காட்டிப் பெயர், முகவரி எல்லாம் கேட்டா...''

''ஸோ... நீதான் இதுக்குப் பிள்ளையார் சுழி போட்டிருக்கே...''

''ஐயோ... கொஞ்சம் பொறுமையா கேளுங்க. இங்கேதான் தப்பே நடந்திருக்கு. சரண்யாவை முதலில் கிண்டல் அடிச்ச நான், அவ திரும்பத் திரும்பக் கேட்டதும் குறும்புக்காக உண்மையான பெயரையும், எங்கே வேலை செய்யறார்ங் கறதையும் மாற்றிச் சொன்னேன். அதை நம்பி அவளும் இப்படிக் கடிதம் போடுவான்னு நான் நினைக்கல.''

''அப்ப அவ அடையாளம் காட்டினது இந்தத் துரை இல்லையா...?''

''இல்லேண்ணா... உன் கம்பெனியில் வேலை செய்யறாரே... வினோத்... அவரைப் பற்றித்தான் கேட்டா. அவரை இவள் பல முறை ஏற்கெனவே பார்த்திருந்தாலும் பேச சந்தர்ப்பம் கிடைக் கலையாம்.''

கோபம் பொத்துக்கொண்டு வந்தது ரமேஷுக்கு. ''எந்த விஷயத்தில்தான் விளையாடறதுன்னு வரைமுறை இல்லையா உனக்கு...?''

''சாரிண்ணா...'' என்றாள் கெஞ்சும் குரலில்.

''சே! உன் விளையாட்டுப் புத்தியாலே சம்பந்தமே இல்லாத ரெண்டு மனங்களுக்கு எவ்வளவு எதிர்பார்ப்பும், தவிப்பும் ஏற் பட்டிருக்குத் தெரியுமா...?''

இனியும் ஏதாவது பேசினால் அவள் அழுதுவிடுவாள் போலத் தோன்றியது. சலிப்புடன் அங்கிருந்து அகன்றான்.

இதைப் போய் எப்படி துரையிடம் சொல்வது? அவனைச் சந்திப்பதையே சில நாட்கள் தவிர்த்தான். விடுமுறை நாளில் துரை வீட்டுக்கே வந்துவிட, அவசரமாய் அவனை அழைத்துக்கொண்டு வெளியே வந்தான் ரமேஷ்.

கடற்கரையில் உலவிக் கொண்டிருந்த போது ஆர் வத்துடன் கேட்டான் துரை.

''என்னடா... ரமேஷ்... விசாரிச்சியா...?''

சற்றே கலக்கத்துடன் ஆரம்பித்தான் ரமேஷ்.

''உண்மையைச் சொன்னா நீ 'அப்செட்' ஆயிடமாட் டியே...''

''என்னடா புதிர் போடறே? பரவாயில்லை... சொல்லு...''

''என் தங்கையை விசாரிக்கச் சொன்னேன். அப்படியொரு பெண் அவ ஹாஸ்டலியோ, கல்லூரியிலோ இல்லையாம். இது யாரோ குறும்புக்காக எழுதியிருக்காங்கன்னு தோணுது...''

துரையின் கண்களைப் பார்க்கப் பிடிக்காமல் முகம் திருப்பிக்கொண்டான் ரமேஷ்.

''தாங்க்ஸ்டா... ரமேஷ்... மனசை அரிச்சுக்கிட்டிருந்த பிரச்னை தீர்ந்துபோச்சு...'' - அவன் உதடுகள் பேசினாலும் உள்ளக் குமுறலை, உணர முடிந்தது.

தான்கூட துரையை ஏமாற்றியதாகத்தான் தோன் றியது ரமேஷுக்கு. இருக் கட்டுமே!

அந்தக் கடிதம் தனக்கு வந்ததில்லை என்ற ஏமாற் றத்தைவிட, இப்போது தன் பதிலால் துரைக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தின் பாதிப்பு குறைவுதான் என எண்ணிக் கொண்டான் ரமேஷ். ○

**மானஸா**

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம் :** செவ்வாய் ராசிநாதன் இரண்டாமிடத்தில் இருக்கிறார். புதன், ராகு, சனி, சுக்ரன் ஆகியோரும் பலமாகத் திகழ்வதால், முக்கியமான காரியங்கள் நிறைவேறும். பெண்களால் ஆடவர்கள் அனுகூலமடைவார்கள். முஷ்ரஃப் போல முறுக்கிக் கொண்டு போனவர்கள் எல்லாம் வலிய வந்து கை குலுக்குவார்கள். பொருளாதார நிலையில் நல்ல அபிவிருத்தி ஏற்படும்.

**ரிஷபம் :** சுக்கிரன் ராசியில் ஆட்சி பெற்று செவ்வாய், சனி, புதனுடன் இருப்பதால், எதிர்பாராத அனுகூலமான பலன்கள் ஏற்படும். காவல் துறையினர் மீது ஜெயலலிதாவுக்கு ஏற்பட்டிருக்கும் திடீர்க் கரிசனம் போல, உங்கள் மீதும் கிரகங்களின் கனிவான பார்வை விழும். நண்பர்கள் வருகை நன்மை தரும். தடைப்பட்டிருந்த தெய்வீக காரியங்கள் நடைபெறும். குடும்பத்தில் ஒற்றுமை உயரும். மேலதிகாரிகளின் பாராட்டு கிடைக்கும்.

**மிதுனம் :** திருவாரூர் தேர் போல ஆடி அசைந்து வந்து கொண்டிருந்த யோக பலன்கள் எல்லாமே, மின்னல் வேகத்தில் வந்து சேரப் போகும் அம்சம் வந்தாச்சு. ராசிநாதன் புதன் 12ல் மறைந்து, செவ்வாய் சனி, ராகு ஆகியோருடன் உலவுவதாலும் சந்திரனும் 10ல் வார ஆரம்பத்தில் இருப்பதாலும், அம்மா மாயாவதி மாதிரி மகிழ்ச்சியிலே திளைப்பீங்க. எதிர்ப்புகள் மறையும். வாழ்க்கையில் முக்கியமான திருப்பங்கள் உண்டாகும்.

**கடகம் :** ரஜினி ஸார், திடீரென்று 'பாபாஜி' ஆனது போல, உங்கள் பெயரும் அந்தஸ்தும், புகழும் செல்வாக்கும் திடீரென்று கூடும். தன குடும்பஸ்தான அதிபதி 10ல் உச்ச நிலையில் சஞ்சாரம் செய்வதால், மிகவும் அனுகூலமான திருப்பங்கள் நேரும். தெய்வப் பணிகள் நடைபெறும். சுய தொழில் புரிவோர் மேன்மை அடைவர். சுபகாரியம், திருமணம் போன்ற முயற்சிகள் வெற்றியடையும். சொத்து சம்பந்தமாக இழுபறியில் கிடக்கும் விஷயங்கள் சட்டுபுட்டென்று முடிவதோடு, உங்களுக்குச் சாதகமாகவும் இருக்கும்.

**சிம்மம் :** சூரியன் ராசிநாதன் 9ல் உச்சம் பெற்று உலவுவதால், தெய்வ பலம் கூடியிருக்கும். தெய்வீக காரியங்களில் ஈடுபாடு ஏற்படும். குரு பலம் இருப்பதால், எவ்விதமான தடங்கலும் இடையூறும் ஏற்படாது. புதிய முயற்சிகள் வெற்றி தரும். பண விஷயத்திலும் ஜேபி நிரம்பி வழியும். குடும்பத்தில் அமைதியும் ஒற்றுமையும் நிலவும். இயந்திர சம்பந்தமான வியாபாரம் லாபம் கொழிக்கும். வெளிநாட்டுப் பயணங்கள், சோனியா காந்தி மெல்லும் 'பபிள்கம்' போல இழுத்தடித்து பிரச்னை செய்யும்.

**கன்னி :** ராசிநாதனாகிய புதன் 9ம் இடத்தில் கூட்டுக் கிரக சேர்க்கையோடு சஞ்சாரம் என்பதால் மனத்தில் தெளிவும் தெய்வ சிந்தனையும் உண்டாகும். கலை, கல்வி, எழுத்து சம்பந்தமான விஷயங்களில் பெயர், புகழ் உண்டாகும். 8ல் சூரியன் 9ல் கூட்டு கிரகச் சேர்க்கை என்பதால் உத்தியோகஸ்தர்கள் தத்தம் கடமைகளைச் செய்து வருவது நல்லது. பஸ், ரயில் முன்பதிவுக்காகக் கால் கடுக்கக் காத்துக் கிடக்கும் பயணிகள்போல, நீங்களும் சுபச் செய்திகளுக்காகக் காத்திருக்க வேண்டும்.

**துலாம் :** உற்சாகமான நிலையில் ஆரம்பிக்கும் இந்த வாரம், அதே டெம்போவில் உங்களை உயர்த்திக் கொண்டே சென்று அனைத்தையும் மகிழ்ச்சிக்குரிய தாக்கும். எதிரிகள் மனம் மாறி உறவு கொண்டாடும் நிலை உண்டாகும். புதிய உத்தியோகம், சுய தொழில், கூட்டுத் தொழில் போன்றவை லாபம் தரும். போர்வெல் லாரி முதலாளிகளுக்கு இணையாக எக்கச்சக்க பணம் பார்க்கலாம்.

**விருச்சிகம் :** இதுவரை இருந்த சிக்கல்கள் எல்லாமே தீர்ந்து அமைதியும் இனிமையும் நிறைந்த சூழல் உருவாகும். 7ல் கூட்டுக் கிரக சேர்க்கை என்பதால் வாழ்க்கைத் துணை நலம் கவனம் தேவை. பயணத்தில் பாதுகாப்பாக இருத்தல் அவசியம். பணம், கொடுக்கல் வாங்கல் ஸ்பெகுலேஷன் வகையில் விழிப்புடன் இருக்க வேண்டும். பங்கு மார்க்கெட்டில் எதிர்பாராத விளைவு ஏற்படலாம். 10ம் அதிபதி சூரியன் 6ல் உச்சம் பெற்று உலவுவ தால் மனத்தில் துணிவும் தன்னம்பிக்கையும் கூடி வரும்.

**தனுசு :** இதுவரை இருந்து வந்த மறைமுக தொல்லை களும், எதிர்ப்புகளும் ஓடி மறையும். அலுவலகப் பணியாளர்கள், உத்தியோகஸ்தர்கள் நிலை உயரும். மேலதிகாரிகளின் பாராட்டு கிடைக்கும். 7ம் இடத்தில் குரு அமர்ந்து குரு பலம் நிறைந்து இருப்பதால், குடும்பத் தில் ஒற்றுமை சிறந்தோங்கும். சுப காரியங்கள் கூடி வரும். மனஸ்தாபத்தில் பிரிந்திருந்த உறவுகள் ஒன்று சேருவார்கள்.

**மகரம் :** ராசிநாதன் இருவாளர் சனி பகவான், பூர்வ புண்ணியஸ்தானத்தில் கூட்டுக் கிரக சேர்க்கையுடன் சஞ்சாரம் என்பதால், பலவிதமான இடையூறுகள் ஏற் படும். அத்தனை சோதனைகளையும் தாங்கிக் கொண்டு, தெய்வ பலத்தால் முன்னேறுவீர்கள். மனத்தை இம்சை செய்து கொண்டிருந்த பீதி, பயம் எல்லாம் நீங்கி, மன அமைதி கிடைக்கும். நண்பர்கள், உறவினர்கள் பக்கபல மாக இருந்து உதவுவார்கள்.

**கும்பம் :** ராசிநாதனாகிய சனி பகவான், சுகஸ்தானத் தில் கூட்டுக் கிரக சேர்க்கையுடன் சஞ்சாரம் செய்வதால், உடல் ஆரோக்கியத்தில் அசௌகரியம் ஏற்படும். எடுத்த காரியங்களில் ' ஸ்பீட் பிரேகர் ' போடுவதுபோல ஏதாவது தடங்கள் ஏற்படும். நண்பர்கள், நெருங்கிய உறவினர்கள் உதவ முன் வருவார்கள். மக்கள் நலம் சீராக இருக்கும். கணவன் - மனைவிக்குள் அன்பு இழையோடும்.

**மீனம் :** காவிரி நீர்ப்பாசனப் பகுதி காய்ந்ததுபோல, உங்கள் பொருளாதார நிலைமையும் வறட்சியுடன் இருக் கும். என்றாலும் அவசரத் தேவைக்கு எங்கிருந்தாவது பணம் வந்து உதவி செய்யும். எதிர்பாராத பயணத்துக்குத் தயாராக இருங்க. ஆதாயமுள்ள நல்ல பயணமாகத்தான் அது அமையும் என்பதால் பயப்பட வேண்டாம். புதிய முயற்சிகள் வெற்றி தரும். பெண்களுக்கு இனிமையான வாரம். குடும்பத்தில் ஒற்றுமையும் குதூகலமும் நிறைந் திருக்கும். குடும்ப நலம் சீராக இருக்கும்.



**சிம்ம ராசிக்காரரான நடிகை மோனிகா, புதிய முயற்சிகளில் வெற்றி பெறுவார்.**

**அக்னி சர்மா பக்கம்**

**மே 8 முதல் 14 வரை**



# ராஜ்ஜியம்

விஜய்காந்தின் அரசியல் வருகையை உறுதிப்படுத்தும் வகையில், மன்றக்கொடி, தொண்டர் படை அணிவகுப்பென்று, ஓர் அரசியல் கட்சியின் மாநில மாநாட்டுப் பேரணி போல தொடங்குகிறது படம்!

மாநிலக் காவல் துறையை அடிக்கடி பயன்படுத்திக் கொள்ளும் விஜய்காந்த், ஒரு தனியார் துப்பறியும் நிறுவனத்தை நடத்துகிறார். கூடுதலாக இவரின் ஜோதி, சமூக சேவை நிறுவனம். சென்னைக்குப் பிழைப்புத் தேடி வந்திறங்கும் பட்டதாரிகள், மஞ்சள் பை மனிதர்கள் எல்லோரையும், ரயில்வே ஸ்டேஷனிலேயே மடக்கி உடனடியாக வேலைக்கு ஏற்பாடு செய்வது ஆ...ச்சரியம்!

அப்புறம் கதையென்று பார்த்தால் விஜய்காந்துக்கு உயிருக்குயிராய் ஒரு ஊமைத் தம்பி. அவரின் சாவுக்கு வில்லன் காரணமென்று தெரிந்ததும் அவரை நொங்கு நொங்கென்று நொங்கி, சட்டத்தின் கைகளில் ஒப்படைத்துவிட்டு, விருதை வாங்கிக் குத்திக் கொள்கிறார். படம் பார்க்க வந்த அவரது ரசிகர்கள் ஜென்ம சாபல்யம் அடைந்த மாதிரி, தியேட்டரை விட்டு வெளியே வருகிறார்கள்.

வாய் பேச முடியாத இளைஞனாக, மழலை மொழி பேசி, உருக வைக்கும் மலையாள நடிகர் திலீப் தனித்துத் தெரிகிறார், தமிழுக்கு நல்ல வரவு!

ஹீரோவுக்கு முக்கால்வாசிப் படம் வரைத் தண்ணீர் காட்டி, விஜய்காந்த் ரசிகர்களை வெறுப்பேற்றும் வில்லன் ஆளுநராக இன்னொரு மலையாள நடிகர் முரளி. இவர் அமைதியாய் வில்லத்தனம் பண்ணும் ஸ்டைல் ரொம்பவே அமர்க்களம்.

ஷமிதா ஷெட்டி, பிரியங்கா திரிவேதி இருவருமே தமிழுக்கு எடுபடாத மும்பை அறிமுகங்கள்.

பரத்வாஜ் இசைதானா? என்று சந்தேகிக்கும்படி மனத்தில் பதிய மறுக்கிறது இசை. சூப்பர் சுப்பராயன் அமைத்திருக்கும் சூடான சண்டைக் காட்சிகளும், வடிவேலுவின் வார்த்தைஜால நகைச்சுவையும் ரசிகர்களை ரட்சிக்கும்.

— விஷுவல்தாசன்

• ஆவரேஜ்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

